சிகிச்சாரத்

இரண்டாம் பா

# வைத்தியசிந்தாமணி







இஃது

வைத்திய வித்வன்மணி

சி. கண்ணுசாமி பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டதை,

**B. இரத்தின நாயகர் & சன்ஸ்**

அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது.

சென்னை.

உ

கடவுள் துணை.

---

சிகிச்சாரத்நதீபம்

இரண்டாம் பாகமாகிய

# வைத்தியசிந்தாமணி

முதற்பதிப்பு

இஃது

ஆயுர்வேதத்தைக் கற்க விரும்பும் வித்தியார்த்திகளுக்குப்

பயன்படுமாறு சாஸ்திரயுக்தமாகவும்,

அனுபவபூர்வமாகவும்

வைத்திய வித்வன்மணி

சி. கண்ணுசாமி பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டதை,

**B. இரத்தின நாயகர் & சன்ஸ்**

அவர்களது

திருமகள்விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

---

ரிஜிஸ்தர்செய்தது.] 1927. [விலை ரூபா

# ஆக்கியோன் குறிப்பு

அறிவுப்பெருஞ் செல்வர்காள் !

சர்வமங்கள தயாபரனாகிய ஈஸ்வரன் தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவராசிகளுக்குள் இம்மானிட ஜென்மமே மிகச் சிறந்தது. இந்த ஜென்மம் எடுத்ததுமுதல் மரணம்வரையிலும் அனுபவிக்கத்தக்க சுகதுக்கங்களில் ரோகமென்பது மிகக் கொடியதும் இச்சரீரத்தை அழிப்பதற்கும் முதற்காரணமாய் நின்றது. இப்பெருங் குறையை தீர்ப்பான்வேண்டி ஆதியில் மேதாவிகளாக விருந்த ரிஷிகள், சித்தர்கள், இருடிகள் முதலானோர் பெருமுயற்சியால் தேவர்களின் மூலமாக இச்சரீரத்திற் கணுகிய ரோகங்களை நிவர்த்தி செய்து கொள்ளவும், தனக்கு வேண்டுமான காலம்வரையில் பழுதுபடாமல் இச்சரீரத்தை வைத்திருக்கவும் வேண்டிய யோகசாதனை காயகல்பம்முதலிய உபாயங்களை நன்குணர்ந்து ஆண்டு அனுபவித்ததுமல்லாமல் பல்லுயிரை இரக்ஷிக்கும் காருண்ணியத்தை முன்னிட்டு அறிவாளரைக் கூட்டிப் போதித்து ஏனையோர்க்கும் பயன்படுமாறு செய்துவந்தனர். இங்ஙனம் இவர்களால் ஏற்பட்ட நூல்களையெல்லாம் சீர்தூக்கி ஆராயுங்கால், இமயகிரிமலையை பீடமாகக் கொண்டு வடநாட்டில் சமஸ்கிருத பாஷையில் அந்நாட்டின் சிதோஷ்ண ஸ்திதிக்கும் ஆகாரத்திற்கும் ஏற்றவாறு நான்கு லக்ஷம் கிரந்தங்களும், அத்தகையே பொதிகைமலையைப் பீடமாகக்கொண்டு தென்னாட்டின் சிதோஷ்ண ஸ்திதிக்கும் ஆகாரத்திற்கும் ஏற்றவாறு நான்கு லக்ஷம் கிரந்தங்களும் தமிழில் செய்திருப்பதாக ஆதாரங்கள் ஏற்படுகின்றன.

இந்த நூல்களெல்லாம் இப்பரதகண்டத்தில் ஆங்கிலேய மகமதிய அரசாக்ஷிக்கு முன்னதாக இருந்த அரசர்களெல்லாரும் ஆமோதித்து பல மடங்களையும் அவிழ்தாலயங்களையும் உண்டாக்கி அவ்வவ் வித்தைகளில் சிறந்த கல்வியாளர்களை அமர்த்தி சன்மானம் கொடுத்து ஆதரித்து வந்தார்கள். இவ்வாறு ஒருகாலத்தில் மேன்மையுற்றிருந்த சாஸ்திரங்களெல்லாம் இராஜாங்க மாறுதலில் நாளுக்குநாள் ஆதரிப்பு குறைவாலும், ஆராய்ச்சி குறைவாலும், பாதுகாப்பு குறைவாலும் அரிய பெரிய விடயங்களெல்லாம் சீர்குன்றிப் போயினவெனினும், இன்னும் அநேக நூல்கள் அச்சுக்கு வராமலே சிற்சில விடங்களில் மறைந்துள்ளன.

இவ்விரு பாஷைகளிலும் உள்ள கிரந்தங்களையெல்லாம் ஆராயும்போது ஒன்றுக்கொன்று தாழ்வுபட்டதாக ஏற்படவில்லை. ஏனெனின் சிலவிடயம் ஒன்றுக்கொன்று பொருத்தமாகவும், ஒன்றிலிருப்பது மற்றொன்றிலில்லாமலுமாகத் தோற்றுகின்றன. இக்காரணத்தை முன்னிட்டே இதுபரியந்தம் எழுதப்பட்டுள்ள நூல்களில் எவையெவை அனுபவத்திற்கு நன்மையைத் தரத்தக்கதோ அவைகளையெல்லாம் தெரிந்தவரையில் சேர்த்து பதிப்பித்துக் கொண்டு வந்திருக்கின்றேன்.

இந்த "வைத்திய சிந்தாமணி" என்னும் நூலானது பூர்வாசிரியர்களில் ஒருவராகிய யூகிமாமுனி என்பவரால் கூறப்பட்டுள்ளது. இதனில் ரோகநிதானங்களை ஏறக்குறைய கூறியிருப்பதினால் இதனை ஆதரவாகக்கொண்டு வசனகாவியமாக எழுதினதுமல்லாமல் சிலவிடங்களில் சமயத்திற் கேற்றவாறு மற்றுஞ் சில கிரந்தங்களினின்று சிலது சேர்க்கப்பட்டும், ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேய மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோகநிதான விடயங்களை மதாந்தரமாகவும் அமைத்து தற்கால நாகரீகத்திற்கு ஏற்றவாறு சிகிச்சைகளையும் கூட்டி யெழுதலாயினேன். இந்நூலானது வைத்தியத்தொழிலைக் கற்கவிரும்பும் மாணவர்களுக்குப் பெரும்பான்மை விசேடநன்மையை யுண்டாக்குமென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இந்நூல் அச்சிட்டு முடியும்வரையில் என்னால் அதிக ஊக்கத்தினுடனும் அவிழ்தப்பிரயோகங்களில் எடைபாகம் சிறிதும் பிறழாமல் மிகக் கவனத்தோடு பார்வையிடப்பட்டது. ஆகையால் புத்திமான்கள் இவ்விடயங்களை உற்றறிந்து மருந்துகளைச் செய்து பயனடையவும், இந்நூல் இடையூறின்றி முடிந்தமை நோக்கியும் எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாகிய முருகப்பெருமானை மனம் மொழி மெய்களால் அநுதினம் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றனன்.

இங்ஙனம்
வைத்திய வித்வன்மணி
சி. கண்ணுசாமிப்பிள்ளை.

# சிறப்புப்பாயிரம்

இது
சென்னை சமரசஞான சங்கத்தலைவரும் சித்தவைத்திய சங்கம்
சித்தர் நூற்பதிப்பு கழகத்துக்கும் அமைச்சரும் ஆகிய
**உயர்திரு. சண்முகானந்த சுவாமிகள் கூறியது.**

**அகவற்பா.**

மதிகதி ரங்கியின் வலிவாற் பலதொழில்
மதிக்கரி தாகவும் மாப்பொரு ளொந்தால்
எண்ணிலா வுயிர்கட் கேற்றபுட் கலங்கள்
வண்ணங் குணந்தொழில் வகைபலப் பலவாய்
நிற்ப நடப்பன நியதியின் மாண்பால்
பற்பல பிண்டமும் பருப்பொருட் காரியம்
மெழுகினிற் பொன்போல் விவிதமூ வுலகும்
தழுவுபே ருருவினைத் தானண்ட மென்பர்
தோன்றிநின் றொடுங்குந் தொழிலா விதனை
ஊன்றியோர்ந் தவர்களோ ரொப்பிலாப் பொருளுள
தாலதைக் காணவும் கருதவும் தகாதெனு
ஞாலமே கரியென நவின்றன ரதாஅன்று
ஒளியது வெளியது ஒப்பிலா வைப்பது
அளியது யாவுமாம் அலதெனக் கூறியும்
அதுவது வாயுணர்ந் தடங்கினர் மோனிகள்
எதுவெது கருதியாங் கெய்தின ராதலின்
முத்தியுஞ் சித்தியும் முதலிவ ணடைந்தோர்
சித்தர் தமிழர் தேசுரு நாதர்கள்
ஆதலிற் றமிழ்நா டாருயிர் தோன்றிடம்
ஓதுநற் பாண்டி நாடே பழம்பதி
என்றநன் மொழியின் இயலுணர்ந் தன்பால்
அன்றுநாட் பழைய அரசரால் வளர்த்தது
...ன்மொழி நன்மொழி புதுமொழி பழமொழி
...ன்மனக் கபடர் காணு மறைமொழி
...குமித் தலமேழ் அணிகுன்ற நாட்டில்
...தமணி மலை நாப்பணென் றுரைப்பர்
...வும் அறிவும் சிந்தனை வலிவும்
...விலா வாயுளும் மதியமு தருந்திச்
...ாத வாழ்வினைச் சகத்தினிற் பெற்று

ஆகா விதனை அனைவரும் பெறுகெனக்
கருணையாற் கண்ட கன்னித் தமிழாம்
தருணமா தெனமிளிர் தனித்தாய் வாழி
தமிழெனு மெழுத்தின் தன்மையா ரறிவார்
இமிழ்திரைக் கடலென இரத்தினப் பொருண்மலி
மூவெழுத் துள்ளே முப்பத முத்தலம்
மூவெழுத் துள்ளே முச்சத்தி மூவரும்
மூவெழுத் துள்ளே முத்தியுஞ் சித்தியும்
மூவெழுத் துள்ளே முப்பொருட் டிணிவே.
ஆவிதன் பொருளை அடியுறைற் புகலவோ
நாவொன் றுதவின் நசையா லுரைத்தனன்
சித்தர்க ளிம்மொழி செய்தன ராதலின்
நத்தி மயேந்திரம் நவின்றன ராகமம்
ஆகமம் புகல்வதை வகைப் பொருட்கள்
சோகமில் மெய்யுணர் துரிசிலா வளிநிலை
கற்பமும் வேதையுங் கனவைத் தியமும்
பற்பல வகையிற் பகர்ந்து மானவர்க்கு
இன்பமே மாறு தியல்முத்தி சித்தியும்
துன்பந் தொடராத் தூயுநல் வாழ்வும்
காட்டிய வழிக்கே கவின்சித்த மார்க்கம்
நாட்டிலும் மலையிலும் நடந்தது முறையே
அந்தணா ளவுனியில் அரசனு ணையினல்
வந்திடு நரையும் மூப்பொடு மரணம்
எதுவுமற் றிருந்த வியல்பினு லன்றே
முதுமக் கட்டாழி முன்னாள் வழக்கே.
அரச னுணையினல் அறிவர் போதனையால்
கரவிலா வொழுக்கமுங் கற்பொடு திருவும்
* ஆணும் பெண்ணும் அறிவர்பா லறிந்து
பூணும் நிலையினைப் போற்றி வந்தாரே.

---

* புறநானூறு, பிசிராந்தையார் கூற்று:—
ஆண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்கா குதிரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
யான்கண் டனைய ரென்னிளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கு மதன்றலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழுமூரே.

நோயும் வறுமையும் துவலவும் அறியா
தாயின வன்றே அரைந்தனர் தேவர்
‡வையத்து வாழ்வாழ் பவன்வா னுறையும்
தெய்வத்து ளொருவனும் பூமியி லென்றூர்
இதனு லிகத்திலில் லுறைந்த வர்கள்
மதனுக மத்தின் வளியுணர்ந் தறத்தால்
உருவும் திருவும் ஒப்பிலா மகவும்
தரும வாழ்வுற் றித்தகு சுகமுற்றூர்
சான்றே ரந்தணர் அறிவோர் துறவோர்
மான்றே விருந்து மலேமுழை வதிந்து
வழலேயால முப்பு வகைபல முடித்துச்
சுழலும் வளியின் தொழில் அறவமுதால்
உடற்சித்தி யோடும் உயிர் முத்திபெற்று
சுடற்சத்தி வாதமும் தொகைபிற வுணர்ந்து
வாழ்ந்தவர் தமிழர் மகிழ்ந்தவர் தமிழர்
சூழ்ந்தவா ரியரின் தொடர்பாற் றம்மைத்
தமிழரென் றுணருந் தன்மை குன்றி
அமிழ்தெனுந் தமிழை அறவே மறந்து
ஆரியம் பயின்று அதன்துறை பேசி
சீரியர் போலச் சிறப்பித்த நாடே
அந்தோ தமிழே அந்தோ தமிழே
எந்தாய் சித்தர்க ளியல்நெறி மறந்து
வாய்வே தாந்த மலியப் பேசித்
தூய்மை மறந்த துரிசுறு தமிழர்
பண்டைப் பெருமையைப் பகருதற் கஞ்சி
இண்டைச் சாதியர் ஏமாற்ற லுக்கே
மயங்கித் தமிழர் வதியுமிந் நாளில்
சயந்தரு வைத்தியம் தனியிசை முதலிய
ஆரியர் தமிழர் அவரவர் பொருளும்
வேறெனக் கண்டும் விரவிய காலத்து
அண்ண லருளால் அவனியா ளாங்கிலர்
ண்ணவ ரெவரும் மதியுடன் வாழ்வான்

---

‡ வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும். என்பது குறள்.

கல்வியைப் பலர்க்குங் கற்பித் ததனால்
வல்வினை நீங்கிய மானவன் போலத்
தொல்லைத் தமிழர் தூநெறி யாய்ந்து
வல்லையி லொவ்வோர் கலைவளர் நாளிது
அதனால்-சித்தன் குமரன் செவ்வேள் முருகன்
கந்தன் தேசிகன் கால்வழி வந்த
அகத்தியன் மூல ஞாதியர் வழியில்
சகத்தீலீ ரொன்பான் தகுமூவ ருக்கர்
வகுத்தருள் வைத்திய மாண்பினைக் கூறுதும்
மிகுத்துள காப்பொடு நீக்கமும் நிறைப்பாம்
காப்பெனப் படுவது கழருங் காலை
வாய்ப்புறப் பனிவெயில் மழைபக லிரவும்
முத்தா துடலும் முக்கர ணச்செயல்
சத்தாம் வருவாய் தனியோ துணையோ
செய்வகை தெரிந்துந் தின்முண் டுடுத்தும்
ஒழுக்க வலியால் ஒருநோ யணுகாது
இழுக்கி லாவகை யென்றியம் பினர்புலவர்
இந்நெறி வழுவால் இருவினைத் தொடர்பால்
தந்நெறி வாதனை தன்னால் நோய்வரல்
மூவகை யாகும் மோசன மோப்பும்
தாவலி லேதிருந் தக்க கலப்புமாம்
வகையொரு பத்தாம் மன்மூ லிகையும்
தகையுப் புத்தீநீர் தாதுக்கள் பலவும்
உடற்பொருள் நஞ்சுக ளோரிரு வகையும்
திடநவ லோகம் செய்சத் துமணியும்
வளிநிலை யாலும் மாற்றி நோய்களை
தெளிவுற வுயிர்க்குளந் தேக நலத்தைச்
செய்வது நீக்கமாம் தீர்ந்தநோ யெனினும்
மெய்யுறு தாதில் விலகிய தெப்பொருள்
கண்டுணர்ந் தவற்றைக் கைமுறை வழாது
பண்டுபோ லாக்கல் நிறைப்பெனும் பண்பாம்
ஒப்புயர் வற்ற ஒருசித்த மருத்துவம்
தப்பில்மூ வகையில் சாற்றிய நீக்கம்
பற்பல வகையுள வேனும் பார்மிசைக்
கற்பா ரற்றுக் கைமுறை யொன்றே

பெரிதெனக் கருதிய பீடிலா ருணர்வான்
துரிசிலா வனுபவஞ் சுருதியுத் திகளுடன்
நாடியும் பொருளும் நற்சுத்தி யரைப்பும்
வாடிடா தவற்றின் வகையினை விளக்கியே
சிகிச்சா ரத்தின தீபமு மதற்பின்
வகுத்த கண்ணுச் சாமிய மெனு நூல்
செய்தும் செவ்வேட் சீடன் குறுமுனி
நைவிலா மாணவன் நானிலம் புகழும்
யூகிமா முனிவன் உவப்புடன் வகுத்த
தாகிய நூற்களுக் கணிமுடி வைத்திய
சிந்தா மணியில் செப்பினன் யாவும்
நந்தா விளக்கினில் நற்கவி யதனுல்
புகன்றதி லையம் பொருந்தலி னதன்தொகை
வகையினை இலகு வசனம தாகவும்
செப்பியும் வடமொழி யாங்கிலங் கற்றுர்
ஒப்பிய பிறவும் ஓர்ந்தும தாந்தரம்
எனும்பேர் தந்து மிசைத்தனன் முதனூல்
துனும் வைத்திய சிந்தாமணித் தொல்பேர்
தந்துதன் புகழைத் தரைமிசை நிறுவினன்
நந்தாச் சித்தர் நன்னெறி பயின்றும்
சித்தர் தலைவனும் தேசிகன் குமரன்
சித்துரு வாமருட் சீரடி மறவான்
அன்புளோன் சாந்தன் அடக்க முடையோன்
இன்பமே யெவரும் இசைந்திடக் கருதும்
தண்ணளி யுடைய தகையோன் திருவளர்
கண்ணுச் சாமிநற் கவின்புல வேனே.

**யோகானந்தாச்சிரமம்**

சென்னை.

இவை, சென்னை முத்தியாலுப்பேட்டை ஐஸ்கூல் தமிழ்ப்புலவரும் சிந்தாதிரிப்பேட்டை 'தேரையர் வைத்தியசாலை' மருத்துப்புலவருமாகிய

## சி. குமரகுரு செட்டியார் இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

காலாறு பாயநறுங் காவின்மது வழியுற்றுக் காலிற் செல்லப்
பாலாறு மிகப்பெருகி வளஞ்செறிந்த தொண்டையெனும் பாலி நாட்டில்
நூலாறு முணர்வார்சேர் சென்னைச்சிந் தைவாழ்வோன் நுவன்ற சீர்த்தி
மேலாறு முடியண்ணல் நெற்றிவிழி மாபினேன் மேன்மை சாலும். (1)

திருத்தமிழை விரித்தமுனி மாபில்வரு யூகிமுனி தேர்ந்த ளித்த
மருத்துவர்கள் போற்றும்வைத் தியசிந்தா மணிநூலின் வாய்ப்பு நோக்கி
யருத்தமெலா மறவேயோர்ந் தவனியோர் மிகவெளிதி லறியு மாறு
விருத்தப்பா வகையினையே வசனமதா யொருநூலும் விளக்கிக் காட்டி. (2)

ஆன்றவுறை நூற்கூறும் பத்தியநற் பதார்த்தவிதி யமையச் சேர்த்து
மான்றலற மருந்தெடையுஞ் செய்முறையு முண்முறையும் வயங்கக் கூட்டி
நோன்றலுறு மதாந்தரமு நோய்க்கேற்ப நுணுக்கமெலா நுனித்த றிந்தே
தோன்றலவிர் வைத்தியசிந் தாமணியென் முற்பெயரே துலங்க நாட்டி. (3)

சிந்தாகு லந்தீரச் செவ்வேயென் றுந்தன்னைச் சேர்ந்து போற்ற
நந்தாத பிறவாழி கடக்கவடிப் புணையுதவு நாத ஞன
எந்தாதை முருகனடி யிணைமலரை யெந்நாளு மெண்ணு நீரான்
செந்தாது வருவாத நெறியினுறு மர்மமெலாந் தேர்ந்த செம்மல். (4)

திருத்தமுடை ணுங்கிலமுஞ் செந்தமிழிற் பன்னூலுஞ் சிறக்கக் கற்றோன், பொருத்தமுறு நற்குணத்தோன் பொய்மையிலான் மெலியோரைப் புரிந்தி ரங்குங், கருத்துடையான் மருத்துவநூற் கரைகண்டான் என்னிரண்டு கண்ணே போல்வான், கருத்தையெலாந் தெரித்தானற் கண்ணுசா மிப்புலவன் கவின மாதோ. (5)

---

இவை, சென்னை சிந்தாதிரிப்பேட்டை சித்தவைத்தியர்

## பிரம்மஸ்ரீ சுப்பராய ஆச்சாரி அவர்கள் இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

கார்பூத்த கந்தரமுங் கரம்பூத்த மழுமானுங் கங்கை பூத்த
தார்பூத்த நறுங்கொன்றை மதிபூத்த சடாடவியுந் தண்மை வாய்ந்த
பேர்பூத்த பனிவரைமாத் தலம்பூத்த கருணையுமை பிறங்கு மன்பின்
சீர்பூத்த பரம்பொருளின் றிருவருள்பூத் திடும்பொதியச் சிலம்பி னென்றும்.

சிரம்பயிலும் முனிவர்குழா திறம்பலவு மிகத்தெரிந்து தினம்ப ராவ
வரம்பயிலுங் குறுமுனிவன் வாய்மலர்ந்த மருத்துவநூல் வழியே போந்த
தரம்பயிலுஞ் சித்தரார் சாற்றியவா கடம்பலவுந் தவாது தேக்கி
குரம்பையுறு மாதங்க நோய்நீங்கி மன்பதைகள் குலவுமாறே.

தான்பெற்ற பெரும்பேறு தாரணியெங்கும் பெற்றுய்வான் தனிமை சேர்ந்த
ஊன்பெற்ற பயனென்ன வுளத்தெண்ணி யுத்திபா ருலவா மென்மை
தேன்பெற்ற மொழியதனுல் வைத்தியசிந் தாமணிநூல் சிறக்கப் பெற்று
வான்பெற்ற பயன்போலு வறுமைதீர்ந் திவணுய்ந்து வயங்க மன்னே.

தெள்ளரிய நறும்பாகோ செங்கரும்போ கற்கண்டோ சீனி தானே
எள்ளரிய தீஞ்சுவையோ முக்கனியோ சருக்கரையோ யிலங்கு மாழி
விள்ளரிய பேரமுத மேயோவென் றெவ்வவரும் வியக்கு மாறு
தள்ளரிய செந்தமிழின் வசனத்தா னிரைநிரையே சாலத் தீட்டி.

பொருவாரும் பச்சிலைப தார்த்தமொடு கியாழவகை புகலும் பற்பம்
மருவாருஞ் செந்தூரத் தைலமிலே கங்கிருத மாத்திரை சூர்ணம்
கருவாரு முட்டற்கூறு நாடிவகை ரோகநிலை காண வைப்பில்
திருவாரும் வைத்தியசிந் தாமணிநூ லிற்றிகழச் செய்தா னன்றே.

மறந்திருந்தும் புறங்கூறு வாய்மையுளான் றயையுடையான் மகிமீ தென்றும்
அறந்திருந்தும் முகில்காத்தா னுதுலருக் கிருக்கையென வமருஞ் சீர்சால்
சிறந்திருந்த கல்வியுளான் றீமைநெறி யிற்செல்லான் செவ்வேள் போற்றும்
நிறந்திருந்தும் பேர்கண்ணு சாமியெனப் புவிபுகழு நிபுணன் மாதோ.

---

இவை, செங்கல்பட்டு சின்னமணியக்காரத் தெருவு சித்தவைத்தியர்

## ஸ்ரீமான் M. கோவிந்தராஜு முதலியாரவர்கள் இயற்றிய

### நாலடித்தரவு கொச்சகம்.

சாத்திரத்திற் றலைச்சிறந்த தனியாயுள் வேதத்தை
தாத்திரியிற் பல்லாற்றும் தகைமையுற நனியுணர்ந்து
சூத்திரத்தால் யூகிமுனி தொகுத்ததொரு நூலதனை
மாத்திரத்தின் படிவசன காவியமாய் வழுத்தினனல்.

செந்தமிழி னிலக்கியமும் சித்தரார் வழிவந்த
அந்தமில்லா கடம்பலவு மரிதுணர்ந்து கைம்முறையின்
வந்துளமா மருத்துநெறி வகையினையும் கற்றடக்கஞ்
சிந்தையிருத் திடுகண்ணு சாமியெனுஞ் சீரியனே.

---

இவை, சென்னை இராயபுரம் கல்மண்டபம் சித்தவைத்தியர்

## ஸ்ரீமான் சால்மென் பிள்ளையவர்கள் இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

நிலம்பரவு மொருதமிழ்வைத் தியப்புணரி யினைக்குடித்து நிகரின் மான
நலம்பரவு மனுபவகைம் முறைகளையே நிரைநிரையே நாட்டி யன்பின்
புலம்பரவுந் தமிழ்வைத்ய சிந்தாம ணிப்பெயரின் புகன்றுன் கீர்த்தித்
தலம்பரவுந் திருக்கண்ணு சாமிமா லெனப்புகலுந் தன்ம வானே.

---

இவை, சென்னை சித்தவைத்தியர்

**ஸ்ரீமான் ஹரிசிங் அவர்கள் இயற்றிய**

**கட்டளைக்கலித்துறை.**

பண்பார் குறுமுனிவி ளம்பிய ஞானம் பலதேர்ந்து
கண்பார் மொழிசித்தர் காட்டிய நூலின் கருத்திசைய
நண்பார் புகழ்வைத்ய சிந்தா மணியென நன்குறைத்தான்
மண்பார் பரவுறு நங்கண்ணு சாமி வரோதயனே.

---

இவை, சென்னை சிந்தாதிரிப்பேட்டை

**ஸ்ரீமான் ஆங்கமுத்துப் பிள்ளையவர்கள் இயற்றிய**

**விருத்தம்.**

சீர்வளருஞ் சென்னைநகர் தன்னில் வாழு
திறஞ்சிறந்த பெருங்குரிசில் கண்ணு சாமி
ஏர்வளரும் அகத்தியனே முதலா யுள்ளார்
எழிலுடலில் புழுமலிநோய் புகுதா வண்ணம்
ஊர்வளரும் வகைசெய்த உயிர்நூல் என்னும்
ஓங்குபெரும் பாலாழி கடைந்து தந்தான்
ஆர்வமுறு மருந்தொளிரும் வைத்ய சிந்தா
மணியென்னும் பெருநூலை யவனி யோர்க்கே.

---

இவை, சென்னை சிந்தாதிரிப்பேட்டை பாம்பே சித்தவைத்தியசாலை

**ஸ்ரீமான் பொன்னரங்க முதலியாரவர்கள் இயற்றிய**

**வெண்பா.**

மருத்துவத்தில் சித்தர் மறைத்த மறையைத்
திருத்தமுறக் கண்ணுசாமிச் செம்மல்—திருத்தமிழால்
வைத்தியசிந் தாமணியென் மாநூலை சொற்றனனால்
வைத்திய வித்வன் மணி.

---

இவை, சென்னை சித்தவைத்திய வித்வான்

**வி. எ. முனிசாமிப்பிள்ளை இயற்றிய**

**அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.**

பாரோங்கு பலநூலின் பயனோங்க விடயமெல்லாம் படித்துத் தேர்ந்து
சீரோங்கு வாகடத்தின் திறமோங்கு நலம்பலவும் திரட்டிக் கற்றோர்
பேரோங்கு வழிமுறையே பெரிதோங்க வருமுறையைப் பிடித்துச் சீர்த்தி
நீரோங்கு கடலுலகி னெறியோங்கு வைத்தியசிந்தா மணிப்பேர் நேடி.

புத்தமுத மனையதமிழ் வசனமதா வினிதுரைத்தான் புரை தீரற்ள
உத்தமதத் துவவழியு முடனுறைய வுடற்பாங்கு முலவக் கீர்த்திப்
பத்தியபா வனைகாட்டிப் பல்லார்க்குங் களிதுளும்ம படியின் மீது
சித்தர்வழி வழிவந்த கண்ணுசா மிப்பெயர்கொள் சீரி யோனே.

சுகம்பயிலும் பொழிலுடுத்த பொதியவரை வருமுனிவன் தொகுத்த மாண்பிற்
சுகம்பயிலும் தமிழ்வைத்ய முரைசித்தர் விளம்பியநூற் றிறமுங் கண்டு
சுகம்பயிலும் பேர்வைத்ய சிந்தாம ணிப்பெயரி லறைந்தா னிந்தச்
சகம்பயிலும் வைத்யவித்வன் மணிகண்ணு சாமியெனுந் தமிழ்வல் லானே.



சிவமயம்.

# ரோகநிதான அட்டவணை.

ரோகநிதான அட்டவணை

முற்றிற்று.



சிவமயம்.

# அவிழ்த அட்டவணை

| அவிழ்தப்பெயர். | பக்கம். |
|---|---|
| **அ** | |
| அக்கினிகுமாரன் | 234 |
| அண்டத்தைலம் | 203 |
| அதிமதுரக்கியாழம் | 157 |
| அதிமதுரச்சூரணம் | 165 |
| அப்பிரகச்செந்தூரம் | 242 |
| அயவீரச்செந்தூரம் | 225 |
| அயகாந்தச்செந்தூரம் | 237 |
| அயகாந்தகல்கம் | 249 |
| அரக்குதைலம் | 192 |
| அரக்கு சந்தனாதிதைலம் | 193 |
| அரூதாசூரணம் | 167 |
| அறகக்ஷிராதிதைலம் | 201 |
| அன்னபேதிசெந்தூரம் | 233 |
| அஷ்டதீபாக்கினிசூரணம் | 159 |
| அஸ்வகந்தி பாலாக்ஷாதிதைலம் | 192 |
| **ஆ** | |
| ஆக்கிராணம் | 248 |
| ஆடாதோடைக்கிருதம் | 209 |
| ஆவாரைக்கியாழம் | 157 |
| ஆவாரைச்சூரணம் | 165 |
| ஆனந்தபைரவமாத்திரை | 169 |
| **இ** | |
| இஞ்சிலேகியம் | 178 |
| இஞ்சிமூலைப்பாற்றைலம் | 195 |
| இடிக்காமல்லித்தைலம் | 197 |
| இந்துப்புச்சூரணம் | 160 |
| இரசகெந்திமெழுகு | 254 |
| இரஜிதபற்பம் | 221 |
| இலகுசந்தனாதிதைலம் | 200 |
| இலவணபற்பம் | 212 |
| இலவணஅண்டம் | 260 |
| இலிங்கசெந்தூரம் | 222 |
| ஷை | 227 |
| இலிங்கவன்னபேதிசெந்தூரம் | 223 |
| இலிங்கலவணசெந்தூரம் | 224 |

| அவிழ்தப்பெயர். | பக்கம். |
|---|---|
| **ஒ** | |
| ஒத்தடம் (தலைவலிக்கு) | 260 |
| **க** | |
| கட்டுவாதிச்சூரணம் | 161 |
| கண்டங்கத்திரிகிருதம் | 209 |
| கபாங்குசசூரணம் | 166 |
| கரப்பானெண்ணெய் | 189 |
| கரப்பான்மேல்பூசுந்தைலம் | 204 |
| கரிசாலைஎண்ணெய் | 187 |
| கரிசலாங்கண்ணிச்சூரணம் | 160 |
| கருவங்கபற்பம் | 211 |
| கலிங்காதிஎண்ணெய் | 184 |
| கற்பூராதிசூரணம் | 168 |
| **கா** | |
| காசகுலாந்தகன் | 245 |
| காடிகாரலிங்கசெந்தூரம் | 240 |
| காடிகாரரசசெந்தூரம் | 241 |
| காதுவலித்தைலம் | 205 |
| காந்தச்செந்தூரம் | 238 |
| ஷை | 239 |
| காலகோடிரசம் | 170 |
| காலருத்திராங்கஎண்ணெய் | 188 |
| காரசூடசத்துபற்பம் | 217 |
| காரலவணபற்பம் | 218 |
| காராமைலேகியம் | 182 |
| **கீ** | |
| கீழ்வாய்நெல்லித்தைலம் | 196 |
| **கு** | |
| குங்கிலியவெண்ணெய் | 250 |
| குடஜாலலேகியம் | 180 |
| குப்பிரசசெந்தூரம் | 229 |
| ஷை | 230 |
| குன்மகுடோரலேகியம் | 183 |

அவிழ்த அட்டவணை

முற்றிற்று.

---

சிவமயம்

# சிகிச்சாரத்னதீபம்

## இரண்டாம் பாகமாகிய

# வைத்திய சிந்தாமணி

### விநாயகர் துதி.

சீர்பெறும் வைத்ய சிந்தா மணியெனத் திகழும் நூலை
நீர்பெறும் சான்றோர் சொன்ன நெறியினில் நிகழ்த்து தற்குப்
பேர்பெறும் பார தத்தைப் பெட்புடன் கோட்டாற் றீட்டும்
கார்பெறும் கணேசன் தாள்கள் கைதொழு துய்கு வாமால்.

### முருகர் துதி.

செந்தமிழ்க் குரவு பூண்டு தென்மலை முனிவ னுக்கு
முந்துறு பொருளு ணர்த்தி மொய்ம்புறு சூரை வாட்டிக்
கொந்துறு குழலார் வள்ளி குறுநகை வேட்டுக் கானம்
வந்துறு முருக வேளை வழுத்தியே வாழ்கு வாமே.

### பதினெண்சித்தர் துதி.

அவமிலாப் பொழுதை யெல்லாம் அருந்தவப் பொழுதே யாக்கிச்
சிவமொரு முதலே யன்றித் திருமுதல் வேறு காணாப்
பவமறு பதினெண் சித்தர் பைங்கழல் வணங்கி நாளும்
நவமுறு வைத்திய சிந்தா மணியினை நவிலு வேனால்.

### அவையடக்கம்.

அறிவொடு கல்வி வாய்மை அனைத்தும்பெற் றருளால் வாழும்
செறிவுறு சான்றோர் போலச் சிறியனும் நூலி யற்றல்
குறைவறு கருடன் முன்னர்க் கொதுகுதன் னிறக லர்த்திப்
பறையெடுத் தெழுந்து செல்லும் பான்மையைப் பொருவுமன்றே.

## பொருளடக்கம்.

### அகவல்.

ஆர்கலி சூழு மம்புவி தன்னில்
சீர்எழு மீசன் செப்பிய வேதம்
குறுமுனி சித்தர் குறிப்புட னுய்ந்து
திருவுள மகிழ்ந்து செப்பிய வதனில்
பண்டுடன் செய்த பாவ வினையால்
கொண்டிடும் நோயின் குலமதைத் தானும்
நாலா யிரத்து நானூற் றுடனே
மேலாய் நாற்பத் தெட்டு வியாதி
பூவுல கத்தில் பூண்டிடும் மார்க்கம்
மேவும் முன்னூல் விவரப் படியே
பெருக்கிப் பேசாப் பின்வருஞ் சிலவே
சுருக்கிச் சொல்வேன் சுருதிக் கிணங்கச்
சுரமது தானும் சொன்னேன் ஏழு
உரமுள சந்நி ஓர்பதின் மூன்று
குன்ம மெட்டு கூறுஞ் சூலை
இன்ன லுறவே எழுமூ வைந்து
வாதந் தன்னை வழுத்துங் காலை
ஓத வெண்பத் துடனே நான்கு
எழும்பிடும் பித்தம் ஏழா றுகும்
தழும்பிய கபமுந் தனிபிர மேகம்
முடிவரை தனக்கு மூவே ழாகும்
இடிபெரும் மேகம் இருபா னென்பர்
எஞ்சிய குட்டம் இனமூ வாறும்
அஞ்சிய பாண்டு அணிபெரு மைந்து
தட்டுங் குருதி தடையுறுங் கேட்டால்
துட்டகா மாலை தொகைபதின் மூன்று
சிதறுஞ் சோபை சீர்வகை நான்கு
உதர ரோகம் உற்றே ழைக்கின்
சொல்நா லெட்டு சுருக்க முறவே
கொல்விட பாகம் கூறி லெட்டாம்
இடிபெருங் கிராணி இருபத் தைந்து

கொடிய ரோகம் குறித்திட மேலே
மூலம் மூவேழ் முற்றிடுங் கயமும்
கோலக் காசம் குறிமுன் நான்கு
மற்றுளே மாந்தை மாப்பெரும் பாடே
உற்றுளக் கல்லின் ஓரடைப் போடு
கிரிச்சர ரோகம் கிளையிலே நான்காம்
இருமலைந்து ஏற்விப் புருதி
கரப்பான் வகைக்குக் கணக்கே மூாகும்
திறங்கெடும் நோயின் சீர்மை யுரைக்கின்
சத்தி யைந்தாய்ச் சார்ந்திடு மென்பர்
குத்து விக்கல் குறித்திட நான்கு
கடுத்திடும் பவுத்ரம் கனமூல ரோகம்
தொடுத்திடுந் தொகைதான் சொல்லிரு நான்கு
ஆகப் பிணிகள் ஆக்க மதனில்
வேகத் தோடே வெளிவரும் போது
காலனுர் தனக்குக் கதித்த தோர்படை
போலப் பிறந்து போரிடும் போது
மக்க டம்மை மாளா திருத்தத்
தக்க வவிழ்தம் தானே முடித்துக்
குறுமுனி சித்தர் கூறிய படியே
அருள்பெற வேண்டி அவரைத் துதித்துப்
பண்ணுஞ் சிகிச்சை பயனுற நோக்கிக்
கண்ணுச் சாமி கழறி னேனே.



# நூல்.

## தத்துவ இலம்பகம்.

இந்நூலின்கண் பஞ்சபூதத்தின் கூறு, திரிநாடி, தசநாடி, வயது, தத்துவம், நாடிநிதானம், சுரம், ஜந்நி, குன்மம், சூலை, வாதம், பித்தம், கபம், மேகம், நீரிழிவு, குட்டம், பாண்டு, காமாலை, மகோதரம், கிராணி, பவுத்திரம், மூலம், விக்கல்முதலிய ரோகங்களையும் அவ்வவைகட்குரித்தான சிகிச்சைகளாகிய மூலிகை, கியாழம், சூரணம், மாத்திரை, லேகியம், கிருதம், தைலம், எண்ணெய், செந்தூரம், பற்பம், திராவகம், புகை, ஒற்றடம், மேல்பூச்சு, நசியம், கலிக்கம், விரேசனம் முதலிய அவிழ்தங்களையும் கூறப்பட்டிருக்கின்றன.

### பஞ்சபூதம்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களின் கூட்டுறவால் இச்சரீரம் உண்டாக்கப்பட்டிருக்கின்றது.

### பஞ்சபூதநிறம்.

பிருதிவி-பொன்னிறம்; அப்பு-படிகநிறம்; தேயு-சிவப்புநிறம்; வாயு-நீலநிறம்; ஆகாயம்-புகைநிறம்.

### பஞ்சபூதத்தின் கூறு, உடற்சக்கரம், தேவதை, பீஜாட்சரம் விவரம்:—

பிருதிவியானது எலும்பு, தோல், மாமிசம், மயிர், நாடிமுதலிய தேகக் கூற்றினையுடையதாய் நாற்கோணமென்னும் உடற்சக்கரத்தைப்பெற்றுப் பிரமதேவனுக்கு இருப்பிடமாக இருந்து நவ் என்னும் பீஜாட்சரத்தைப் பெற்றிருக்கும்.

அப்பானது உதிரம், மச்சை, சுக்கிலம், நீர், மூளைமுதலிய தேகக்கூற்றினையுடையதாய் மூன்றாம் பிறைக்கோண மென்ற உடற்சக்கரத்தைப் பெற்று விஷ்ணுதேவனுக்கு இருப்பிடமாக இருந்து மவ் என்னும் பீஜாட்சரத்தைப் பெற்றிருக்கும்.

தேய்வானது அகங்காரம், சோம்பல், மைதுனம், பயம், நித்திரைமுதலிய தேகக்கூற்றினையுடையதாய் முக்கோணமென்ற உடற்சக்கரத்தைப் பெற்று ருத்திரதேவனுக்கு இருப்பிடமாக இருந்து சிவ் என்னும் பீஜாட்சரத்தைப் பெற்றிருக்கும்.

வாய்வானது ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், நிற்றல் முதலிய தேகக்கூற்றினை யுடையதாய் அறுகோணமென்ற உடற்சக்

கரத்தைப்பெற்று மகேசுவரனுக்கு இருப்பிடமாக இருந்து வவ் என்னும் பீஜாட்சரத்தைப் பெற்றிருக்கும்.

ஆகாயமானது காமம், குரோதம், மோகம், மதம், லோபம் முதலிய தேகக்கூற்றினை யுடையதாய் வட்டமென்ற உடற்சக்கரத்தைப்பெற்றுச் சதாசிவனுக்கு இருப்பிடமாக இருந்து யவ் என்னும் பீஜாட்சரத்தைப் பெற்றிருக்கும்.

### தசநாடி.

இடைகலை, பிங்கலை, சுழுமுனை, சிகுவை, அலம்புருடன், காந்தாரி, அத்தி, குகு, அலம்புடை, சங்கினி ஆகப் பத்து நாடிகளும் மூன்று நாடிகளில் ஒடுங்கும். அப்போது வாதம் பித்தம் சிலேத்தும மென்னும் வேறுபாட்டை விளக்கிக்காட்டும். இவற்றுள் இடைகலை, பிங்கலை, சுழுமுனை இம்மூன்றும் வாதத்தில் ஒடுங்கும். அப்போது மந்தம், மலக்கட்டு, எக்காரியங்களிலும் அசதி முதலியவற்றை யுண்டாக்கும்.

காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புருடன் இந்நான்கும் பித்தத்தி லொடுங்கும். அப்போது அதிக உஷ்ணம், தாகம், மோகம், அழலை, வாயு மேல்நோக்கல், நாடி படபடத்தோடல், ஆகிய இவற்றையுண்டாக்கும்.

குகு, சங்கினி, அலம்புடை (வைரன்) இம்மூன்றும் கபத்தி லொடுங்கும், அப்போது கண்மலர் விரிதல், கண் குழிவிழுதல், முகம் வேர்த்தல், மனங்கலங்கல் ஆகிய இவற்றையுண்டாக்கும்.

### இடைகலை பிங்கலை இவைகளின் இருப்பிடம்.

வலம் இடக்காற் பெருவிரலினின்று அசைந்திளகி மேலேறி கத்திரிக்கோல் மாறலாகப்பின்னிச் சுழுமுனையிற் றுக்கிச் சிரசில் முட்டி மீண்டும் கீழிறங்கி இடம் வலநாசிகளில் ஊடுருவிப் பாய்ந்து திரும்பி மூலஸ்தானத்தைப் பற்றும்.

### சுழுமுனை இருப்பிடம்

குதத்தின் அடியில் தோன்றி மேலேறி இடைகலை பிங்கலை இவைகளிலே சம்பந்தப்பட்டு பிராணவாயுவைச் சேர்ந்து சிரசளவு முட்டி சுவாசங்களைப் பகிர்ந்து கொடுக்கும்.

### காந்தாரி இருப்பிடம்.

காந்தாரி நாபிஸ்தானத்திலிருந் தெழும்பி பெரும்நரம்பு ஏழி னையும் அனுசரித்துக் கண்டத்தில் பரவி நாவினடியில் அமர்ந்திருக் கும்.

### அத்தி, சிகுவைகளின் இருப்பிடம்.

அத்தி, சிகுவை இவையிரண்டும் மூலத்தில் தோன்றி மேலோடி இரண்டு செவிகளிலு மமர்ந்து சப்தங்களை அறிவிக்கும் கருவிகளைக் காக்கும்.

### அலம்புருடன், அலம்புடைகளின் இருப்பிடம்.

அலம்புருடன், அலம்புடை இவையிரண்டும் அடிமூலத்தைப் பற்றி மேலேறி வல இடக் கண்மணிகளி லமர்ந்து ஆட்டுவிக்கும்.

### சங்கினி, குகுகளின் இருப்பிடம்.

சங்கினி, குகு இவை யிரண்டும் நாபிஸ்தானத்தில் தோன்றிக் குதத்தினடியைப்பற்றி இருக்கும்.

### கரு உற்பத்தி.

சுக்கிலம் சுரோணிதத்துடன் சம்பந்தப்பட்டு கருக் கமலத்தில் முத்து உதிர்ந்தாற்போல் விழ அது திரண்டு தன்னுருவமாகக் கரு மலத்தின்வாயில் மூடும். அப்போது வாயுவானது வெளிநின்று வேலி யடைத்ததுபோல் பாதுகாக்கும்.

விந்துவுடன் பிராணவாயுவானது உட்சென்றவுடன் அபான வாயுவானது வெளி நிற்கும். உதானவாயுவானது கருவளர்க்கும். வியானன் கருவுக்குள்ளே தனியே திரளும். இங்ஙனம் கூறப்பட்ட மூன்று வாயுக்களும் சேர்ந்து ஐந்து நாட்களில் நெல்லிக்காய்ப் பிர மாணமும், பத்து நாட்களில் கோழிமுட்டை வடிவமாகவும், ஒரு மாதத்தில் குருத்து வாழைப்பூவைப்போலவும் விருத்தி யடையச் செய்யும். இரண்டாவது மாதத்தில் கண்,செவி, மூக்கு,வாய்,நெற்றி, மூளை, ஈரல், கழுத்து, இருதயம் முதலிய அங்கங்கள் ஏற்படும். மூன்றாவது மாதத்தில் ஒன்றோடொன்று பொருந்தியுள்ள கண்ணி ரைப்பை,வாய்,உதடு, ஆண்பெண் என்ற இனக்குறி, கைகால் விரல் கள், சுவாசம், இரத்தஓட்டம் முதலியவற்றை யுண்டாக்கும். நான் காவது மாதத்தில் சிவந்த உருவோடு முடி, மூக்கு, கண், வாய்முத லிய உறுப்புகள் பூரணப்பட்டுத் தாயின் கருப்பையில் சுழன்று கொண்டிருக்கும்.

ஐந்தாவது மாதத்தில் உடல்பெருத்துக் கருவின்சிரசு கீழ்பாரிசத்தைநோக்கி நிற்கும். ஆறுவதுமாதத்தில் சிரசு, கண்ணிரைப்பை, புருவம் முதலிய இடங்களில் மயிர்முளைக்கும். ஏழாவது மாதத்தில் கண்டத்திலுள்ள உறுப்புக்களாகிய கண், வாய், மூக்கு, செவி, இவைகள் எல்லாம் திருத்தமாக அமையும். அதனிலேற்பட்ட என்புகளும் உடலுக்கு ஆதரவாக வலுத்துநிற்கும். எட்டாவது மாதத்தில் தேகமெங்கும் குருத்துமயிர்கள்தோன்றிக் கருப்பையில் சிறைக்கொப்பாகக் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கும். ஒன்பதாவது மாதத்தில் சிசு தனக்கு போதிய அளவு கருப்பை இடங்கொடாததினால் கோழிமுட்டைப்போலத் தேகத்தைச் சிரசோடு கைகால்களையும் குவித்து நிற்கும்.

பத்தாவது மாதத்தில் அபானவாயுவினால் பின்னேக்கப்பட்டு வெளியாகும். அப்போது அச்சிசு அழுதுகொண்டு முன்னறிவழிந்து மாயாசக்தி கிரியாசக்தியிலாழ்ந்து கொடிபடர்ந்த சுரைபோல ஜனனமாகும்.

### வயது.

இங்ஙனம் ஏற்பட்ட சிசுவிற்குக் கிரமப்படி வயது கூறின் வாதத்தில் **30**, பித்தத்தில் **33**, சிலேத்துமத்தில் **37** ஆக நூறு வருடமென்று ஏற்படும்.

### தத்துவம் 96.

இச்சரீரத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்யும்போது பூதம் **5**, பொறி **5**, புலன் **5**, கன்மேந்திரியம் **5**, ஞானேந்திரியம் **5**, கரணம் **4**, அறிவு **1**, நாடி **10**, வாயு **10**, ஆசயம் **5**, கோசம் **5**, ஆதாரம் **6**, மண்டலம் **3**, மலம் **3**, தோஷம் **3**, ஈஷணை **3**, குணங்கள் **3**, வினை **2**, விகாரம் **8**, அவத்தை 5 எனத் தத்துவங்கள் தொண்ணூற்றாறாக ஏற்படும்.

### பஞ்சபூதம்.

பிருதிவி - மண், அப்பு - தண்ணீர், தேயு - நெருப்பு, வாயு - காற்று, ஆகாயம் - வெளி.

### பொறிகள் 5.

(இவை ஞானேந்திரியம்.)

சுரோத்திரம் (செவி) தொக்கு (உடம்பு) சட்சு (கண்கள்) சிங்குவை (நாக்கு) ஆக்கிராணம் (மூக்கு.)

### புலன்கள் 5.

(இவை கன்மேந்திரியம்.)

வாக்கு (வாய்) பாணி (கை) பாதம் (கால்) பாயுரு (குதம்) உபஸ்தம் (குறி.)

### ஞானேந்திரிய கிரியை 5.

1 சப்தம் - இதனை ஆகாயத்தினிடமிருந்தறிவது.
2 ஸ்பரிசம் - இதனை வாயுவினிடமிருந்தறிவது.
3 ரூபம் - இதனை தேயுவினிடமிருந்தறிவது.
4 ரசம் - இதனை அப்புவினிடமிருந்தறிவது.
5 கந்தம் - இதனை பிருதிவியினிடமிருந்தறிவது.

### கன்மேந்திரிய கிரியை 5.

1 வசனம் - இது ஆகாயத்தினிடமிருந்து வசனிக்கும்
2 தானம் - இது வாயுவினிடமிருந்து இடுத லேற்றல் செய்யும்
3 கமனம் - இது தேயுவினிடமாக நின்று நடப்பிக்கும் [கழிக்கும்
4 விசர்க்கம் - இது அப்புவினிடமாக நின்று மலஞ்சலாதிகளைக்
5 ஆனந்தம் - இது பிருதிவியினிடமாக நின்று மர்மஸ்தானங்களில் ஆனந்தத்தை விளைவிக்கும்.

### கரணம் 4.

1 மனம் - இது வாயுவின் கூறாக அலைந்து விஷயங்களை நினைக்கும்
2 புத்தி - இது தேயுவின் கூறாக ரூபபேதங்களைத் தெரிவிக்கும் [பும்
3 அகங்காரம்-இது பிருதிவியின்கூறாக விஷயங்களைக்கொண்டெழுப்
4 சித்தம் - இது அப்புவின்கூறாக விஷயங்களைப் பற்றச்செய்யும்.

### அறிவு 1.

அறிவு - உள்ளம் இது ஆகாயத்தின் அம்சமாகையால் உச்சியினின்று சகல விஷயங்களையும் நோக்கி நல்வினை தீவினையெனப் பகுத்தறியும்.

இதுவரையிலும் கூறப்பட்டுள்ள தத்துவம் 30-ம் ஆத்தும தத்துவமெனப்படும்.

### நாடி 10.

இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புருடன், வைரவன், சங்கினி, குகு இந்த 10 நாடிகளின் இருப்பிடங்களும் ஒடுக்கங்களும் முன்னரே கூறப்பட் டிருக்

கின்றன- இவைகள் யாவும் தேகத்தை போஷிக்குமாறு அன்ன பானாதிகள் செல்லும் மார்க்கமாகவும், இரத்தநீர் ஓட்டங்களுக்கு மார்க்கமாகவும், தேகத்தை வளைக்கவும், நிமிர்த்தவும், குறுக்கவும், பெருக்கவும் கத்திரிக்கோல்போல ஒன்றுக்கொன்று மாறலாகக் கப்பிக் கயிற்றைப்போல இழுத்துப் பிடித்திருக்கின்றன.

வாயு 10.

பிராணவாயுவானது லலாட மத்தியிலே தோன்றி,சித்திர நாடியிலே விழுந்து மூலாதாரத்திலே ஓம் என்று உதித்து, நாபிச்சக்கரத்திலே ரீம் என்று முட்டி இடைகலை பிங்கலைகளிலே ஓடி கபாலத்தைச் சுற்றி நாசியின் வழியாய்ப்புறப்பட்டு நான்கு விரற்கடைப்பிரமாணம் கழிந்துபோய் எட்டு விரற்கடைப்பிரமாணம் மீந்து தானின்ற ஸ்தானத்திலேயே தாக்கும் இப்படித்தாக்குவது உத்தமதேகிக்கு நாழிகை ஒன்றுக்கு 360 சுவாசமாக கொல்லன் துருத்திக்குட் காற்றேறுவதுபோலேறும். இப்படி ஏறும் சுவாசமானது இராப்பகலாகிய 60 நாழிகை யுள்ள நாள் ஒன்றுக்கு 21600-சுவாசமாகின்றது. இதனில் 7200 சுவாசம் வெளிப்படும்; 14400 சுவாசம் உள்ளடங்கும்.

அபானவாயுவானது குதத்திற்கும் குய்பத்திற்கும் நடுவே நின்று தனக்குரிய விசர்க்கத் தொழில்களாகிய மலமூத்திராதிகளைக் கழிக்கும்.

வியானவாயுவானது தோளிலே நின்று 7200 நரம்புகளில் சென்று நீட்டல் முடக்கல், பரிசம் அன்னசாரத்தை அங்கங்கே நிரப்பி, பித்தத்தை மிஞ்சவொட்டாமல் காக்கும்.

உதானவாயுவானது தனக்குரிய சோஷணத் தொழிலாகிய உதராக்கினியை எழுப்பி அன்ன சாரத்தை ஜீரணிக்கச் செய்து நாடிகளில் செலுத்தி, சரீரத்தை வளர்க்கும்.

சமானவாயுவானது தனக்குரிய போஷனத் தொழிலைமேற்கொண்டு நாபிஸ்தானத்திலே நின்று பரவி வாயுகளை மீறவொட்டாமல் சமப்படுத்தி சுவை, தண்ணீர், அன்ன முதலியவற்றிலுண்டான எவ்விதக் குற்றங்களையும் நீக்கி, சரீரத்தில் பரவச்செய்து உடலைக் காக்கும்.

நாகனென்னும் வாயுவானது சகல கலைகளை யுணரவும் பார்க்கவும், கண்விழிக்கவும், ரோமம் சிலிர்க்கவும் செய்யும்.

கூர்மனென்னும் வாயுவானது மனத்தினிடமாக நின்று கொட்டாவி, வாய்மூடல், சிரித்தல், கண்விழித்துமூடல் ஆகிய இவற்றைச் செய்யும்.

கிரிகரன்என்னும் வாயுவானது நாவு, நாசி, இவைகளினின்று கசிவு உண்டாகுவதுமின்றி தும்மல் இருமல் முதலியவற்றை உண்டாக்கும்.

தேவதத்தன் என்னும் வாயுவானது சோம்பல், கோபம் முதலியவற்றை யுண்டாக்குவதுடன் குதம் குய்யம் முதலிய விடங்களில் சஞ்சரிக்கும்.

தனஞ்செயன்என்னும் வாயுவானது நாசியிலிருந்து தேகமெல்லாம் வீங்கச்செய்து பிராணன் சென்றபின் எல்லாவாயுகளும் தேகத்தைவிட்டுப் போனபின் மூன்றுவது நாளில் தலைவெடித்து அப்புறப்படும்.

### ஆசயங்கள் 5

அமாசயம் - அன்னம் தண்ணீர்ப் பருகுமிடம் நிற்பன்
சலாசயம் - அன்னத்தில் தண்ணீர் பிரிந்து இறங்குமிடம் நிற்பன்
மலாசயம் - மலஞ் சேருமிடம் நிற்பன்.
சலாஞ்சயாசயம் - மூத்திரம் சேருமிடம் நிற்பன்
சுக்கிலாசயம் - விந்து நிறைந்திருக்குமிடம் நிற்பன்.

### கோசங்கள் 5.

அன்னமயம்:—தூலசரீரத்தை அழியாமல் நிலைக்கச்செய்யும்.

பிராணமயம்:—பிராணவாயும் கன்மேந்திரியங்களும் சேர்ந்து சொப்பனத்தில் சூட்சும சரீரத்துடன்கூடி விவகாரம் செய்யும்.

மனோமயம்:—மனதும் கன்மேந்திரியங்களும் சேர்ந்து சொப்பனத்தில் சூட்சும சரீரத்துடன்கூடி விவகாரம் செய்யும்

விஞ்ஞானமயம்:—புத்தியும் பொறிகளும் சேர்ந்து சொப்பனத்தில் சூட்சம் சரீரத்துடன்கூடி விவகாரம் செய்யும்.

ஆனந்தமயம்:—காரணசரீரத்திற்கு ஆதாரமாக இருக்கும்

### ஆதாரங்கள் 6.

மூலாதாரம்:—காலென்பு இரண்டும் கதிரென்புங் கூடியஇடம் குய்யம். குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவே குண்டலிவட்டமாய் அதன்நடுவே திரிகோணமும் அதன் நடுவே நாலிதழ்களையுடைய

வட்டமான கடப்பம் புஷ்பத்தைப் போன்றிருக்கும். அந்தப்புட்பத்தின் நடுவில் ஓங்காரவெழுத்து நிற்கும். அந்த ஓங்காரத்தில் அதிஷ்டான மூர்த்தி விநாயகர் தேவிவல்லபை தோன்றுவர்.

சுவாதிஷ்டானம்:—இது முற்கூறப்பட்ட மூலாதாரத்திற்கு இரண்டு விரற்கடைக்கு மேலிருப்பது இது லிங்கத்திற்கும் நாபிக்கும் நடுவிணு தண்டின்மத்தியில் அமைத்துள்ள நாற்கோணஸ்தானம் அங்கோணத்தின் நடுவே ஆறிதழையுடைய புட்பவட்டமும் அதன் மத்தியில் லிங்கபீடமும் நகாரவெழுத்தும் நிற்கும். அந்த நகாரத்தின்நடுவில் அதிஷ்டானமூர்த்தி பிரமன்தேவிசரஸ்வதி தோன்றுவர்.

மணிபூரகம்:—இது முற்கூறப்பட்ட சுவாதிஷ்டானத்திற்கு எட்டு விரற்கடைக்குமேல் இருப்பது. இது கோழிமுட்டைப்போல 1008-நாம்பு நாளங்களும்சூழ வேறான்றிருக்கும். இதனை உந்திக் கமல மெண்பர். இது உந்திக்குநேரில் அப்பு ஸ்தானத்தில் ஏழாம்பிறைக்கிணங்கி யிருக்கும் இதன்நடுவே 10-இதழையுடைய ஒரு புட்பவட்டமும் அந்த புட்பத்தின்நடுவே மகார வெழுத்து நிற்கும். அந்த மகாரத்தின்நடுவில் அதிஷ்டான மூர்த்தி மகாவிஷ்ணு தேவி மகாலட்சுமி அமர்ந்திருப்பர்.

அனுகதம்:—இது முற்கூறப்பட்ட மணிபூரகத்திற்கு பத்து விரற்கடைக்குமேல் தோற்றுவது இது இருதயஸ்தானத்தில் முக்கோணரூபமாய் நடுவிலே 12-இதழ்களையுடைய புட்பம்போற்றோன்றும்; இதன் நடுவில் சிகாரவெழுத்துதோற்றும். அதன்நடுவில் அதிஷ்டான மூர்த்தி உருத்திரனும் தேவி உருத்திரியும் அமர்ந்திருப்பர்.

விசுத்தி:—இது முற்கூறப்பட்ட அனுகதத்திற்கு 10-விரற்கடைக்குமேல் இருப்பது. இது கண்ட ஸ்தானத்தில் அறுகோணமாக இருக்கும். அந்த அறுகோணத்தின் நடுவில் 16-இதழ்களையுடைய ஒரு புட்பவட்டமும் நடுவில் வகாரமென்னும் எழுத்தும் தோன்றும். அந்த வகாரத்தின்நடுவில் அதிஷ்டான மூர்த்தி மகேஸ்வரரும் தேவிமகேஸ்வரியும் அமர்ந்திருப்பர்.

ஆக்ஞை:—இது முற்கூறப்பட்ட விசுத்திக்கு 12-விரற்கடைக்கு மேலிருக்கும். இது லலாடஸ்தானத்திலுள்ளது. இது வி[illegible]

தண்டின்முடியாக வடிவுற்றிருக்கும். நெற்றி புருவம் இவைகளின் வெளியாய் ஆகாயஸ்தானத்தில் மூன்றிதழ்களையுடைய ஒரு புட்பத்தைப்போல் தோற்றும். அதன் நடுவில் யகாரஎழுத்து தோன்றும்; அதன்நடுவில் அதிஷ்டான்மூர்த்தி சதாசிவனும் தேவிமனோன்மணியும் அமர்ந்திருப்பர்.

### மண்டலம் 3.

அக்கினிமண்டலம்:—இது மூலாதாரத்திற்கு இரு விரற்கடைக்குமேலே சுவாதிஷ்டானத்திற்கு கீழே முச்சுடராய்த் தோற்றும்.

ஆதித்தமண்டலம்:—இது மணிபூரகத்திற்கும் அனாகதத்திற்கும் நடுவில் வளையமாக உந்திக்கு நான்கு விரற்கடைக்கு மேலே தோற்றும்.

சந்திரமண்டலம்:—இது விசுத்திக்கு மேலே ஆக்ஞைக்குகீழே சிரசின் மையத்தில் தோற்றும் இதனில் கோடிசந்திரசூரியர்கள் உதயமானதுபோல் பிரகாசம் தோன்றும. இதனை அமுதகலை என்பர் அமுதம் மேல்நோக்கி அங்கினி கீழ் நோக்கி சரியாக நிற்கும் இதற்கு நடுவில் பராசத்தி பிரசன்னமாகும்.

### மலம் 3.

ஆணவம்:—இது செம்பினின்ற களிம்பைப் போலும் நெல்லினுமியைப்போலும் ஆத்மாவை மேலெழவொட்டாமல் காத்து யானென்ற அறியாமையைப் பிறப்பித்து தன்னுடைமையையும் களத்திர புத்திர மித்திரர்களை பெரியதெனை மயக்கமுற்று அபிமானித்திருக்கும்

காமியம்:—இது தனது திருஷ்டியில் கண்டவைகளை யெல்லாம் இச்சிக்கின்றதும் இதாகிதத்தில் புண்ணிய பாவங்களை யுண்டாக்குவதுமாம்

மாயை:—இது தனதல்லாததை தனதென்று பாவித்து மற்றவர்களுக்கு இடையூறு விளைவிக்கத் தூண்டுவதாம்.

### தோஷம் 3.

வாதம்:—இது வாயுவினால் உற்பத்தியாகி பிராணவாயு பிரசண்டமாகி அக்கினியும் அப்புங்கலந்தபோது உண்டாவதாம்.

பித்தம்:—இது தேய்வோடு வாயு சம்பந்தப்பட்ட ஆதாரத்தை மூற்கொண்டு மிகவும் அசைத்து இதயகமலத்தில் ஊன்றியபோதுண்டாவதாம்

சிலேத்துமம்:—இது அப்பு, தேயு, வாயு இம்மூன்றும் உடலில் கலவாமல் கலக்கி லுண்டாவதாம்.

### ஈசணைகள் 3

தாரேஷணை - பெண்ணாசை கொள்ளல்.

புத்திரேஷணை - புத்திரர்மீது ஆசைகொள்ளல்.

அர்த்தேஷணை - பொருளாசை கொள்ளல்.

### குணங்கள் 3.

ராஜஸம் - இக்குணத்தில் பிரதி பிம்பித்தோர் தர்மம், பிறருயிரை தன்னுயிர்போ லெண்ணல், அகங்காரம், பகைவரை வெல்லல், பலசாஸ்திரங்களை வாசித்தல், உண்மையறிதல், புகழ்வேண்டல் முதலிய அமிர்த குணங்களை மேற்கொண்டிருப்பர்.

தாமஸம் - இக்குணத்தில் பிரதிபிம்பித்தோர் வஞ்சனை, வழி கடந்து வாதாடல், சோம்பல், நித்திரை, கடுங்கோபம் அதிகவுணவு வேண்டல் ஆகிய இக்குணங்களை மேற்கொண்டிருப்பர்.

சாத்வீகம் - இக்குணத்தில் பிரதிபிம்பித்தோர் பொய்கொலை, களவு, கோபம் நன்றிமறத்தல் வாயாடல், பழிகூறல் முதலியகுணங்களை மேற்கொண் டிருப்பர்.

### வினைகள் 2.

நல்வினை - புண்ணியம் அதாவது தர்மம் முதலிய சத்கிருத்தியங்களைச் செய்தல்.

தீவினை - பாவம் அதாவது கொலைகளவு முதலிய துற்கிருத்தியங்களைச் செய்தல்

### விகாரங்கள் 8.

காமம் - அதிக ஆசை.

குரோதம் - பிணக்கு.

லோபம் - ஈயாமை, பிடிவாதம்.

மதம் - கருவம், மதியாமை.

மோகம் - பிறமாதர் பிரியம்.

மாச்சரியம் - மனதில் விரோதம் வைத்தல்.

இடும்மை - உதாசினம்.
அருமை - பொறுமை.

அவத்தைகள் 5.

சாக்கிரம் - லலாடஸ்தானக் கருவிகளி லயப்பட்டது.
சொப்பனம் - கண்டஸ்தானம் கடந்திருக்கப்பட்ட கருவிகளி லயப்பட்டது.
சுழுத்தி - இதயஸ்தானத்தி னுட்பட்ட கருவிகனி லயப்பட்டது.
துரியம் - நாபிக் கமலத்தி னுட்பட்ட கருவிகளி லயப்பட்டது.
துரியாதீதம் - குதஸ்தானத்தி னுட்பட்ட கருவிகளிலயப்பட்டது.

முற்கூறப்பட்ட கருவிகள் 96-ம் காரியமாகத் தேகத்தைக் காத்து நிற்கும்படி எங்கும் ஊடாடி இருக்கின்றன. இதற்குமேல் தேகத்தின் தன்மையைப்பற்றிக்கவனிக்கும்போது உடலானது உதிரஸ்தானத்தில் உற்பவித்த வளவில் அத்திமலர்போல் மலர்ந்து கருவுண்டாகும்; அது அவ்வென்ற அட்சரத்தில் ஒடுங்கிநிற்கும்; அதில் நாடி தோன்றும்; அந்த நாடிகளினின்று தத்துவங்கள் தோன்றும் தத்துவங்கள் நிலைபெற என்பு, தசை, நரம்பு முதலியவைகளின் கூட்டுறவுண்டாகும். அக்கூட்டுறவாகிய சரீரத்தை இடைகலை பிங்கலை சுழுமுனை என்றும் திரிநாடிகள் இயக்கும் இதனாற்றானே, இச்சரீரத்தில் நிலைபெறும் இச்சரீரம் வலுவாக இருப்பதற்காக என்புகளால் கோக்கப்பட்டிருக்கின்றது. எங்ஙனமெனின் கண்டத்தில் 30, முண்டஸ்தானத்தில் 54, கைகளில் 64, கால்களில் 60, ஆக 208 என்புகளால் உச்சிமுதல் கால்வரையினும் ஓர் கோவையாக தோற்றும் இதற்கே கங்காளமெனக் கூறுவர். இவ்வென்புகளுக்கு ஆபத்து நேரா வண்ணம் கை ஒன்றுக்கு பேசிகள் (சதை) 100, கால் ஒன்றுக்கு பேசிகள் 100, உச்சிமுதல் குதம்வரையில் பேசிகள் 100, ஆக 500-பேசிகளைக்கொண்டு பின்னலிட்டவாறு மூடியிருக்கும்; இவைகள் இரண்டிற்கும் யாதொருகெடுதியும் நேராவண்ணம் 72000-நாடி நரம்புகளால் உச்சிமுதல் உள்ளங்கால் வரையினும் இரு உரிகள் கீழ்மேலாக மாறி இருப்பதைப்போல வலது பக்கத்திலெழுந்த நரம்புகள் இடது பக்கமாகவும், இடதுபக்கத்திலெழுந்த நரம்புகள் வலதுபக்கமாகவும் ஓடிப்பின்னி வலுவோடிருக்கச் செய்யும்; இவ்வித விகாரங்களையெல்லாம் தெரியாமலிருக்க அங்கியைப்போன்ற தோலொன்றினைக்கொண்டு மூடப்பட்டிருக்கின்றது.

இதனில் 3½ கோடி ரோமத்துவாரங்கள் உண்டு; அவைகளில் கண்ணுக்குப் புலப்படக்கூடியது 9, இதனையேநவத்துவாரங்கள் என்பார்.

அவைகளில் வாய் ஒன்றே மிகப்பெரியது; இதன்வாயலாகத்தானே இச்சரீரம் நிலைபெறுமாறு அன்னபானாதிகளை உள்வாங்கும்; இதனைப்பற்றிக் கவனிக்கும்போது இதுவும் ஒரு கோவையாகத்தோன்றும் எங்ஙனமெனின் வாய் முதலாகத்தொண்டை, இரைகுழல், இரைப்பை, சிறுகுடல், பெருங்குடல், குதம்வரையில் ஒரு தொகுப்பாகவும் இதன்மூலமாக வாங்கப்பட்ட அன்னபானாதிகளை ஜீரணிக்கச்செய்து சத்தை தேகத்தில் செலுத்தி போஷிக்கவும் அசத்தை வெளியாக்கவும் இடையில் நுரையீரல், இருதயம், கணையம், பித்தப்பை ஈரல்கள், குண்டிக்காய், நீர்ப்பை முதலிய உறுப்புகளையும்உண்டாக்கப்பட்டிருக்கின்றன. இக்கருவிகள் கிரமப்படி அவையவைகளின் தொழில்களை நடத்திவரின் இச்சரீரத்திற்கு ரோகம் என்பது கிடையாது அப்படி நடத்தத் தவறின் அப்போது உண்டாகும் வேறுபாட்டிற்கே ரோகமென்று கூறப்பட்டதாகும். இதற்கு முதற்காரணமாக உள்ளது வாதபித்த சிலேத்தும மென்னும் திரிதோஷங்களின் பிரகோபமே ஆகையால், அதனைப் பற்றிச் சிறிது கூறுவோம்.

## திரிதோஷங்களின் தொழில்.

### வாதம்

வாதமானது அபானவாயுவைச் சேர்ந்து இடுப்பினிடமாகக் கீழிறங்கி, காமக் கொடிகளைப்பற்றி அங்கே ஒடுக்க முற்று பின்னும் வியாபித்து என்புகளுக்கு மேலே உள்ள 72000 நரம்புகளின் வழியாய் ரோமதுவாரங்கள்தோறும் புகுந்து மாங்கிசத்தில் படர்ந்து விந்து, நீர், மலம், வியர்வை முதலியவற்றைக் கழியச்செய்யும்.

### பித்தம்.

பித்தமானது பிராணவாயுவைச் சேர்ந்து கண்டத்தினிடமாக நின்று இரைப்பை, நீர்ப்பைமுதலியவற்றின் தொழில்களை நடத்தும் பொருட்டு ஜீவாக்கினியை எழுப்பி இருதயத்தின் தொழிலை நடத்தும்.

### சிலேத்துமம்

சிலேத்துமமானது சமானவாயுவைச் சேர்ந்து சுழிமுனையை இருப்பிடமாகக் கொண்டு உச்சியினின்று சிங்குவை உண்ணாக்கு நிணம், மச்சை, இரத்தம், மூளை, பெருங்குடல், கண்கள் முதலிய விடங்களில் பரவி நிற்கும்.

## ரோகியின் வாய்மொழிகளால் வாதபித்தசிலேத்தும தொந்தாதொந்தங்களை அறிதல்.

### வாத தேகக்குறி

வாதத்தால் எடுத்ததேகம் கடினம், தடிப்பு, கருமை அல்லது செம்மை, தேகத்தில் வாயு பெருக்கம், சிற்றின்பக்காதல் தாதுநட்டம், தேக உளைச்சல், அன்னஞ்செல்லாமை முதலிய குணங்களை உடைத்தாயிருக்கும்.

### வாதபித்த தேகக்குறி

வாதபித்தத்தால் எடுத்ததேகம் மெலிவு, கருமைநிறம், பொய்யும் மெய்யும் கலந்து பேசல், மைதுன அபேட்சி, அறிவின்மை, கோபம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும். அன்றியும் உண்ணும் பண்டங்களில் காரந்துவர்ப்பு முதலிய சுவைகளில் அதிக இச்சையை யுடைத்தாயிருக்கும்,

### வாதசிலேத்தும தேகக்குறி

வாத சிலேத்துமத்தால் எடுத்ததேகம் தடிப்பு, மதங்கொண்ட யானைபோல் அசைந்து நடத்தல், செம்மைநிறம், மாத்ரிச்சை சகலகலைக்கியானங்களையும் அறியத்தக்க வல்லமை யோகப்பயற்சி முதலிய குணங்களைப் பெற்றிருக்கும் இன்னும் உண்ணும் உணவுகளில் புளிப்பு, காரம் முதலிய சுவைகளில் அதிக இச்சையையுடைத்தாயிருக்கும்

### பித்த தேகக்குறி

பித்தத்தால் எடுத்த தேகம் நிறம் வெண்மை, தேகவறட்சி அளவு கடந்த போகம், அற்ப வுண்டி, சொற்ப நித்திரை, பெரியார் தம்மிடத்தில் மதிப்பு, மனக்குழப்பம், பலகலைகளையும் சரிவரக் கற்றல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும். அன்றியும் உண்ணும உணவுகளில் புளிப்பு சுவையின் பேரில் அதிக எண்ணம் உடைத்தாயிருக்கும்.

### பித்த வாத தேகக்குறி

பித்த வாதத்தால் எடுத்த தேகம் செம்மை அல்லது வெண்மை நிறம், சுகந்தவாசனைகளில் அதிகப்பிரியம், அறிவுடைமை, குயிலின் குரலினை யொத்த தொனி, சிணுங்கிருமல், தேகவறட்சி முதலியவற்றைப் பெற்றிருப்பதுடன். உண்ணும் உணவுகளில் காரம் புளிப்பு முதலியவைகளில் அதிக ஆவல் கொண்டிருக்கும்.

### பித்த சிலேத்தும தேகக்குறி

பித்த சிலேத்துமத்தினால் எடுத்த தேகம் சண்பகப்பூ நிறமான மேனி, அளவு கடந்த மோகம், இனிமை தரத்தக்க குரலோசை, கற்றாரை ஆதரிக்கும் நல்லெண்ணம், நடுநிலையான யோக அப்பியாசம், பல்லுயிரை இரட்சிக்கும் தர்மசிந்தை முதலியவற்றை பெற்றிருக்கும்.

### சிலேத்தும தேகக்குறி.

சிலேத்துமத்தினால் எடுத்ததேகம் சிவப்பு, கொழுமை, வியர்த்தல்,மோகம், குமறலானகுரலோசை, அடக்கமொடுக்கம், பொய்யை மெய்போல் பேசல் ஆகிய இக்குணங்களை யுடைத்தாய் இருப்பதுடன் உண்ணும் உணவுகளில் இனிப்பான சுவையை அதிகப் பிரியப்படும்.

### சிலேத்தும பித்த தேகக்குறி.

சிலேத்தும பித்தத்தால் எடுத்ததேகம் சிவப்பு அல்லது பசுமை நிறம், •செந்நிறமான தேகரோமங்கள், வெடிப்பான குரலோசை, சத்தியநெறி, ஸ்ரீவசியம் முதலியவற்றை பெற்றிருப்பதுடன் உண்ணும் உணவுகளில் இனிப்பு புளிப்பு முதலியவைகளில் அதிக இச்சை யுடைத்தாயிருக்கும்.

### சிலேத்தும வாத தேகக்குறி.

சிலேத்தும வாதத்தால் எடுத்த தேகம் தடிப்பு, கருமை அல்லது செம்மைநிறம், போகப்பிரியம், போகமுதலிய சாதனையைக் கற்றறிதல் பலகலைகளை ஆராய்தல், பெரியோர் தம்மை ஆதரித்தல் தைரியம், முதலியவற்றை உடைத்தாயிருப்பதுடன் உணவுகளில் புளி காரம் முதலிய சுவைகளில் மிகுந்த இச்சை கொண்டிருக்கும்.

இதுவரையினும் திரிதோஷங்களினாலும் அவைகளின் தொந்தங்களினாலும் இச்சரீரத்தில் உண்டான வேறுபாடுகளை உரைத்

தோம் இதற்குமேல் அத்திரிதோஷப் பிரகோபங்களினால் அந்தந்த தேகிகட்கு உண்டாகும் ரோகங்களைக் கேட்பாயாக.

வாததேகிகட்கு வரும்ரோகம்.

சிதம்விழுதல், வயிறுப்பல், வாயுதிரட்சி, கிராணி, மகோதரம், நீராமை, சூலை, அண்டவாதம், நீர்கிரிச்சனம், மூலரோகம், முதலிய வைகளாம்.

வாதபித்ததேகிகட்கு வரும்ரோகம்.

உஷ்ணவாயு, வாந்தி, செறியாமை, ஏப்பம், நீர்எரிச்சல், தாது நட்டம், தேகஉளைச்சல்,சோம்பல்' கைகால்அசதி, குன்மம் அக்கினி மந்தம், ருசிகேடு முதலியவைகளாம்.

வாதசிலேத்துமதேகிகட்கு வரும்ரோகம்.

திமிர், உளைச்சல், இருமல், சுரம், ஜன்னி, வெடிசூலை, இருத்து ரோகம், ஈளை, மந்தாரகாசம், உள்வீச்சு, பிறவீச்சு, வீக்கம் முத லியவைகளாம்.

பித்ததேகிகட்கு வரும்ரோகம்.

தேகவெப்பு, அஸ்திசுரம், உஷ்ணவாயு, அதிசாரம், பைத்தி யம், சோபை, தேக எரிச்சல், மனக்கலக்கம். தாகம், மயக்கம் தியக்கம், பெரும்பாடு, இரத்தப்பித்தபிரமேகம் முதலியவைகளாம்.

பித்தவாத தேகிகட்கு வரும் ரோகம்

தாதுநட்டம், குன்மம், சூலை, கிராணி, வயிற்றிரைச்சல், செரி யாமை, நீர்க்கோவை, ஆயாசம், மயக்கம், மூர்ச்சை, முறைக்காய்ச் சல், வீக்கர், மூலவாயு முதலியவைகளாம்.

பித்தசிலேத்தும தேகிகட்கு வரும் ரோகம்

அஸ்திசுரம், ஈளை, கண் காது மலம் மஞ்சளித்தல், வயிறு பொருமல், உளமாந்தை, பீநசம், ரத்தவீக்கம், காமாலை, சோபை முதலியவைகளாம்.

சிலேத்தும தேகிகட்குவரும் ரோகம்

க்ஷயம், ஈளை, சுவாசகாசம், மந்தாரகாசம், சன்னி, சுரம், விஷ தோஷம், விக்கல், இருத்துரோகம், கரப்பான், விரணம், மார டைப்பு, தூக்கம், காமாலை, பாண்டு, சோபை முதலியவைகளாம்.

### சிலேத்துமபித்த தேகிகட்கு வரும் ரோகம்

வீக்கம், குளிர்சுரம், உளைச்சல், இருமல், வாந்தி, மாரடைப்பு சுவாசம், விக்கல், பாண்டு, அதிசாரம் முதலியவைகளாம்.

### சிலேத்துமவாத தேகிகட்கு வரும் ரோகம்

வயிற்றுப்பொருமல், கனத்தவீக்கம், சத்திவிக்கல், வலி, சன்னி, தோஷம், ஈளை, இருமல், சோபை, பாண்டு, சூலை, பக்க வாதம் முதலியவைகளாம்.

### வாத தேகிகட்கு உஷ்ணமிகின் வரும் ரோகம்

அதிசாரம், உளைச்சல், பெரும்பாடு, அக்கினிமந்தம்,கரப்பான், இரத்தப்பிரமேகம், நீர்க்கோவை, சூலை முதலியவைகளாம்.

### வாத தேகிகட்டு வாயுமிகின்வரும் ரோகம்

உள்வீச்சு, புறவீச்சு, திமிர், ஆனந்தவாயு, பக்கசூலை, துடை குறுக்கு,விலா பிடரி நெஞ்சு நரம்பு முதலியவிடங்களில் வலி, நரம் பிழுப்பு, தேகத்தில் குத்தல், மாரடைப்பு முதலியவைகளாம்.

### வாத தேகிகட்கு சீதளம்மிகின் வரும் ரோகம்

இளைப்பிருமல், வலி, சன்னி, தோஷம், குளிர்காய்சல், விரணம், வாந்தி, மயக்கம், சோர்வு, மலபந்தம், வீக்கம், சூலை, பாண்டு தனுர்வாதம், பக்கவாதம் முதலியவைகளாம்.

### பித்த தேகிகட்கு உஷ்ணமிகின் வரும் ரோகம்

க்ஷயம், அஸ்திசுரம், சத்தி, குன்மம், அதிசாரம், வயிற்றுவலி, மூலவாயு, நாக்கசப்பு, இரவில் கனவு, பைத்தியம், எரிவு, தாகம் முதலியவைகளாம்.

### பித்ததேகிகட்கு வாயுமிகின் வரும்ரோகம்

வலி குன்மம், சூலை, வாந்தி, விக்கல், அரோசகம், பைத்தியம், செரியாமை, புளித்த ஏப்பம், ஈரல்வலி, மார்புவலி, தலைகிறுகிறுப்பு, அசதி, தாதுநட்டம் முதலியவைகளாம்.

### பித்ததேகிகட்கு சீதளமிகின் வரும்ரோகம்

பசியந்தம், மூலக்கடுப்பு, இருமல், வாந்தி, குளிர்சுரம், காமாலை, சோகை, வீக்கம், நாவழுவழுப்பு, தோஷம் முதலியவைகளாம்.

### சிலேத்தும தேகிகட்டு உஷ்ணமிகின் வரும் ரோகம்

க்ஷயம், இருமல், சுவாசகாசம், விப்புருதி, நாசிரோகம், கொட்டாவி, விக்கல், மந்தாரகாசம் முதலியவைகளாம்.

### சிலேத்தும தேகிகட்கு வாயுமிகின் வரும் ரோகம்

குன்மம், மாரடைப்பு, சுவாசகாசம், குரல்கம்மல், நாவழுவழுப்பு, வாய்நீரூறல், மலத்தோடு சீதம் விழுதல், தேகம் குத்தல், திமிர்வாதம், வலி, இழுப்பு, பாண்டு, மயக்கம், தியக்கம், விக்கல் முதலியவைகளாம்.

### சிலேத்தும தேகிகட்கு சீதளம்மிகின் வரும்ரோகம்

சுவாசமடைப்பு, மூர்ச்சை, மயக்கம், வியர்வை, விக்கல், சன்னிதோஷம், வீச்சு, வயிற்றுப் பொருமல் முதலியவைகளாம்.

### ரோக சாத்தியா சாத்திய விளக்கம்

திரிதோஷ மென்ற வாத பித்த சிலேத்துமமென்ற மூன்றும் ஒன்றுகூடி எழுந்தாலும் அல்லது அடங்கினாலும் சன்னி என்று கூறுவர்.

சிலேத்துமத்தில் பித்தமும், வாதத்தில் சிலேத்துமமும் வலுவு கொண்டால், சிறிதுநாட் சென்று பிணிதீரும்.

வாதத்தில் பித்தமும், 'பித்தத்தில் வாதமும், பித்தத்தில் சிலேத்துமமும், சிலேத்துமத்தில் பித்தமும் வலுவுகொண்டால், அவிழ்தங்களின் பிரயோகத்தால் எளிதில் குணமாகும்.

கபத்தில் வாதமும், வாதத்தில் கபமும் வலுவுகொண்டால், கஷ்டசாத்தியமென ஆன்றோர் கூறியிருக்கின்றனர்.

இதற்குமேல் நாடிப்பரிட்சையினால் ரோக நிதானங்களை இன்னதென்று அறியும் மார்க்கத்தை உரைப்போம். இதனை நூல் வழியாகத் தெரிந்துகொள்வதிலும் தக்க ஆசானிடம் சிலநாளிருந்து அவர்மூலமாக ரோகிகளைப் பலதரம் சந்தேகமற பரிட்சித்து உணர்வதே சாலச் சிறந்தது.

### நாடிப்பரிட்சையால் வாத பித்த சிலேத்துமம் அறிவது

வாதபித்தசிலேத்தும நிதானத்தை அறிய வேண்டின் முதலில் பொதுவாக தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் நாடியின் ஸ்தானம், நாடி பார்க்கும்விதம், காலம், நாடிகளின் இருப்பிடம், கால

வேற்றுமை, நாடிவிகல்பம், வாதபித்தசிலேத்தும தொந்தாதொந்தங்கள், சன்னி, மரணநாடி ஆக இவற்றையும் அஷ்டவிதப் பரிட்சையையும் கண்டுணர்தல் சிறந்த பண்டிதன் கடமையாதலால் ஈண்டுக் கூறலாயினேன்.

## நாடியின் ஸ்தானம்

கையின் பெருவிரலிற்கு ஒரு விரற்கடை விட்டு மூவிரலால் மெதுவாக அழுத்தியும் தளர்த்தியும் தொட்டுப் பரிட்சிக்க முதல் விரலில் உணர்வது வாதம், இரண்டாவது விரலில் உணர்வது பித்தம், மூன்றாவது விரலில் உணர்வது சிலேத்துமம். இவைகளை முறையே பிரம விஷ்ணு ருத்திர நாடியெனவும் கூறுவர்.

## நாடிபார்க்கும் விதம்

புருஷர்களுக்கு வலது கரத்திலும், ஸ்ரீகளுக்கு இடது கரத்திலும் பரிட்சிப்பதே உத்தமமென்று ஆன்றோர் கூறுவாராயினர்.

## நாடிபார்க்குங் காலம்

காலை 10 நாழிகைவரையில் வாதத்தின் சுரப்பு, அதற்குமேல் பகல் 10 நாழிகைவரையில் பித்தத்தின் சுரப்பு, அதற்குமேல் அந்தி 10 நாழிகைவரையில் சிலேத்துமத்தின் சுரப்பு. இப்படியே இரவு 30 நாழிகைக்கும் கண்டறிக.

## நாடியிருப்பிடம்

வாதம் நாபிக்குகீழும், பித்தம் கண்டத்தின் கீழும், சிலேத்துமம் உச்சியின் கீழும் குடிநிலைபாக வீற்றிருக்கும்.

## நாடிபார்க்குங்காலம்

சித்திரை வைகாசி முதலிய மாதங்களில் உதயத்திலும், ஆனி, ஆடி, ஐப்பசி, கார்த்திகை முதலிய மாதங்களில் மத்தியானத்திலும், மார்கழி, மாசி முதலியமாதங்களில் மாலைப்பொழுதிலும், பங்குனி, ஆவணி, புரட்டாசிமுதலிய மாதங்களில் இரவுகாலத்திலும் பார்க்க நாடி தெளிவுறத் தோன்றும்.

## நாடிவிகல்பம்

அப்பியங்கஸ்நானம் செய்தவர்களுக்கும், அளவுக்குமிஞ்சி ஆகாரம் கொண்டவர்களுக்கும், கொடிய வெய்யலில் அலைந்து திரிந்தவர்களுக்கும், குதிரை சவாரி செய்தவர்களுக்கும், காமவிடா

யாலாலிங்கனம் செய்தவர்களுக்கும், கஞ்சா, அபினி, மதுபான முதலியவைகளால் புத்தி சபலப்பட்டிருக்கின்றவர்களுக்கும்,மச்சங்களை அதிகமாக உண்டவர்களுக்கும், வாசியை யடக்கியாளுகின்ற யோகிகட்கும், நாடி சரிவரத் தோன்றாது.

### வாதநாடி

சிறுபிள்ளை தூங்கும் தொட்டிலாட்டம் போலும்,தவளை தத்து தலைப் போலும், ஒணான் சர்ப்பம் அட்டை இவைகளின் நடையைப் போலும், வேலிகளில் துள்ளித்துள்ளி தாண்டுகின்ற குருவி காடை முதலியவற்றைப்போலும், ஆமையின் நடையைப்போலும்தோற்றும்.

### பித்தநாடி

அன்னப்பட்சி, மயில், தாரா, மாடப்புறா, ஊர்க்குருவி, கருடன் முதலியவைகளின் நடைகளைப்போல் வன்மையுறத் தோன்றுவதுடன் சிங்கத்தின் அசைவைப்போல் காட்டும்.

### சிலேத்தும நாடி

கோழி, கொக்கினுறக்கம், ஊர்க்குருவி, சிலந்திப்பூச்சி முதலியவற்றின் நடையை யொத்திருக்கும்.

### வாத பித்தநாடி

சிறு குருவியைப்போல் நடந்து பின்னர் மயில், ஒணான் இவைகளின் நடையைப்போற்றுடிக்கும்.

### வாத சிலேத்தும நாடி

காட்டுக் கோழியைப்போல் நடந்து பின்னர் அட்டையின் நடையைப்போற் றுடிக்கும்.

### பித்த சிலேத்தும நாடி

பாம்பைப்போலசைந்து பின்னர் தவளையின் தத்துதலைப் போற் றுடிக்கும்.

### அசீரணநாடி, தீபனநாடி

அசீரண நாடியானது மதயானையைப்போல் நடக்கும். தீபன நாடியானது சிறுகாக்கையி னுறக்கம்போற் றுடிக்கும்.

### சன்னிநாடி

தலையின்பேரில் விறகுசுமையின் பாரத்தை தாங்கி அசைந்து அசைந்து செல்வதைப்போல நாடி சென்றிடினும், கிறுகிறுவென்று

துடித்துப் பின் அன்னம் அட்டை இவைகளின் நடையைப்போல் தாழ்வடைந்து ஓடிடினும் சன்னிநாடி யென்பர்.

### சுகசன்னி

நாடியானது மந்தமாக கோழி, பாம்பு, மூஞ்சூறு இவைகளின் நடையைப்பெற்று பின் விளக்கின் சுடர்போ லெழுந்து அசைவற்று நிற்பதைப்போலக் காணின் சுகசன்னி நாடி யென்பர்.

### வாதசுரம்

வாளைமீனின் பாய்ச்சலைப்போல் பாய்ந்து துடித்து மந்தகுணத்துடன் சிக்குண்டு அச்சப்பட்ட சர்ப்பத்தைப்போல் தியங்கிமௌனமுற்று மீண்டும் மதங்கொண்ட யானையைப்போல் ஆர்ப்பரித்து இருக்குமாயின் வாதசுர நாடி யென்று புகல்வர்.

### மரணநாடி

வாதநாடியானது வளைந்து முன்னோடிப்பிரண்டாலும், அது மந்தப்பட்டு மயில், தாரா, அன்னம் முதலியவற்றின் நடையைப் பெற்று நேரே ஓடாமல் நிலைதப்பி முன்பாய்ச்சல் பின்பாய்ச்சலாக மாறுதலடையினும் எட்டுநாளில் சடலம்சிவபுரத்தை நாடுமென்பர்.

பித்தநாடியானது தேள்கொடுக்குத் தெறிப்பதைப்போலத் தெறிக்குமாயின் ஒருமாதத்திலும், வல்லூறு, சர்ப்பம் இவைகளின் நடையைப் பெற்று வளைந்து வளைந்து செல்லக்காணின் ஒருபட்சத்திலும், வெட்டுண்ட அரணைவாலைப்போல துடிக்கப்பெறின் எட்டுநாளில் மரணத்தை யுண்டாக்கு மென்பர்.

வாதபித்த இவ்விரண்டு நாடிகளும் கபத்தி லழுந்தி பம்பரம் போல் சுழலுற்றால் உடனே மரணம் சம்பவிக்கும் என்பர்.

வாதநாடியானது ஓங்கிப்பித்தத்தை நாட அங்கு பித்தநாடியும் ஒடுக்கமுற்று சிலேத்துமத்தை நாட அச்சிலேத்தும நாடி தன் நிலைபெயர்ந்து கீழ்நோக்கின் சடலத்திற்கு இறுதி யுண்டாக்குமென்பர். மூன்று நாடிகளும் வீணையைப்போல் தெறிக்குமானால் மூன்றுநாளிலும், சிலேத்துமநாடி அதிர்ந்து தவளையைப்போல் குதித்திடினும் அல்லது பாம்புபோல் புரண்டு ஊர்ந்திடினும் உடனே மரணம் சம்பவிக்கும் என்பர்.

### கருப்பநாடி

வாதநாடி எறும்பு ஊர்வதைப்போல ஊர்ந்திடினும் அல்லது ஆமை அசைவதைப்போல அசைந்திடினும், அல்லது பஞ்சியைப் போல் மெத்தென மெதுவுற்றிருந்திடினும் கருப்பநாடியென்பர்.

### விகல்பநாடி

பித்தநாடி புழுவைப்போல் நிமிர்ந்திடினும், காஷ்டத்தில் நெய் சேர்ந்த காலத்தில் எழுந் தீச்சுடர்போல் தோற்றிடினும், திடுக்கிட்டுக் கிளி பறப்பதைப்போ லொத்திடினும், கடல் அலைபுரண்டு மோதிப்பின் அடங்குவதைப்போல் தோற்றிடினும், நாடி படபடத்து ஓடிடினும் விகாரநாடி யென்று கூறுவர்

### பூதநாடி

பித்தநாடியானது கல்லெறிதல்போலும், ஆட்டுக்கடா பாய்ச்சல்போலும், செக்கிலிட்ட உலக்கைத் திருகலைப்போலும், மூஞ்சூறின் சீறலைப்போலும், பந்தடிப்பட்டு கிளம்புவதைப்போலும, ஏற்றத்தி லேறி யிழுத்தல்போலும் தோற்றுமாயின், பூதநாடி யெனப் புகல்வர்.

## மரணநாடி

### வாதநாடியா லுண்டான அசாத்தியக்குறி

பிங்கலையானது ஒருநாள் முழுவதும் புரளாமல் ஓடுமாயின் மூன்றுவது வருஷத்திலும், வாதநாடியானது இரண்டு நாள்வரையிலும் புரளாமல் ஓடுமாயின் இரண்டு வருஷத்திலும், வாதநாடியானது வலுத்து மூன்று நாள்வரையிலும் புரளாமல் ஓடுமாயின் ஒருவருஷத்திலும் மரணம் வருமென்பர்.

### பித்தநாடியா லுண்டான அசாத்தியக்குறி

பித்தநாடியானது ஒருநாள் முழுவதும் தன் அளவில் குறைந்து மோதிய கடல் அலை பின்வாங்குவதைப்போல தியக்கமடைந்தால் ஆறுமாதத்திலும், பித்தநாடி அசைவின்றி இரண்டுநாள் பரியந்தம் தியக்கப்பட்டிருப்பின் மூன்றுமாதத்திலும், இப்படியே பித்தநாடி மூன்றுநாள் பரியந்தம் இருப்பின் நாற்பத்தைந்தாவது நாளிலும் மரணம் சம்பவிக்குமென்பர்

## சிலேத்தும நாடியா லுண்டான அசாத்தியக்குறி

சிலேத்தும நாடியானது மூன்றுநாள் பரியந்தம் வேகமாக ஓடி அலைந்ததானால் ஐந்துநாட்களிலும், இரண்டுநாள் வேகமாகஓடி யலைந்ததானால் 10 நாட்களிலும், ஒருநாள் ஓடி யலைந்ததானால் 5 நாட்களிலும் மரணம் வருமென்பர். பத்து நாழிகைவரையில் ஓடி யலைந்ததானால் பயமில்லை. அவுடதங்களால் வசப்படும்.

## வேறு அசாத்தியக்குறி

பித்த நாடியானது மூன்றுநாள் பரியந்தம் தன்னடை கடந்து புரண்டிடினும், பாம்பின் நாவசைவதைப்போலத் தோற்றிடினும்,மணி அசைந்து அசைந்து ஓசை கிளம்புவதைப்போலத் தோற்றிடினும், உடுக்கை சப்தம் இருந்திருந்து வலுக்க முழங்குவதைப் போலத் தோற்றிடினும் கொடிய மறலியின் நகரை அடையுங்கால மென்று கூறுவர்.

## சரீரலட்சணம்

வாதசரீரமானது பெரும்பாலும் குளிர்ந்து சில இடங்களில் உஷ்ணமாக இருக்கும். நாடி மெதுவாக நடக்கும்.

பித்தசரீரமானது உஷ்ணமாயிருக்கும். நாடி விரைந்து நடக்கும் சிலேத்துமசரீரமானது குளிர்ந்திருக்கும். நாடி அதிகவெருட்சியாகவும் துற்பலமாகவும் நடக்கும்.

தொந்தசரீரமானது முற்கூறிய பலவித குணங்களுடன் சம்பந்தப் பட்டிருக்கும்.

## நிறப்பரிட்சை

வாதசரீரம் கருமையாகவும், பித்தசரீரம் மஞ்சளாகவும், சிலேத்துமசரீரம் வெளுப்பாகவும் தொந்தசரீரம் பலநிறமாக இருக்கும்.

## வசனப்பரிட்சை

வாதரோகியின் குரலானது சாந்தமாக இருக்கும். பித்தரோகியின்குரல் வலுத்திருக்கும். சிலேத்தும ரோகியின் குரல் இளைத்த ஈனதொனியாக இருக்கும். தொந்தரோகியின் குரல் பலவிதமாக இருக்கும்.

## நேத்திரப்பரிட்சை

வாதரோகியின் கண் கறுத்து கண்ணீர்பாயும். பித்தரோகியின் கண் பச்சையாகவும் சிவந்தும் காட்டும். சிலேத்தும ரோகியின்கண் வெளுத்தும் பீளைச்சேரும். பெருந்தசன்னிரோகத்தில் கண்சிவந்து பச்சையாகக் காட்டும் காமாலை ரோகத்தில் மஞ்சளாகத் தோற்றும்.

மலப்பரிட்சை

வாதரோகியின் மலம் கறுத்திருக்கும். பித்தரோகியின் மலம் மஞ்சள் அல்லது சிவந்திருக்கும். சிலேத்தும ரோகியின் மலம் வெளுப்பாகயிருக்கும்; தொந்தரோகியின் மலம்பலவர்ணமாக இருக்கும்.

சலப்பரிட்சை

வாதரோகியின் சிறுநீர் தெளிந்து வெண்ணிறமாக இருக்கும் பித்தரோகியின் சிறுநீர் மஞ்சள் நிறமாக இருக்கும். சிலேத்தும ரோகியின் சிறுநீர் கலங்கலாக நுரைபெற்றிருக்கும் தொந்த ரோகியின் சிறுநீர் பலநிறமாக இருக்கும்.

நாவின்பரிட்சை

வாதரோகியின் நாவானது கறுத்து முள்பாய்ந்துவெடித்திருக்கும்; பித்தரோகியின் நாவானது மஞ்சளாகவும் சிவந்தும் காட்டும்; சிலேத்துமரோகியின் நாவானது வெளுப்பாக நீரூறும்; தொந்தரோகியின் நாவானது பலவிதமாக இருக்கும்.

தந்தப்பரிட்சை

வாத ரோகின் தந்தமானது கறுத்துச் சாம்பல் நிறமாகவும் பித்தரோகியின் தந்தமானது மஞ்சள் நிறமாகவும், சிலேத்தும ரோகியின் தந்தமானது வெளுத்த நிறமாகவும், தொந்தரோகியின் தந்தமானது பலநிறமாகத் தோற்றும்.

இங்குவரையப்பட்டுள்ள நிறப்பரிட்சை முதல் தந்தப்பரிட்சை ஈறாயுள்ள ஏழுடன் நாடிப்பரிட்சையையும் கூட்டி அஷ்டவிதப் பரிட்சையெனக் கூறியிருக்கின்றனர்.

பண்டிதர்கள் தேகதத்துவம், திரிதோஷங்களின் தொழில், ரோகியின் விருத்தாந்தம், தேகக்குறி, நாடிப்பரிட்சை, திரிதோஷங்களின் வேறுபாடு, அஷ்டவிதப்பரிட்சைமுதலியவிடயங்களைக் குற்றமற உணர்ந்து தேவவுபாசனை, சித்தசுத்தி, ஜீவகாருண்ணியம், நல்லொழுக்கம் முதலியவற்றை மேற்பூண்டு, ரோகியினிடத்தில் அன்புப்பாராட்டி எவ்வளவு ரோகநிதானஞ் செய்துகொள்ளக்கூடுமோ அவ்வளவு விடயங்களையும் பகுத்துணர்ந்து அவ்வவற்றிற்குரிய சிகிச்சைகளையும் நூன்முகமாக நன்காராய்ந்து செய்யும் காலத்தில் இம்மை மறுமைக்குரிய பயன்களை அடைந்துவாழ்வார்கள்.

இதற்குமேல் ஒவ்வொரு ரோகங்களையும் அவையவைகட்குரிய அறிகுறிகளையும் விளக்கமாகக் கூறப்படுவதுடன் ஆங்காங்கு ஆங்கில மருத்துவ சித்தாந்தங்களை மதாந்தரமாகக் கூறப்படும்.

---

## சுரரோக விலம்பகம்

# (Diagnosis of Fever.)

மானிடர்களுக்கு உண்டாகும் எல்லா ரோகங்களுக்குள் சுரமானது அரசனாகவும் நமனுக்கு ஒப்பாகவும் கூறப்பட்டிருக்கின்றது. இது சாம்பசிவன் தக்கனுடைய வேள்வியை தண்டிக்குமாறு தனது நெற்றிக்கண்ணை திறந்தெரித்தபோது அதன் மூலமாகப் பிறந்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அது வாதசுரம், பித்த சுரம், சிலேத்துமசுரம், வாதபித்தசுரம், வாதசிலேத்தும சுரம், பித்த சிலேத்தும சுரம், ஆகந்துக சுரம் என எழுவகைப்படும். சிலநூல்களில் சந்நிபாத சுரத்தினையும் கூட்டி எண்வகையாகக் கூறப்பட்டிருக்கின்றன.

## சுரரோகத்தின் பூர்வரூபம்

தேக சிலிர்ப்பு, தலைநோய், எக்காரியங்களிலும் அறிவுசெல்லாமை, அசக்தி, இடுப்பு முழங்கால் கண்டசதை நோதல், ஜீரணியாமை, அரோசகம், கொட்டாவி, நாவறட்சி, தேகபாரிப்பு, குழம்பாகவும் மஞ்சள் நிறமாகவும் சிறுநீர் போதல், நாடிவிரைந்தோடல், முதலிய குணங்களை யெல்லாம் தனக்கு பழையரூபமாகப்பெற்றுளதாம்

## 1-வது வாத சுரம்

முகமும் உதடும் கறுத்தல், தேகம் தடித்து நோதல், அதிக தாகம், தேகம் காய்தல், தேகம் பாரித்தல், ரோமசிலிர்ப்பு என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்

### சிகிச்சை

வாதசுரக் கியாழங்களைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்.

## 2-வது பித்த சுரம்

அதிக நித்திரை, மலம் மூத்திரம் சிவந்திருத்தல், வயிற்றுக் கழிச்சல், வாந்தி, வாய்பிதற்றல், வாய்கசப்பு, மயக்கம், தாகம், எழுந்தோடல், விக்கல், தவிக்கல், சாந்தப்படல் என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### சிகிச்சை

பித்தசுரக் கியாழங்களைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்

### 3-வது சிலேத்துமசுரம்

நாவும் உடலும் வெளுத்துக் காணல், இருமல், இளைப்பு, வாய் துவர்ப்பு, உருசி யின்மை, சுவாசக் கஷ்டம், விக்கல், தாகம், முக வாய் நோதல், தினவு, தியக்கம் என்னும் இக்குணங்களைப் பெற் றிருக்கும்.

### சிகிச்சை

சிலேத்துமசுரக் கியாழங்களைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்.

### 4-வது வாதபித்த சுரம்

தேகம் நடுக்கல், சர்வாங்க நோய், நாவு கறுத்தல், நயந்து பேசல், அசதியான நித்திரை, மலம் மஞ்சளாகவும் வெளுப்பாகவும் போதல், வாய் கசப்பு, வடிவங் குன்றல், தயக்கம், மயக்கம் என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 5-வது வாதசிலேத்தும சுரம்

சர்வாங்க நோய், சுவாசம், இருமல், நாவெளுப்பு, ரோமசிலிர்ப்பு, மிடறுநோதல், தாகம், தயக்கம், அழுதல், பிதற்றல், மலபந்தம், வியர்வை என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும.

### 6-வது பித்தசிலேத்தும சுரம்

அதிக வியர்வை, வாய் பிதற்றல், அசதியான நித்திரை, இருமல், மார்பு நோய், தாகம், தலைவலி, பிடரிவலி, நாவழவழப்பு, உருசி வாசனை தெரியாமை என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### சிகிச்சை

இவைகளுக்கு தொந்தசுரக் கியாழங்களைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்.

வாதசுரமாதி பித்த சிலேத்தும சுரம் ஈறாக வரையப்பட்ட ஆறுசுரங்களையும் தருணசுரமென்பர். இவை ஒன்பது நாட்குள் குணப்படும். இத்தகைய சுரங்களுக்கு ஆங்கிலேய மருத்துவர்கள் "சிம்பில் பீவர்" (Simple fever) எனக் கூறுவர். இதனில் மச்சை தாதுவெனும் நரம்புகள் எளிதில் விகல்பமடைந்து ஆயாசம், கொட்டாவி, குளிர், தலைவலி, சர்வாங்கவலி முதலியவற்றை யுண்டாக்கும்.

இந்த தருண சுரங்களுக்கு கூறப்பட்டுள்ள கியாழங்கள் அதிக உத்தமமானதெனினும் வாதபித்தகப தோஷங்களின் மிகுதியால் ஏற்ற குணமில்லையென உணரின் காலதாமதஞ் செய்யாமல் வீரபற்பம், இலிங்கச்செந்தூரம், குப்பிரச செந்தூரம், புடாச செந்தூரம், சண்டமாருதச் செந்தூரம், காடிகாரலிங்க செந்தூரம் காடிக்காரரச செந்தூரம், அக்கினிகுமாரன், மால்தேவிச் செந்தூரம் வீர ரசசெந்தூரம், ஆனந்தபைரவ மாத்திரை, சங்கரபைரவ மாத்திரை, சித்தானந்தபைரவ மாத்திரை, கோடாசுளி மாத்திரை, காலகோடி ரசம், நீலகண்ட ரசம் முதலியவற்றி லொன்றை சுரத்தின் கடுமைக்கேற்றவாறு தேன்முதலிய அனுபானத்தில் கொடுத்து பின்னர் அச்சுரத்திற்குப் பொருத்தமான கியாழங்களைக் கொடுத்துவர எவ்விதத்திலும் குணமுண்டாக்கும்.

அங்ஙனம் செய்யத்தவறின் சிலசமயம் சந்நிதோஷ சுரங்களாக மாறுதலடையும். இதனை சந்நிரோக இலம்பகத்தில் காண்க.

### 7-வது ஆகந்துக சுரம்

ஆகந்துக சுரமானது அருந்துகின்ற அறுசுவை வர்க்கங்களின் காரணமில்லாமலே வருதலாம். இதனை எட்டுவிதமாகக் கூறுவர். இதன் விபரம் பின் வருமாறு.

### 1-பூத சுரம்

தேகத்தில் குமரகண்டம்போல் நரம்புகளை வலித்தல், கண்ணுருட்டி விழிக்குதல், கருத்தடங்க வினவல், போசனம் அதிகம் விரும்பல், வேண்டியவைகட்கு குறிப்பிட்டு ஆசைப்படல், ஆடல் பாடல் முதலிய தோஷங்களுடன் மயிர்கூச்சம், நித்திரை முதலிய குணங்களையும் பெற்றிருக்கும். இதுசுரத்தின் வேகத்தால் நர்வ்ஸ் (Nervous) என்னும் ஸ்பரிசநரம்பு விகல்பமடைந்து வாத சீதளத்தால் பலவாறாக வலிக்கும்.

### சிகிச்சை

திருநீலகலிக்கம், ஜன்னிகலிக்கம், ஆக்கிராணம், புகை முதலியவற்றாலும், ஆனந்தபைரவ மாத்திரை, சிந்தானந்தபைரவ மாத்திரை, சங்கரபைரவ மாத்திரை, நீலகண்ட ரசம் முதலிய பிரயோகத்தால் நிவர்த்திக்கவேண்டும்.

## 2-ஆசீரண சுரம்

தேகம் காய்தல், இளைத்தல், விக்கல், அக்கினிமந்தம், மார்பு தொடை முதலிய ஸ்தானங்களில் நோய், புளித்த ஏப்பம், வாந்தி, தாகம், பெருமூச்சு, வயிற்றுநோய், வயிற்றுப்பொருமல், தேக சிலிர்ப்பு என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும். இத்தகைய சுரமானது ஆமாசயம், அக்கினியாசயம், பக்குவாசயம், மலாசயம், ஈரல் முதலிய ஜீர்ண உறுப்புகளின் தொழில் விகல்பமடைந்து உண்ட உணவு சரிவர ஜீர்ணிக்காமலும் மலங்கழியாமலும், உள் தங்கி நாற்றமுடைய காற்றொன்றை (Fowl gas) பிறப்பித்து இருதயத்தின் சக்தியைக்கெடுத்து சுரமுண்டாக்குகின்றனவென்று ஆங்கிலேய மருத்துவர்கள் கூறுவர்.

### சிகிச்சை

சுரத்தைப் பரிகரிக்கக்கூடிய இரச செந்தூரம், இலிங்கச்செந்தூரம்,நீலகண்டரசம் முதலியவற்றி லொன்றைத்தினம் இருவேளை திரிகடுகுசூரணம் பஞ்சாக்கினிலேகிய முதலியவற்றில் அனுபானமாகக்கூட்டிக் கொடுத்தல் நனறு. ஒருகால் மலபந்த மிருப்பின் ஒருவேளை மலம் போகும்பொருட்டு ஜீரணசஞ்ஜீவி லேகியத்தை இராக்காலத்தில் கொடுத்தல் நன்று. இத்தகைய சிகிச்சையால் ஜீர்ண உறுப்பு களின் தொழில் சரிப்பட்டு சுரமும் நிவர்த்தியாகும்.

## 3-அபிகாத சுரம்

அதிக நடை, குதிரை யானை சவாரி, சுமை எடுத்தல், தேகம் சோர்வடைய வேலை செய்தல், பனியில் சஞ்சரித்தல், குத்து, காயம் முதலியவைகளால் மச்சைதாதுவும் இரத்ததாதுவும் கெட்டு வியர்வை, மூர்ச்சை, சித்தப்பிரமை, வாயுளரல், தேகநிறக் கெடுதி, சர்வாங்க நோய், சுரம் என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### சிகிச்சை

நல்லபோஜன உபசாரம், நித்திரை கொள்ளல், தேகத்தை அலட்டாமல் படுக்கையி லிருத்தல், *“குத்து காயம் முதலியவற்றால் இருப்பின் அதற்கேற்ற சிகிச்சை செய்வதுடன்” சுரம் கடுமையாக

* குத்து அடிமுதலிய வீக்கங்களுக்குப் போஸ்தக்காய் என்று வழங்கப்பட்ட கசகசாகாயின் தோலைக் கியாழமிட்டு ஒத்தடங்கொடுத்தல் உதிரக்கெடுதலை உடனேபரிகரிக்கும்; வெட்டுகாயங்களுக்கு மைனத்தைலம்பஞ்சியில் துவைத்து வைத்துக்கட்டச் சீழ்பிடிக்காமல் உடனே ஆறும்.

இருப்பின் உயர்தரமான கஸ்தூரிமாத்திரை அல்லது கஸ்தூரிமாத்திரையுடன் சிறிது இலிங்கச்செந்தூரம் கூட்டிக் கொடுத்தல் வேண்டும்.

### 4. ஆகீககரம்

அதிக குளிர் உண்டாதல், தேகம்வாடல், இருமல், தேகஎரிவு, தலை கண் முதலிய விடங்களில் நோய், சர்வாங்க நோய், அசதியான நித்திரை, மயக்கம், தேகம் வெளுத்தல், வாடல், கண்பசுமை வயிற்றுப்பொருமல், வாந்தி, உள்ளங்கை கண்முதலிய விடங்களில் எரிச்சல், தாகம், சுரம், வாய்பிதற்றல் என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 5. மாறல் சுரம்

முதலில் குளிர்கண்டு பின்னர் சுரமடித்து வியர்வைவிடும். அப்பால் சுரமில்லாமலிருக்கும். இங்ஙனம் தினம்வரின் ஏகாஹிக சுரம், ஒன்றைவிட்டு ஒருநாள் வரின் துவாஹிக சுரம், இரண்டுநாள் விட்டு வரின் திரிதாஹிக சுரம், மூன்றுநாள் விட்டுவரின் சாதுர்த்திக சுரம், இப்படியே பதினைந்துநாட் கொருதடவை மாதத்திற் கொரு தடவை தவறாமல் வருவனவு முண்டு. இவைகட்கெல்லாம் பொதுவில் மாறல் சுரம் அல்லது முறை சுரம் என்பர்.

### 5. ஆகீகசீத சுரம்

தேகமெல்லாம் நொந்து அனல்போல் காய்தல், தலை, முகவாய், புருவம்முதலிய விடங்களில் வலி, நாவும் உதடும் வழ வழப்பு, நித்திரை பங்கம், உடல் திமிர்த்து குளிர், சுரம், தாகம், மயக்கம் ஆக இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

ஆகீகசுரம், மாறல் சுரம் ஆகீகசீதசுரம் ஆக இம்மூன்றனையும் இன்டர்மிட்டென்ட் பீவர் (Intermittent fever) அல்லது மலேரியா (Malaria) என ஆங்கிலேய மருத்துவர்கள் கூறுவர்.

தினந்தோறும் வருகிற சுரமாயின் காலைநேரத்திலும், ஒன்றைவிட் டொருநாள் வருகிற சுரமாயின் பகல் 12 மணிக்கு முன்னும், இரண்டுநாள் பூரணமாக சுரமில்லாதிருந்து 3-வது நாள் வருகிற சுரமாயின் பகல் 12 மணிக்கு மேலும் காணும். சில சரீரங்களுக்கு குளிர் வந்திருக்கும்போது உதடு காது மூக்கு முதலியவைகள் நீல வர்ணமாகவும் நாவெளுத்து வறட்சிகொண்டிருக்கும். முதலில்

முதுகு முள்ளந்தண்டிலிருந்து குளிர் ஆரம்பித்து தேகமெல்லாம் பரவும். குளிர் நின்றபின்பு தேகங் காயும். காய்ந்தடங்கும் சமயம் வியர்வை விடும். இத்தகைய சுரத்தில் பூர்ணமாக சுரம்விடாமலேயே அடிக்கடி வியர்வைகண்டு சுரம் குறைவதும் சுரம் அதிகரிப்பதுமாக இருப்பின் ரிமிட்டன்ட் பீவர் (Remittent fever) என்பர்.

சிகிச்சை

இரசசெந்தூரம், இலிங்கச்செந்தூரம், நீலகண்டரசம், வீரபற்பம் முதலியவற்றி லொன்றைத் தேனில் அனுபானம் செய்து கொடுத்து ½ நாழிகைக்குப்பின் நிலவேம்பு சம்பந்தமான கியாழமொன்றைக் கொடுத்துவர எளிதில் நிவர்த்தியாகும்.

7. ஆமாதிசாரசுரம்

சிறுவலியாக ஆசனங் கடுக்கும். சில சந்தர்ப்பம் சீதம் இரத்தம் மலத்தில் காணும். சுரம், தாகம், உடம்பு ஊதல் வெளுத்தல், கை கால் சோர்வு, வாய் கசப்பு, இருமல் ஆக இக்குணங்களைப் பெற்றிருக்கும். இதனை ஆங்கிலேய மருத்துவர் டிசன்டிரி (Dysentery) என்பர். இந்த ரோகமானது மலாசயமாகிய பெருங்குடலி னுட்புறத்தி லிருக்கின்ற சிலேத்தும சவ்வுக்கு தாபிதமும் விரணமும் காணப் பெற்றிருக்கும். இதுவே அக்யூட் டிசன்டிரி (Acute Dysentery) என்றும் ஆமாதிசாரமென்ற காரணத்தானே, சீதமும்இரத்தமும் மலத்துடன் கலந்து நாபியைச்சுற்றி வலித்து முக்கலோடு வெளியாகும். மலம் தீச்சல் பெற்றிருக்கும். சில சந்தர்ப்பம் சுரத்துடனும் சுரமில்லாமல் விரைந்த நாடியுடனும் இருப்பதுடன் பசிமந்தப்படும். இன்னும் ரோகியின் வயிற்றின் இடது பக்கத்தை அழுத்திப்பார்க்க வேதனை யுண்டாக்கும். இந்த ரோகத்தை ஆரம்பத்தில் கவனியாவிடில் கிராணியாக மாறுதலடையும்; இதனை கிராணிக் டிசன்டிரி (Chronic Dysentery) என்பர். இதனைக்குறித்து பிரத்தியேகமாக இந்நூலில் குறிக்கப்பட்டுள்ள தாகையால், அங்கு இனிது விளங்கும்.

சிகிச்சை

திரிகடுகு, ஜாதிக்காய், கிராம்பு, இலவம்பிசின், விளாம்பிசின், வில்வபிசின், சீமைதிவிடயம், கழற்சிபருப்பு, சீரகம், ஓமம், கற்கடகசிங்கி, சிறுதேக்கு, மாதுளம்பிஞ்சு, வில்வப்பழச்சதை ஆகப்

பதினாறு சரக்குகளைச் சமனெடையாகக் கொண்டு நல்லெண்ணெய் விட்டு மணம்பெற வறுத்துத் தயிரை வடிகட்டி எடுத்தத் தெளிவு சலத்தால் அரைத்துப் பாக்களவு தயிர் வடித்த சலத்தில் கலக்கித் தினம் மூன்றுவேளை கொடுக்க சீதம், இரத்தம்போதல் நிவர்த்தி யாவதுடன் சுரமும் குணமாகும்.

வேறு

ஜாதிபலாதி சூரணமும், * பாஸ்கரலவணமும் வகைக்குக் கால் தோலா எடை ஒருமிக்கக் கலந்து சிறிது சீனிசர்க்கரையுடன் சேர்த்து தினம் இருவேளை ஆறுபொழுது கொடுக்க நிவர்த்தியாகும்.

* படிகாரபற்பம், * அன்னபேதி செந்தூரம், * காய்ச்சுகட்டிச் சூரணம், ||ஜாதிக்காய் லேகியம் முதலிய அவிழ்தங்களும் இதற்குப் பொருத்தமான சிகிச்சையாகும்.

## 8. தாதுகத சுரம்

முற்கூறப்பட்ட ஆகீக சுரம், மாறல் சுரம் ஆகீகசீத சுரம் முதலிய விஷசுரங்கள் கண்டவுடன் ஏற்ற சிகிச்சை செய்யாதிருப்பின் முதலில் ரசதாதுவிலும், ஏழு நாளைக்குமேல் இரத்ததாதுவிலும், இருபத்தொரு நாளைக்குமேல் மேதோதாதுவிலும், ஐந்து மாதத்திற்குமேல் அஸ்திதாதுவிலும், இரண்டு வருஷத்திற்குமேல் மச்சைதாதுவிலும், மூன்று வருஷந்திற்குமேல் சுக்கிலதாதுவிலும் பற்றி வியாபிக்குமென்று கூறுவர்.

சில சந்தர்ப்பங்களில் விஷசுரத்தின் வன்மைக்கேற்றவாறு தீவரமாய் தாதுக்களை ஒன்றன்பின்னொன்றாகக் கெடுத்து கஷ்டசாத்தியமாகுதலுமுண்டு. மச்சை, சுக்கிலம் இவைகளில் வியாபித்த சுரமானது தப்பாமற் கொல்லும். இத்தகைய சுரங்களை "கிராணிக்மலேரியா" (Chronic malaria) என்று ஆங்கிலேய மருத்துவர் கூறுவர்.

சிகிச்சை

* இலகுசுதர்சனசூரணம், * மஹாசுதர்சன சூரணம், || பஞ்சமூலிகியாழம், நீலகண்டரசம், இரசசெந்தூரம் முதலிய அவிழ்தங்க

---

குறிப்பு: * இக்குறிகளைப் பெற்றுள்ள அவிழ்தங்கள் சிகிச்சாரத்தினத்தீபம் என்னும் முதல்புத்தகத்தினும்.

|| இக்குறிகளைப் பெற்றுள்ள அவிழ்தங்கள் கண் இுசாமியம் என்னும் புத்தகத்தினும் கூறப்பட்டுள்ளதென அறிக. மற்றவை இந்நூலின்கண் உள்ளனவாம்,

ளாலும் அரக்குத்தைலம், அசுவகெந்திபலாக்ஷாதித்தைலம் முதலிய வற்றின் ஸ்நானங்களினாலும் குணஞ்செய்க.

## சுரத்தின் தசாவஸ்தை நிதானம்

1-வது கொஞ்சம் ஞாபக மிருத்தல், 2-வது முன்னிறந்தவர்களைக் கண்ணிற் கண்டு பேசுதல், 3-வது சித்தப்பிரமை யாகுதல், 4-வது மேல்மூச்சு வாங்கல், 5-வது விழித்தவிழி விழித்ததுபோ லிருத்தல், 6-வது மாறுகுரலாகுதல், 7-வது சரீரமுழுவதும் மாண எரிச்சல், 8-வது தன்கையால்முகத்தை தடவிக்கொள்ளல், 9-வது சரீரமுழுவதும் சிலேத்தும வியர்வை காணுதல், 10-வது தேகத்தைவிட்டு ஆவியானது நீங்குதல் என்றறிக.

இப்பத்தவஸ்தைக்குள், மூன்றவஸ்தை வரைக்கும் சிகிச்சை செய்யலாமென்று தன்வந்திரியார் கூறியிருப்பினும், சிலநூல்களில் ஒன்பதாவஸ்தை வரையிலும் சிகிச்சை செய்யலாமென்று கூறப்பட்டிருக்கின்றன அப்படிச் சில சந்தர்ப்பங்களில்செய்து குணங்கண்டதையும்கண் கூடாகப் பார்த்திருக்கின்றோம். ஆகையால்,கூடியவரையிலும் ஏற்ற சிகிச்சை செய்வது சிறந்த பண்டிதன் கடமையாகும்.

## சுரம்விட்ட லக்ஷணம்

எப்பதார்த்தங்களிலும் வீண் அபேக்ஷை, சரீரமெரிச்சல், களைத்தல், முகதுர்கந்தம், அங்கவேதனை, மனசஞ்சலம் இவைகள் இல்லாமல், தேகத்தில் சுளுவு, பஞ்சேந்திரிய சுபாவம், வியர்வை, தும்மல், பசியுடன் அன்னத்தில் அபேட்சை, சிரசில் நமைச்சல் முதலியவைகள் உண்டாயின், சுரம் விட்டதென் றறிக.

---

# சந்நிரோக இலம்பகம்

## சந்நி

## (STATE OF COLLAPSE)

### பூர்வரூபம்

இது, கழுத்து, நெற்றி, மார்பு முதலிய விடங்களில் வியர்க்கும். சுரங் காயும், சித்தப்பிரமை, தேகளரிவு, தேகவலி, கண் சிவத்தல், கண் பச்சையாதல், வாய் பிதற்றல், மூர்ச்சை, மார்புவலி, தயக்கம், மயிர்க்கூச்சம், இருமல், விக்கல், சுவாசம் ஆகிய இக்குணங்களை பெற்றிருக்கும்

நம்முன்னோர் வாத பித்த கபமாத்திரைகளின் அளவு பேதங், களால் சந்நிபாத சுரத்தை 13-விதமாகக் கூறியிருக்கின்றனர். அதன் விபரம் பின்வருமாறு.

### 1. கண்டகுப்ச சந்நிபாத சுரம்

வாதமும் பித்தமும் அதிகரித்து சிலேத்துமம் குறைந்ததினால் பிறப்பது.

மிகப்பிரமை, தாகம், தலைசுற்றல், சந்தோஷித்தல், தனு போல் கழுத்துநரம்பு இழுத்துக் கொள்ளல், புலம்பல், பப்படு தல், மூர்ச்சை, சர்வாங்க நோய், வாந்தி, இருமல், மார்பு தலைநோய் ஆகிய இக்குணங்களையுடைய தெனவும், நிவர்த்தியாக 13-நாட் செல்லுமெனவும் கூறுவர். இதனை ஆங்கிலேய மருத்துவர் "சிரிப்ரோ ஸ்பைனல்பீவர்" (Cerebro-spinal fever) என்பர்.

### 2. சந்திக சந்நிபாத சுரம்

வாதமும் சிலேத்துமமும் அதிகரித்து, பித்தம் குறைந்ததினால் பிறப்பது.

தேகங் குத்தல், உயிர் சோர்பம், கால் வலித்தல், சிலேத்தும மிகுதி தயக்கம், கண் மூடல், தேகம் எரிச்சல், தேகக்குளிர்மை ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 7-நாட் செல்லுமென்றும் கூறுவர்.

### 3. தாந்த்ரிக சந்நிபாத சுரம்

சிலேத்துமமும் பித்தமும் அதிகரித்து, வாதம் குறைந்ததினால் பிறப்பது.

வாய் பிதற்றல், நாவு கறுத்தல், நாவில் முட்பாய்தல், நாவறளல் தாகம், வயிற்றுக்கழிச்சல், சுவாசம், கண்ணில் சலம்சொரிதல், சுரம்

காய்தல் ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 25-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

### 4. புக்னநேத்திர சந்நிபாத சுரம்

பித்தமும் சிலேத்துமமும் குறைந்து, வாதம் அதிகரிப்பதனுல் பிறப்பது.

சரீரமெல்லாம் குளிர்மை, கண் மேற்சுழலல், கண்ணீர் பாய்தல், தயக்கம், பார்வைமந்தம், கடுஞ் சித்தப்பிரமை, பிரலாபித்தல், தேக பாதை, அக்கினிபோல் சுரங்காய்தல் ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 8-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

### 5. ருத்தாக சந்நிபாத சுரம்

வாதமும் சிலேத்துமமும் குறைந்து பித்தம் அதிகரித்ததினுல் பிறப்பது.

தேக வெரிச்சல், சித்தப்பிரமை, கழுத்து நோதல், தேகமெல்லாம் குத்தல், தயக்கம், புரளல், உதடு உலர்தல், நெற்றியில்வியர்வை ஆகியஇக்குணங்களை யுடையதெனவும்நிவர்த்தியாக12-நாட்செல்லுமெனவும் கூறுவர். சில நூற்களில் 20-நாட் செல்லுமெனவும் கூறப்பட்டுள்ளது.

### 6. ஜிம்மக சந்நிபாத சுரம்.

வாதமும் பித்தமும் குறைந்து சிலேத்துமம் அதிகரித்ததனுல் பிறப்பது.

மேல்மூர்ச்சை, தேகஉஷ்ணம், தாகம், கைகால் எரிச்சல், நாவு கறுத்தல், நாவில் முட்பாய்தல், நாவு வெடித்தல், காது கேளாமை, வாய் கிட்டல், தேகம் அனல்வீசல், தேகபாரிப்பு, விக்கல் ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 16-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

### 7. பிரலாப சந்நிபாத சுரம்

வாதம் அதிகரித்தும் பித்தம் கொஞ்சம் குறைந்தும், சிலேத்துமம் மிகுதியாக குறைவதினுல் பிறப்பது.

தேக அசைவு, புலம்பல், தேகவனல், தேகமெல்லாம் புண்ணுக நோதல், இருமல், அடுத்தடுத்து விக்கல், மூர்ச்சை, மயிர்கூச்

சம், முகம் வாடல், அலறுதல் ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 14-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

8. அந்தக சந்நிபாத சுரம்

வாதம் அதிகரித்தும் சிலேத்துமம் கொஞ்சம் குறைந்தும் பித்தம் மிகுதியாக குறைவதினால் பிறப்பது.

நாவறட்சி, அதிக தாகம் தேகவெரிவு, பிரமை, தலைசுற்றல், வாய்பிதற்றல், இருமல், வாந்தி, விக்கல் ஆயகி இக்குணங்களையுடையதெனவும் நிவர்த்தியாக 10-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

9. ரக்திஷ்டீவி சந்நிபாத சுரம்.

பித்தம் அதிகரித்தும் வாதம் கொஞ்சம் குறைந்தும் சிலேத்துமம் மிகுதியாக குறைவதினால் பிறப்பது.

நாவு உதடு வெடித்தல், இரத்தவாந்தி, நெருப்பாக சுரம்காய்தல், வாய் வறளல், சித்தப்பிரமை, தயக்கம். நினைவு தடுமாறல், தலைசுற்றல், நாவு கறுத்தல், காதுமந்தம் ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 10-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

10. சித்தவிப்பிரம சந்நிபாத சுரம்.

பித்தம் அதிகரித்தகினாலும், வாதம் அதிகமாக குறைவதினாலும் சிலேத்துமம் சிறிது குறைவதினாலும் பிறப்பது.

தேகங்கறுத்தல், தேகம்நோதல், சித்தப்பிரமை, நினைவழிவு, பாடல் வாய்பிதற்றல், சுவாசம், பேதி ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 21-நாட் செல்லுமென்றும் கூறுவர். சில நூற்களில் 18-நாளில் குணமாகுமென்றும் கூறப்பட்டுள்ளது. இத்தகையசுரத்தினை ஆங்கிலேய மருத்துவர் "டைபாயிட் அல்லது என்ட்ரிக்பீவர் (Typhoid or Enteric fever) எனக்கூறுவர். இச்சுரரோகத்தில் பேதியில்லா திருப்பின் "டைபஸ்பீவர் (Typhus fever) என்பர். இச்சுரத்தில் நர்வ்ஸ் என்னும் மச்சைதாதுவின் வலிவு அதிகமாய்க் குறைந்து மூளையும் விகல்பமடையும் ஆகையால் அதிக அசக்தியும் பலவீனமும் சோம்பலும் விகாரமும் காணுகின்றன. இது பதினைநாளிற்குமேல் குணமாகுங்குறிகள் ஏற்படும். அங்ஙனம் இல்லையாயின், கஷ்டசாத்தியமாக முடியும். தவிர, இச்சுரத்தில் மூளையின் சக்தி குன்றுதலால் உன்மத்தனைப்போல் தோற்றும். இதனின்று

குணமடைந்தார்களில் சிலருக்கு மூளையின் சக்தி சிறிது குறைவு பட்டிருப்பதாகவும் தோற்றுகிறது.

### 11. சிதாங்க சந்நிபாத சுரம்

சிலேத்துமம் அதிகரித்ததினாலும் வாதம் அதிகமாக குறைவதினாலும் பித்தம் சிறிது குறைவதினாலும் பிறப்பது.

தேகமெல்லாம் குளிர்மை, இருமல், இளைப்பு, அசதி, விக்கல், உடம்பு நோதல், வாந்தி, மூர்ச்சை, தேக அசைவு, பேதி, பிதற்றல், புலம்பல் ஆகியஇக்குணங்களை யுடையதெனவும் நிவர்த்தியாக 15-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

### 12. கர்ன்னிக சந்நிபாத சுரம்

சிலேத்துமம் அதிகரித்ததினாலும் பித்தம் அதிகமாக குறைவதினாலும், வாதம் சிறிது குறைவதினாலும் பிறப்பது.

வாய்பிதற்றல், நாவெடித்தல், நாக்கறுப்பு, பிரலாபித்தல், நடுக்கல், விக்கல், இரைப்பு, தேகவசைவு, செவிமந்தம், காதிரைச்சல், தலைபாரம், தாகம், தவிக்கல் ஆக இக்குணங்களை யுடையதெனவும் நிவர்த்தியாக 90-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

### 13. அபினியாச சந்நிபாத சுரம்

வாதமும், பித்தமும், சிலேத்துமமும் சமமாக அதிகரித்ததனால் பிறப்பது, இருமல், சுவாசம், சுரம், நாவறட்சி, நித்திரை, மயக்கம், தேகஎரிவு, சடமெல்லாம் வியர்வை, பலவீனம் ஆகிய இக்குணங்களை யுடையதெனவும், நிவர்த்தியாக 15-நாட் செல்லுமெனவும் கூறுவர்.

முற்கூறப்பட்ட பேதியுடன் காணும் சிதாங்குச சந்நிபாத சுரத்தினையும் பேதியில்லாமல் காணும் அபினியாச சந்நிபாத சுரத்தினையும் ஆங்கிலேய மருத்துவர் "நியுமோனியா சுரம்" (Pneumonia fever) எனக் கூறுவர். இத்தகைய சுரங்கள் அதிக சீதளத்தால் கபஞ்சேர்ந்து சுவாசக்குழலின் கிளைகளுக்குள் சிறிய குழல்களிலும் பெரிய குழல்களிலும் சவ்வுபோல் பிடித்து தடித்து சுவாசக் கஷ்டத்தால் இரத்தம் கெடுதலடைந்து அரட்டல், புரட்டல், படுக்கையில் பொருந்தாது இருமல், முகம் விம்மல், பாதம் கால் முதலிய விடங்களில் வீக்கம் கண்டு அசாத்தியமாக முடியும். கபம் பெருஞ் சுவாசக்குழல்களில் சேரின் பெரும்பாலும் சாத்தியப்படும். சிறு

குழல்களில் சேரின் பெரும்பாலும் கஷ்டசாத்தியமாகும் விருத்தர் களுக்கும் சிசுகளுக்கும் விசேடமாக சிறு குழல்களிலேயே காணுத லுண்டு. குழந்தைகளுக்குக் கண்டால், அள்ளுமாந்தம் என்று கூறு வர். சிலசமயம் இச்சுர ரோகத்தில் சுவாசாசயத்தின் மேற்பையில் வீக்கம் கண்டால், நாபிக்குமேல் 6-வது விலா எலும்புக்கு இடை யில் நோய்காணும். இருமல் காணும்பொழுதல்லாம் சுறுக்கென நோவும். இதனை ஆங்கிலேய மருத்துவர் "புளூரசிசுரம்" (Pleurisy fever) என்பர்.

சாதாரணமாய் நிமிஷத்திற்கு 16-18 முறை சுவாசம் விட வேண்டிய சுபாவமிருக்க இச்சுரத்தில் 35 முறைக்குமேல் அதிகரிப் பினும், கைநாடியின் துடிப்பு சாதாரணமாக நிமிஷத்திற்கு 100 இருக்க, இச் சுரத்தில் 120க்கு மேல் 150வரையில் சென்றிடினும் கஷ்டசாத்தியம்என்று அறிவிற்சிறந்த பெரியார்கூறியிருக்கின்றனர்

### சந்நிபாத சுரங்களில் சாத்தியா சாத்தியம்

சந்திகம், தாந்திரிகம், பிரலாபம், சித்தவிப்பிரமை, ஜிம்மகம், கர்ன்னிகம் இவையாறும் சாத்தியமாம். இவை தவிர்ந்த அந்தகம், ருத்தாகம், சீசாதாங்கம், கண்டகுப்சம், புக்கநேத்திரம், ரக்திஷ் டீவி, அபினியாசம் ஆகிய ஏழும் அசாத்தியமாம். சிலநூற்களில் பிரலாபம் அசாத்திய மென்றும், கண்டகுப்சம் சாத்தியமென்றும் கூறப்பட்டுள்ளது.

தருண சுரத்திலேனும் சந்நிபாத சுரத்திலேனும் அபத்தியம் நேரிடினும், அல்லது வாத பித்த கப பிரகோபங்களுக்கு ஏற்ற சிகிச் சை செய்யாவிடினும் தோஷகுண மேற்படும். அந்ததோஷம் ஏழு விதமாகக் கூறுவர். அதாவது அபத்திய தோஷம், சங்கம தோஷம், விஷம தோஷம், விஷமசீத தோஷம், பீதஜிம்மக தோஷம், இரக்த ஜிம்மக தோஷம் கிருஷ்ணஜிம்மக தோஷம்ஆகும் இவற்றின் விப ரம் பின்வருமாறு.

### 1. அபத்திய தோஷம்

சீதள பதார்த்தங்களை உண்பதினாலும் மந்தப்படும்படியான உணவுகளைக் கொள்வதினாலும் பிறப்பது.

மூர்ச்சை, பிரமை, அதிக தாகம், கருத்தின்றிப் புலம்பல், மார்பு நோதல் ஆகிய இக்குணங்களை யுடையதெனக்கூறுவர்.

2. சங்கம தோஷம்

ஸ்ரீ சஞ்சாரத்தால் பிறந்தது சர்வாங்க நோவு, மார்பு எரிச்சல், அடிக்கடி எழுந்திருத்தல், தவிக்கல், புலம்பல், உள்ளங்கை உள்ளங்கால் குளிர்ச்சி, சித்தப்பிரமை ஆகியஇக்குணங்களை யுடையதெனக் கூறுவர்,

3. விஷமதோஷம்

கடுமையான சுரம், வாய்பிதற்றல், அதிகதாகம், வயிற்றெரிச்சல்,மூர்ச்சை, வாதநாடி தீவரமாக நடத்தல், வியர்வை, தேக வழற்சி யென்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

4. விஷமசீததோஷம்

மயக்கம், சுரம் காய்தல், ஒரு தினத்திலே இரண்டு மூன்றுதரம் குளிரோடு சுரம் காய்தல், அதிக தாகம், தலைநோவு, நாவில் முட்பாய்தல், பிரலாபம், சித்தப்பிரமை, புறளல் என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

5. பீதஜிம்மக தோஷம்

நாக்கு மஞ்சள் நிறமாக இருத்தல், நாக்கு வெடித்தல், நாவறட்சியுடன் முட்பாய்தல், அதிக சுரம், மூர்ச்சை, தியக்கம், மயக்கம், வியர்வை, வெருட்சி, நடுக்கல், என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்,

6. இரக்தஜிம்மக தோஷம்

நாக்கு சிவந்து முட்போல நீண்டிருத்தல், சுரம் காய்தல், தாகம், எரிச்சல் என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

7. கிருஷ்ணஜிம்மக தோஷம்

நாக்கு கறுத்துலர்ந்து முட்போலிருத்தல், அடிக்கடி எழுந்திருத்தல், சித்தப்பிரமை, தேகமெல்லாந்தினவு, வியர்வை, சுவாசம், அழலை, கோரமான சுரம், துடிப்பு, கைகால் அசதி, தேகம் கறுத்தல் என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

முற்கூறப்பட்ட ஏழுவிதமான தோஷங்களெல்லாம் அதிக சீதளத்தினாலுண்டான தாகையால், சந்நிபாத சுரத்தினையே தழுவியிருக்கும். இத்தோஷத்தினைப்பகுத்தறிய கண்சிவந்தல், பச்சையாதல், தேகங்கறுத்தல், நாவு முட்பாய்தல், நாவு மஞ்சள் சிவப்பு கறுப்பு முதலாகிய நிறபேத மடைதல் பிரதானக் குறிகளாகும்

சிகிச்சை

இந்நூலில் கூறப்பட்டுள்ள ஆனந்தபைரவ மாத்திரை, சிந்தானந்தபைரவ மாத்திரை, சங்கரபைரவ மாத்திரை, நீலகண்ட ரசம், சந்நிபாதபைரவரசம், சண்டமாருதச்செந்தூரம், இரசச்செந்தூரம், வீரபற்பம், காடிக்காரலிங்கச்செந்தூரம், அக்கினிகுமாரன், மால்தேவிச்செந்தூரம் முதலியவற்றையும், பல்கிட்டல், மூர்ச்சை, ஆடல், பாடல், தவித்தல் என்னும் சந்நிபாதங்களாக இருப்பின், திருநீலகலிக்கம், சந்நி கலிக்கம், ஆக்கிராணப்புகை ஆகிய இவைகளைக்கொண்டும் சிகிச்சை செய்தல்வேண்டும்.

முற்கூறப்பட்டுள்ள சுரங்களெல்லாம் அவ்வவற்றிற் குரிய காலவளவுபோல் இருந்து, சாந்தப்பட வேண்டியிருப்பதினால்; அதிகமருந்துகளை மென்மேலும் கொடுத்து வயிற்றில் விரணமாகாதபடி அதிகஜாக்கிரதையாக அப்போதைக்கப்போது தோஷப்பிரகோபங்களினால் உண்டாகிய கஷ்டங்களுக்குச் சிகிச்சைசெய்து ரோகம் மேலிடாமல் பார்வையிட்டு வருவது சிறந்த பண்டிதரின் கடைமையாகும்.

சுரரோகத்தில் காணும் சில விபரீத கஷ்டங்களை நிவர்த்தி செய்ய உபாயம் பின்வருமாறு.

சுரத்தின்பேரில் தலைவலி யிருப்பின்

(மேல்பூச்சு)

சாம்பிராணி, கஸ்தூரிமஞ்சள், சுக்கு, பெருங்காயம், உளுந்து இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ விராகனெடை அபினி $\frac{1}{4}$ விராகனெடையாகக் கல்வத்திலேனும் அம்மியிலேனும் வைத்து முலைப்பாலால் அரைத்து, நெற்றி, கன்னம், கழுத்து முதலிய நோயுள்ளபாகங்களில் தடவி நெருப்பனலில் உலரும்படி காய்ச்சத்தலைவலி, தலைபாரம் நிவர்த்தியாகும்

சுரத்தின்பேரில் மலம் சலம்கட்டி வீக்கம்கண்டால்

பொன்மேனிபாக வறுத்த கருஞ்சீரகம், மிளகு, கரிசாலை, வகைக்குபலம் $\frac{1}{4}$ சுக்கு, சிற்றரத்தை, கடுக்காய்த்தோல் வகைக்குப் பலம் $\frac{1}{2}$ இவைதம்மை யிடித்து ஒரு புதுமட்கடத்தில் போட்டு $\frac{1}{2}$ படி சலம்விட்டு $\frac{1}{4}$ படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து அதனில் ஒரு விராகனெடை இலவங்கப்பட்டைச் சூரணமும்,

இரண்டு சிட்டிகை பொரித்த வெங்காரத்தையும் போட்டுக் கலக்கி மூன்று வேளையாகப் பங்கிட்டு மலமும் சலமும் தாராளமாக போகும்வரையில் 6 மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்துவர வேண்டும். பின்னர் சுரத்தைபரிகரிக்கக்கூடிய ஏதேனும் ஒரு அவுழ்தத்தைக் கொடுத்துவரின் நன்மை தருமென்பது திண்ணம்.

சுரம் தேகத்திலேயே சிரணித்து சீதளத்தால் தேகம் ஆலங்கட்டிபோல் குளிர்ச்சிபெறினும், வீக்கம் காணினும் காடிக்காரரச செந்தூரத்தை $1\frac{1}{2}$ குன்றியெடை தேனில் மத்தித்துக்கொடுக்கவும். மூன்றுமணி நேரத்திற்குள் உஷ்ணம் பிறக்காமலிருந்தால் மீண்டும் ஒருகுன்றி செந்தூரம் முன்போல் தேனில் மத்தித்துக் கொடுக்கவும். அதனிலும் சரிவர தேகஉஷ்ணம் பெறாவிடின் 3 மணி நேரத்திற்கு பின்னர் $\frac{1}{2}$ குன்றியெடை கொடுக்கவும். இங்ஙனம் கொடுப்பதில் தேகமுஷ்ணப்படுவது மல்லாமல் சீதளத்தா லுண்டாகிய வீக்கமும் காணுதொழியும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் பெழுகுத்தைலம், அண்டத்தைலம், கற்பூரத்தைலம் முதலியவைகளிலொன்றை தேகமுழுவதும் பூசித் தேய்த்து கோதுமைதவிட்டை சலம் தெளித்து பிசறி இருப்புவாணலியிலிட்டுத் தீப்பிடிக்காமல் வறுத்து சீலையில் முடிச்சுக்கட்டி தாங்கக்கூடிய சூட்டில் ஒத்தடம் கொடுக்கவும். சூடாறியபின் மறுபடியும் முன்போல் வறுத்து சீலையில் முடிச்சுக்கட்டி ஒத்தடம் கொடுக்கவும்.

### வேறு

பொன்மேனியாக வறுத்த கொள்ளு, மஞ்சள், கற்பூரம் இவைகளைச் சன்னமாகப் பொடிச்செய்து தேகத்தில் சூடுபிறக்க தேய்க்கவும். இதனால், தேகத்தில் ஜீவாக்கினி விருத்தியாகும்.

### சுரத்தின்பேரில் விக்கலிருப்பின்

சாம்பிராணி, நல்லவெல்லம், இவையிரண்டையும் சமனெடையாகக் கல்வத்தில் போட்டு மெழுகுபோ லரைத்து வைத்துக் கொண்டு வேளைக்கு தூதுளங்காய் பிரமாணம் மூன்றுமணி நேரத்திற்கு ஒருமுறையாகக் கொடுத்துக்கொண்டு வர இரண்டு மூன்று மாத்திரைகளின் பிரயோகத்திலேயே விக்கல் நின்றுவிடும்.

சுரத்தின்பேரில் விக்கல், நாவறட்சி, முட்பாய்தல் முதலிய தோஷங்கள் ஏற்பட்டிருப்பின்

பழைய செருப்புத்தோல், பாக்கு, திப்பிலி, மிளகுஇவைகளைச் சுட்டுக் கரியாக்கி சமனெடையாகக் கல்வத்திலிட்டு தேன்விட்டு குழம்புபதமாக அரைத்து வைத்துக்கொண்டு ¼-மணி நேரத்திற் கொருமுறை ஒரு விரலால் வழித்து நாவில் தடவிக்கொண்டு வர 3-மணி நேரத்திற்குள் எத்தகைய கொடிய தோஷங்களினால் உண்டான விக்கல் நாவறட்சி, கிருஷ்ணதோஷமாயினும் நிவர்த்தியாகும்.

வேறு

அரிசி திப்பிலி, கருஞ்சீரகம், மயிலிறகு இம்மூன்றையும் சமனெடையாகச்சட்டியிலிட்டு வெளுத்து சாம்பலாகும் வரையில்வறுத்துக் கல்வத்திலிட்டு அரைத்து தேன்விட்டு மத்தித்து வைத்துக் கொண்டு முன்போல் ஒருவிரலால் வழித்து நாவில் தடவிக்கொண்டு வர, விக்கல் வாந்தி முதலியவை குணமாகும்.

வேறு

மயிலிறகு, சீரகம், மான்கொம்பு, ஏலங்காய்வித்து, தாளிசப்பத்திரி, எலுமிச்சம்பழத்தோல், நெல்பொரி இவைற்றைச் சமனெடையாக நிறுத்து, கறுப்பு பட்டுத்துணியினிடையில் வைத்து பந்து போல் சுருட்டி தேனில் தோய்த்து ஒரு அகண்ட மண்ணோட்டில் வைத்து அடுப்பிலேற்றி எரித்து பற்றி எரிந்து கரியாக நின்றபின் கல்வத்திலிட்டு தேன்விட்டரைத்து வைத்துக்கொண்டு முன்போல ஒரு விரலால் வழித்து நாவில் தடவிக்கொண்டுவர வாந்தி, விக்கல், குமட்டல், நாவறட்சி முதலியவைகள் தீரும்.

சுரத்தின்பேரில் வாந்தி குமட்டல் இருப்பின்

படிகாரச் செந்தூரம், வேப்பிலைக் கருக்குக்கியாழம் முதலியவற்றைக் கொடுக்க குணம் உண்டாகும்.

சுரத்தின்பேரில் நாவறட்சி இருப்பின்

வீரசச் செந்தூரம், நாயுருவி கருக்குக்கியாழம், அதிமதுரக் கியாழம் முதலியவற்றி லொன்றைக் கொடுக்க, குணம் உண்டாகும்.

சுரத்தின்பேரில் வாய்பிதற்ற லிருப்பின்

பொட்டுநீக்கிய உளுத்தம் பருப்பை எந்திரத்தி லிட்டு மாவாக அரைத்து விசம்படி மாவில் சிறிது சலம்விட்டுப் பிசைந்து

அடைதட்டி ஒரு இரும்பு வாணுவிலிட்டு திருப்பாமல் வேகச் சுட்டெடுத்து தாங்கக்கூடிய சுடுகையில் அடையின் மேற்புறம் (குவிந்த பாகம்) சிரசில் படும்படியாக வைத்து சீலையால் கொஞ்சம் வரிந்து கட்டவும். அடையின் சுடுகை ஆறினபின்னர் முன்போல் வேறொரு அடையைச் சுட்டுகட்டவும். இப்படி 4-5முறை கட்டுவதற்குள் பித்தம் சிரசிலிருந்து இறங்க வாய்பிதற்றல் நீங்கும்.

சுரத்தின்மேல் மலச்சிக்கல் இருப்பின்

சண்டமாருதச் செந்தூரத்துடன் நாலுக்கொன்று சுத்தி செய்த வாளம் சேர்த்தரைத்து சித்தப்படுத்தி யதில் குன்றிஎடை தேனில் கொடுக்கவும். இப்படி மலம் சரிவர போகும்வரையில் ஒரு வேளையோ அல்லது இருவேளையோ கொடுத்து நிறுத்திவிட்டு பின்னர் தனிச் சண்டமாருதச் செந்தூரம் கொடுக்கவும்.

வேறு

அரைதோலா சோம்புச்சூரணம் அரைதோலா அதிமதுரச்சூரணம் இவ்விரண்டையும் கலந்து இரவுகாலத்தில் வெந்நீரில் கலக்கி கொடுத்துவிட, மறுநாட் காலையில் ஒருமுறை அல்லது இருமுறை விரோசனமாகும். மறுநாட்காலையில் சுரத்திற்கேற்ற சிகிச்சை செய்க.

சுரத்தின்பேரில் பேதியிருப்பின்

இலிங்கச் செந்தூரத்துடன் ஒரு குன்றியெடை ஜாமையோர்ட்டுப்பற்பம் சேர்த்துத்தேனில் மத்தித்துக் கொடுத்துவர இருவேளையில் பேதி குணமாகும்.

வேறு

சண்டமாருதச் செந்தூரத்துடன் எட்டுக்கொன்று அபினி சேர்த்தரைத்து சித்தப்படுத்தியதில் குன்றியெடை தேனில் கொடுக்கவும் இப்படி பேதி சரிவர நிற்கும்வரையில் ஒருவேளையோ அல்லது இருவேளையோ கொடுத்து நிறுத்திக்கொண்டு பின்னர் தனிச் சண்டமாருதச் செந்தூரம் கொடுக்கவும்.

சுரத்தின்பேரில் இருமல் இருப்பின்

காடிக்காரலிங்க செந்தூரம், மால்தேவிச் செந்தூரம், சண்டமாருதச் செந்தூரம் முதலியவற்றி லொன்றைக் கொடுத்துவருவதுடன், இடையில் பச்சைகற்பூர சூரணம், சிங்கிபற்பம், இருமல் கியாழம் முதலியவற்றைப் பிரயோகித்தல் பெருந்த நன்மையை உண்டாக்கும்.

## குன்மரோக விலம்பகம்

## குன்மம்

## (DYSPEPSIA)

### குன்மரோக பூர்வரூபம்

குன்மரோகமானது பித்தம் அதிகரித்ததினால் அதிக ஏப்பம், மலபந்தம், வயிறுநிறைந்ததுபோ லிருத்தல், துர்ப்பலம், குடலிரைச்சல் வயிற்றில் அற்பக்கூச்சலோடு உப்பசம், நோதல், அஜீர்ணம், வாந்தி, அசதிஎன்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப்பெற்றிருக்கின்றது. இது வாதகுன்மம், பித்தகுன்மம், சிலேத்தும குன்மம், சன்னிகுன்மம், சூலகுன்மம், எரிகுன்மம், சத்திகுன்மம், வலிகுன்மம் என எண்வகையாகக் கூறுவர்.

### 1. வாதகுன்மம்

நடைகுறைதல், மலச்சிக்கல், தேகங்கடுத்தல், உறக்கம்,தியக்கம், தேகம் கனத்தல் ,உழலை, அற்பவுண்டி, சக்திக்குறைவு, கைகாலோய்ச்சல், தலைவலி ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

### சிகிச்சை

பெருங்காயச் சூரணம், இந்துப்புச் சூரணம், அஷ்டதீபாக்கினிச் சூரணம், நாயுருவி உப்பு, பிரண்டையுப்பு, || பஞ்சலவண பற்பம், || பஞ்சலவண திராவகம், அக்கினி குமாரன், சுய அக்கினி குமாரன் முதலிய அவிழ்தங்களைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்.

### 2. பித்தகுன்மம்

முகம் மஞ்சள்நிறம், ஒக்காளம், வாந்தி, மனக்கோளாறு, மயக்கம், நெஞ்சில் கோழை, தேகவனல், கைகாலோய்ச்சல், வெய்யலைக் காணின் மயக்கம், சிறுநீர் சிவந்திருத்தல், மந்தம், முக்கலுடன் மலஞ்சாரல், மேல் சுவாசம் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

### சிகிச்சை

நாரங்காதிலேகியம், வில்வாதி லேகியம், மகாவில்வாதி லேகியம், புளிபாரை கிருதம், குன்மகுடார லேகியம் முதலியவற்றைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்.

### 3. சிலேத்துமகுன்மம்

வாயில் சலம்ஊறல், இளைப்பு, தேகம்வற்றல், தேகங்கறுத்தல், துர்ப்பலம், அன்னத் துவேஷம், தலைச்சுற்றல், நெஞ்சிற்புகை

கம்பியதுபோல தோற்றல், பயம், நடுக்கம், தலைபாரம் ஆகிய இக் குணங்களை யுடையதெனக் கூறுவர்.

### சிகிச்சை

இந்துப்புச் சூரணம், பெருங்காயச் சூரணம், நாயுருவி உப்பு, குன்மகுடார லேகியம், சூதபற்பம் முதலியவற்றைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்.

### 4. சந்நிகுன்மம்

தியக்கம், மயக்கம், குளிர், அன்னஞ் செல்லாமை, அடிவயிற்றி லிரைச்சல், வாய் நீர் சுரப்பு, வயிற்றுப்பசம், கழிச்சல், உஷ்ணம், நெஞ்சில் புகைச்சல், அதிசுவாசம், தேகங்குளிர்ச்சி, திடுக்கிடல், வாய்துவர்ப்பு ஆகிய இக்குணங்களையுடைய தெனக் கூறுவர். இது திரிதோஷங்களின் வன்மையாற் பிறந்ததனல் அசாத்தியமாகும்.

### சூலகுன்மம்

பதார்த்தங்கள் செரித்திடாது, ஆகாரஞ் செல்லாது, துருத் திக்கொண்ட காற்றைப்போல் வயிறு உப்பசமாக இருப்பதுடன் அசதி, உடலுலரல், நடைகுறைவு, கைகாலெரிச்சல், அடிவயிற்றில் குடல்புரண்டு வில்லுபோல் பிகுத்தமாதல் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

### சிகிச்சை

சீரணசஞ்சீவி லேகியம், இஞ்சிலேகியம், சௌபாக்கிய சுண்டி, ||பஞ்சலவணபற்பம், * தசதீபாக்கினிச்சூரணம், அஷ்டதீபாக்கினிச் சூரணம் முதலியவற்ருல் நிவர்த்திக்கவேண்டும்.

### 6. எரிகுன்மம்

அடிவயிற்றில் எரிச்சல், குடல்புரட்டல், வாய்குமட்டல்,வாய் நீரூறல், தலைவலி, வயிற்றுப்பசம், வயிற்றிரைச்சல், புளியேப்பம், வியர்வை, பேதி, சரீரம் இளைத்தல், எரிச்சல், அன்னஞ்செல்லாமை, இருமல் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர். இந்த ரோகத்தை "ஆர்ட்பர்ன்" (Heart Burn) என ஆங்கிலேய மருத்து வர்கூறுவர்.

### சிகிச்சை

பித்தகுன்மத்திற்கு வரையப்பட்ட அவிழ்தங்களே இதற்கு யுக்தமானதென் றுணர்க.

## 7. சாத்திககுன்மம்

ஈரலுக்குள் எரிவு, ஏக்கம், தியக்கம், மயக்கம், வாந்தி, வயிற்றுப்பசம், அற்பவலி, சக்திக்குறைவு, மலபந்தம், நடைக்குறைவு, சிறுநரம்புகள் புடைத்தல், தேகத்தில் திமிர் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர். இந்த ரோகத்தை "பிரோசிஸ்" அல்லது "வாட்டர் பிராஸ்" (Pyrosis or Water Brash)என ஆங்கிலேய மருத்துவர் கூறுவர்.

### சிகிச்சை

|| நவவுப்பு திராவகம், * கொடிமாதுளை சர்பத்து, சிக்கஞ்சர் பத்து, *ஜெரிஸ் சர்பத்து முதலியவற்றாலும் பித்த குன்மத்திற்கு கூறப்பட்டுள்ள அவிழ்தங்களாலும் நிவர்த்திக்கவேண்டும்.

## 8. வலிகுன்மம்

வயிற்றில் முள்ளைச் செருகியதுபோ லிருத்தல், வயிற்றுப் பசம், நோவு, சரீரம்உலர்ந்து கறுத்தல், தூக்கம், அற்பவுண்டி, விலாச்செருகல், முதுகுதண்டுவலி, இடுப்புநோய், தேகக்கடுப்பு கடுமையான சுரம், பொய் பசி என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர். இதனை ஆங்கிலேய மருத்துவர் குலைஎரிவு இரைப்பை இசிவு முதலியவைகள் இருப்பின் "கியாஸ்ரோடினியா" (Gastrodynia) என்றும் வயற்றில் முறுக்கல் ஏற்படின் "கியாஸ்டிரால்ஜியா" (Gastralgia) என்றும் கூறுவர்.

### சிகிச்சை

வாதகுன்மத்திற்கு கூறப்பட்ட சிகிச்சையே இதற்குப் பொருத்தமானதெனினும் மலங்கழியும்படி சிகிச்சை செய்தலே விசேடநன்மையைத் தருமென்றுணர்க.

பெரும்பாலும் நூட்களில் இந்த குன்மரோகத்தை ஏழுவிதமென்றும் ஸ்திரீகளுக் குண்டாகின்ற இரத்தக் குன்மத்தோடு எட்டு என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

முன்னர் கூறப்பட்ட வாதகுன்மம் முதல் சந்நிகுன்மம் ஈறாக வுள்ள நான்கோடு வாதபித்த குன்மம், வாதசிலேத்துமகுன்மம், பித்தசிலேத்தும குன்மம், இரத்த குன்மம் எனப்பேதப்படும். இங்ஙனம் பேதப்படும்படியான இரண்டிரண்டு தோஷங்களின் தொந்தங்

களினால் ஏற்படுகின்ற பிரதானகுறி விசேடத்தாலே, இந்நூலாசிரியர் சூலைகுன்மம், எரிகுன்மம், சத்திகுன்மம், வலிகுன்மம் என வரையறுத்துக் கூறியிருக்கின்றனர்.

ஆனால் ஸ்ரீ களுக்குண்டாகும் இரத்தகுன்மத்தைப் பற்றி இங்குக் கூறப்படாமையான் சிறிது கூறுவோம்.

இந்த இரத்த குன்மத்தை இரத்தவாத குன்மம், இரத்தவாத பித்த குன்மம் என இருவகைப்படும்.

இவற்றுள்:—

## இரத்தவாத குன்மம் (Amenorrhoea)

ஒருஸ்திரீ ருதுகாலத்திலாவது, பிரசவித்த காலத்திலாவது, அல்குல் ஸ்தானத்தில் மேகசம்பந்தமான ரோகம் காணுங்காலத்திலாவது வாததோஷத்தை விருத்தியடையக்கூடிய வஸ்துக்களை அபரிமிதமாக யுட்கொள்வதினால் பிறப்பது. இது மாதந்தோறும் அல்குலின்வழியாக வருகின்ற உதிரத்தை உள்ளேயே மறித்து, வயிற்றில் கர்ப்பசம்பந்தமான குறிகளை யுண்டாக்கும். அப்போது இயற்கைக்கு விரோதமான இருதயத் துடிப்பு, மார்பு அதிரல், மசக்கை, ஆயாசம், ஸ்தனத்தில் கொஞ்சம் பால்சுரப்பு முதலிய குணங்கள் ஏற்படும். முன்பு மறிபட்டுத் தோய்ந்து மாமிசத்தைப் போல் கெட்டியாகத் திரண்டுருண்ட கெட்ட ரத்தமானையால், அடிவயிற்றில் வலி, கட்டி அசைவற்றிருத்தல், அழற்சி, அதிசாரம், நாவறட்சி, சுரம் முதலிய பாதைகளுடன், இன்னும் கெட்டுப்போன உதிரத்தின் தன்மையை விளக்குமாறு கருப்பையில் மிகவும் வலி, அல்குலில் துர்நீர்ப்பெருக்கு, துர்நாற்றம், குத்தல், வேதனை முதலியவற்றை யுண்டாக்கும். அந்த உதிரக்கட்டியானது கருவைப்போல் அவயவங்களை அசைத்துத் துடிப்பதில்லை. ஒருநால் பிண்டம்போலப்பருத்துவரின், ஏதேனுமொரு சமயம் சிறிது துடிப்புண்டாகும். இந்நோகத்தில் வயிற்றைப்பருக்கச் செய்யாமல் உதிரக்கட்டி மாத்திரம் பருத்துவரும்.

## இரத்தவாதபித்த குன்மம் (Amenorrhoea)

முற்கூறப்பட்ட இரத்தவாதத்துடன் பித்தம் மிகுதியாயின் சிக்குப்பட்ட கெட்ட ரத்தமானது மாதந்தோறும் வெளியாகும். அக்காலத்தில் அதிக உக்கிரமான நோவு சரீரம், மரத்தல், எரிச்சல்,

பேதி, தாகம், சுரம், கெட்டரத்த மிருக்கும் ஸ்தானத்தில் சித்திர வதையான குத்தல், மர்மஸ்தானத்தில் அதிக நோவு, அதிர்தல் எப்போதும் வேதனையுண்டாக்கும். இதனையே சூதகவாயு எனக் கூறுவர். இத்தகைய ரோகங்களுக்கு சூசிகாவாத நெய், கலிங்காதி எண்ணெய், கலிங்காதி யுப்பு முதலியவைகள் சிறந்த அமிழ்தங்களாகும்.

இங்கு வரையப்பட்ட குன்மரோகத்தை அங்கிலேய மருத்துவர் "டிஸ்பப்சியா" (Dyspepsia) எனக் கூறுவர். இது தேகப் போஷணைக்காகக் கொள்ளப்பட்ட உணவு, ஆமாசயம் சென்று அதிலிருந்து முறையே அக்கினியாசயம் பக்குவாசயம் அடைந்து, ஈரலின் ஒருபக்கத்திலிருந்து உற்பத்தியாகிய சடராக்கினி என்னும் பித்தத்தோடு சம்பந்தப்பட்டு ஜீரணமாகவேண்டும். இந்த சடராக்கினி குறையினும் அதிகரிப்பினும் ரோகத்திற்குக் காரணமென்பர். இதனை "டெம்பரறி டிஸ்பப்சியா" (Temporary Dyspepsia) "பர்மனென்ட் டிஸ்பப்சியா" (Permanent Dyspepsia) என இருவகையாகக் கூறுவர். இவற்றுள் டெம்பரறி டிஸ்பப்சியா ஏதேனும் கடின பதார்த்தத்தையுண்ணவோ அல்லது அதனை ஜீரணிக்கத்தக்க சடராக்கினி இல்லாமையினாலோ திடீரென்று வயிற்று வலி, வாந்தி முதலியவை கண்டு, பரிகாரத்துக்கு உடனே வசப்படும் பர்மனென்ட் டிஸ்பப்சியா நாளுக்குநாள் ஆமாசயம், அக்கினியாசயம், பக்குவாசயம்முதலிய பாகங்கள் விகல்பமடைந்து குன்மரோகத்திற் குண்டான குறிகளெல்லாம் உண்டாகும்.

---

# சூலைரோக விலம்பகம்.

## சூலை

## (PAIN NEURALGIA)

குதஸ்தானத்தையுடைய அபானவாயும் இருதயஸ்தானத்தை யுடைய உதானவாயும் தங்களுக்குரிய தொழிலைவிட்டு இரண்டும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு வயிற்றை விருத்தலுடன் இழுத்துக் கொள்ளும்; இன்னும், வயிற்றிரைச்சல், மலபந்தம். சுரம், சுவாசம் முதலிய உபத்திரவங்களை யெல்லாம் தனக்குப் பழையரூபமாகப் பெற்று முடிவில் வாதாதிகப தோஷங்கள் ஸ்பரிசநரம்புகளில் பற்றி குத்தல், குடைச்சல், வலி, வீக்கம் முதலியவைகளை யுண்டாக்கும். இதனை ஆங்கிலே மருத்துவர்கள் இரண்டுவிதமாகக் கூறுவர்.

அதாவது:—நோயுள்ள இடத்தில் அழுத்தியழுத்திப் பிடிக்க நோய் அதிகப்படின், (Inflammatory) (இன்பிலமேட்டரி)என்றும், நோய் பெரும்பாலும் விலகின் (Irritative) (இரிடேட்டிவ்) என்றும், கூறுவர். இந்த நோய் விட்டுவிட்டுக் காணும் இரவில் அதிகமாகிற குணமுண்டு. இந்தரோகம் நரம்புஸ்தானத்திலேயே காண்பது வழக்கமாக இருப்பினும், வேறு இடங்களில் காண்பதும் உண்டு. திருஷ்டாந்தமாகச் சொத்தைப் பல்லுக்குப்புருவத்திலும், கல்லீரல் வியாதியில் தோன்றும், தமரகவாயு ரோகத்தில் இடதுகையிலும், விரைவாதம் கர்ப்பாசயவியாதி முதலியவைகளில் இடுப்பிலும், அன்னசய வியாதியில் முதுகிலும், முழங்கையின் மேலிருக்கின்ற நரம்புகளில் அடிபட்டால் சுண்டு விரலிலும் நோயுண்டாகும். இத்தனையே அநேகம் உண்டு. இந்த சூலைரோகமானது திடீரென்று கண்டு திடீரென்று போய்விடும். மத்தியில் நோய் இராது எந்தந்த ஸ்தானத்தில் நோய்காண்கிறதோ, அந்தந்த ஸ்தானத்திற்கும் நோயின் பிரதான குணத்திற்கும் ஏற்றவாறு பெயரிட்டிருக்கின்றனர். இங்கு இந்தரோகத்தைப் பதினைந்து விதமாகக் கூறப்பட்டுள்ளது. அதாவது:—

### 1. மேகசூலை (Rheumatism)

கைகால் கடுப்புடன் குடைச்சல், வியர்வை, மலபந்தம், சிவந்த மூத்திரம், சரீரம் இளைத்தல், சீதளம், எரிச்சல், சுரம், மந்தம். பிரமை, மயக்கம் என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்,

#### சிகிச்சை

கெந்தகச்சுடர்தைலம், ரசகெந்தி மெழுகு, தாம்பிர மெழுகு, இலிங்க மெழுகு முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

### 2. முறிச்சூலை (Nephralgia)

ஆண்குறியிலும், கீழ்வயிற்றிலும், குதத்துக்குமேலும், அடிக்குடலிலும் ஓடிஓடிக் குத்தல், தேகமெல்லாம் பரவி வலித்தல், நாபியைச்சுற்றி சுழித்து சுழித்து இழுத்தல், தலைபாரம், சுரம், கண்சிவந்துநீர்சொரிதல் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

இந்த ரோகம் கடினமான தெனினும் மலசலம் கழியும்படியாக * கோடாசுழிமாத்திரை, * வீரமெழுகு (பேதி) முதலியவற்றிலொன்றை இரண்டொரு முறைகொடுத்து பின்னர் மேகச்சூலைக்காகக் கூறப்பட்டுள்ள அவிழ்தங்களால் நிவர்த்திக்கவேண்டும்.

### 3. வாதசூலை

கைகால் உளைத்தல், தடித்தல், திமிர், தாகம், அதிரல், நண், முழங்கால், விலா இவைகளில் கனத்தல், சிறுநீர் சிவந்து கருத்துப்போதல், தேகமெல்லாம் குடைச்சல், நோவு என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

* நவலோக பஞ்சலவண மெழுகு, || கெந்தகசுடர் தைலம், வாலைரச மெழுகு, தாம்பிர மெழுகு, சூதபற்பம் முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

### 4 பித்தசூலை

தேகம் வாட்டத்துடன் வேதனை, கைகால் உளைப்பு, நோவு, தடித்தல், பார்வைமந்தம், நாடி மெலிந்து நடத்தல், சுபாவநிற மாறல், மயக்கம், துர்ப்பலம் என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

மால்தேவிச் செந்தூரம், * அயவீரச் செந்தூரம், அயகாந்தச் செந்தூரம் முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

### 5. சிலேத்துமசூலை

தொண்டையிலே வேதனையுடன் கபாதிக்கம், அடிவயிற்றில் நோவு, வியர்வை, நகக்கண்களில் ரத்தமில்லாமை, தேகம் பஞ்சைப்போல் மெலிதலுடன் வெளுத்துப் புண்போல் எரிதல், அடிவாயில்

நீரூறல் என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர். வாதசூலை யாதியாக சிலேத்துமசூலை ஈறாக உள்ள மூன்றினையும் கவுட் (Gout) or மையால்ஜியா (Myalgia) என்பர்.

### சிகிச்சை

இந்த ரோகமானது கடினமான தெனினும் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு மால்தேவிச் செந்தூரம், * அயவீரச் செந்தூரம் அய காந்தச் செந்தூரம் முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

### 6. ஆமசூலை

புளிப்பு, தித்திப்பு, கசப்பு இவையுள்ள வஸ்துகளை அதிக மாகப் புசித்தலினாலும், உபவாசத்தினாலும் ஆமாசயத்தில் சீதஞ் சேர்ந்து வயிற்றிலும், விலாப்பக்கங்களிலும் வேதனையுடன் கடுத் தலையும் குத்தலையு முண்டாக்குமெனக் கூறுவர்.

### சிகிச்சை

இந்த ரோகம் கடினமான தெனினும் * பாஸ்கர லவணம் ஜாதி பலாதி சூரணம், பிரண்டை யுப்பு முதலியவற்றால் நிவர்த்திக்கவேண் டும்.

### 7. சர்க்கராசூலை

முதுகு, விலாப்பக்கம், நெஞ்சு, அஸ்தி, நாபி, குதஸ்தானம் முதலிய விடங்களில் மாமிசம் வளர்தல், சலத்துவாரத்தில் பருக் கான் கல்லுகளைப்போல் மணல்கள் அடைத்துக்கொள்ளல், சரீர வேதனை, மனக்கலக்கம் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறு வர்.

### சிகிச்சை

இந்த ரோகம் கடினமான தெனினும் சலத்துவாரம் முதலிய விடங்களில் சதை கல் முதலியவை யடைத்துக்கொண்டு பாதை படும்போது || எஃகுச் செந்தூரம், || சலமஞ்சரி, காரசூடசத்து பற் பம் முதலியவற்றால் நிவர்த்திக்க வேண்டும்.

### 8. குன்மசூலை

முன்பு சூலைரோகத்தில் கூறப்பட்டுள்ள வாதகுன்மமானது நீண்ட காலமாக இருந்து முடிவில் மலசலபந்தம், வாந்தி, வியர்வை, தாகம், ஏப்பம், மூர்ச்சை, வயிற்றுவலி என்னும் இக்குணங்களோடு தோற்றுமெனக் கூறுவர்.

சிகிச்சை

இந்த ரோகம் கடினமானதெனினும் இலவண பற்பம், திரிலவண பற்பம், பிரண்டையுப்பு முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

9. உலர்த்துச்சூலை.

பித்த உஷ்ணத்தினாலும், அக்கினியினாலும், வறட்சியினாலும், குடல்வாதத்தினாலும், குன்மத்தினாலும், பிறந்து தேகத்தினுட்புறத்தில் உலர்த்தலுடன் குத்தல், வெளிப்புறத்தில் வீங்கித் தடித்தல், சர்வாங்கமும் நோதல் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

அயவீரச் செந்தூரம், மால்தேவிச் செந்தூரம், அயகாந்தச் செந்தூரம் முதலியவற்றின் உபயோகத்தாலும் வாதநோயை நிவர்த்திக்கக் கூடிய * மைனத்தைலம், அண்டத்தைலம் முதலியவற்றின் மேற்பூச்சுதலினாலும் நிவர்த்திக்கவேண்டும்.

10. நிதம்பச்சூலை

பிரசவித்த காலத்தில் உதிரக்கட்டை சரியாக வெளிப்படுத்தாமையால், உள்ளேயே அடங்கி ரத்தமும் சலமும் தேங்காய்க்குள் பூமூளையைப்போல் அல்குலின் வாயை அடைத்துக்கொள்ளும் போது பிறந்து, அவ்விடத்தில் குத்தல், அதை அசைத்தால் நீரிறங்கல், உட்புறம் கனத்தல், சரீரம் தளர்ந்து ஊதலுடன் வெளுத்தல் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

இந்த ரோகம் அசாத்தியமானதெனினும் * வீரமெழுகு (பேதி) * பஞ்சநவலோக மெழுகு, கலிங்காதி யெண்ணெய் முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

11. கறைச்சூலை

உதிரம் பொங்கித் தோலைப் பற்றுவதினாலும், பற்றியது நரம்புகளின் துவாரத்தில் தடைபட்டு தங்குதலினாலும் உண்டாகி கீழ்முதுகை யனுசரித்து அவ்விடத்தில் அதிக வலித்தல், கைகால் உளைப்பு, அறிவும் தேஜசும் கெடல் ஆகியஇக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

அயவீரச் செந்தூரம் || லிங்க மெழுகு, || மேகவாயு குளிகை முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்

12. சுரசூலை

விலா இருபக்கங் களிலும் இழுத்துக்கொண்டு நோதல், வாயில் மாறாது சலம்ஊறல், வாந்தி, ஒரு வேளை அந்த வாந்தியில் ரத்தம் விழுதல், தேகம் முழுதும் நோதல், நெஞ்செரிவு உளைச்சல், வயிற்றை இழுத்துப் பிடித்தலுடன் நோதல், அஜீர்ணம், மயக்கம் என்னும் இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

முதலில் மலப்பிரவர்த்தி யாகும்படி * கோடாசுழி மாத்திரை, * பஞ்சநவலோக மெழுகு, காலகோடிரசம் முதலியவற்றி லொன்றைக் கொடுத்து பின்னர் மால்தேவி, அபகாந்தம் முதலியவற்றை சிறு அளவாக சிறிதுநாள் கொடுத்து நிவர்த்திக்கவேண்டும்.

13. பக்கசூலை

பக்கத்தில் குத்தல், திருகலுடன் அண்டத்தில் நோதல், சுரம், உடம்பு புண்போல் நோதல், தலைவலி, தேகம் கனத்தல், திமிர், கைகால் ஒச்சல், கண்ணிற் புகைநம்மியதுபோ லிருத்தல் ஆகிய இக் குணங்களை யுடையதெனக் கூறுவர்.

சிகிச்சை

முதலில் இரண்டொருநாள், * கோடாசுழி மாத்திரை, * பஞ்சநவலோக மெழுகு, காலகோடி ரசம், * தேங்காய்மெழுகு முதலியவற்றி லொன்றை மலப்பிரவர்த்தி யாகும்படியாகக் கொடுத்துவிட்டு பின்னர், * விஷ்ணுசக்ர மாத்திரை, அயவீரச் செந்தூரம் முதலியவற்றைக் கொண்டு நிவர்த்திக்கவேண்டும்.

14 கருப்பச்சூலை

இடுமருந்து, வஞ்சனை, சூனியம், பெருங்காயச்சூடு, பிரசவித்த காலத்தில் தங்கிய அழுக்கு ஆகிய இவைகளினால் கீழ்வயிற்றில் ரத்தமானது உறைந்து, கருப்பத்தைப்போல் திரண்டு புரண்டு கொண்டு, அடிவயிற்றில் குத்தலுடன் நோயுண்டாக்குவது மன்றி அனந்த சங்கடம் பிறக்குமெனக் கூறுவர்.

### சிகிச்சை

மால்தேவிச்செந்தூரம், *பஞ்சநவலோகமெழுகு, *சூசிகாவாத நெய், கலிங்காதி எண்ணெய் முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

## 15. தூரச்சூலை

கெட்ட உணவுகளினால் வாய்நீரூறல், நெஞ்செரிவு, ஏப்பம், ஈரலைப்பற்றி பக்கத்திற் குத்தல், சிரசும் வயிறும் வீங்குதல்; அடிவயிற்றல் திரண்டு புரண்டு அடிக்கடிவந்தமர்ந்து ஓங்கி எழும்பல், மாதாந்தர ருதுகாலத்தில் கொஞ்சம் உதிரம்பட்டுச் சிக்கல் ஆகிய இக்குணங்களை யுடையதெனக் கூறுவர்.

### சிகிச்சை

இதற்கு சிகிச்சை கூறப்புகின் கருப்பச்சூலைக்காகக் கூறப்பட்டுள்ள அவிழ்தங்களே சிறந்ததாகும்.

சில நூல்களில் சூலைரோகத்தை ஏழுவிதமாகக் கூறியுள்ளார். அதாவது வாதசூலை முதலாக குன்மசூலை ஈறாக உள்ள ஆறோடு திரிதோஷசூலையென ஒன்று கூறுவர். அதன் விபரத்தை அடியிற் காண்க.

### திரிதோஷசூலை

வாதபித்த சிலேத்துமம் என்னும் மூன்று சூலைகளிலும் உண்டான எல்லாத்துர்க்குணங்களையும் ஏககாலத்தில் உண்டாக்குமெனக்கூறுவர். இதுவுமன்றி சிலநூல்களில் சூலைரோகத்தைப் பதினெட்டுவகையாகவும் கூறப்பட்டுள்ளன.

### சிகிச்சை

இதற்கு சிகிச்சை அரிதாயினும் அக்காலத்தில எந்ததோஷத்தின் மிகுதியால் உபாதை மேலிட்டிருக்கின்றதோ அதைக் கவனித்து, பொதுவாக இதுவரையிலும் சூலைரோகங்களுக்காகக் கூறப்பட்டுள்ள அவிழ்தங்களி லொன்றைக் கொடுத்து நிவர்த்திக்க வேண்டும்.

---

# வாதரோக இலம்பகம்.

## வாத ரோகம்

## (PARALYSIS-PALSY-NEURALGIA)

### வாதரோக இயல்பு

இது கசப்பு, துவர்ப்பு, காரம் முதலியவற்றை அளவுக்குமிஞ்சி புசித்தலினாலும், ஆறின அன்னத்தை புசித்தலினாலும், அதிகமாகப் பட்டினி யிருப்பதாலும், அதிகப் பளுவை சுமப்பதினாலும், பகல் நித்திரையினாலும் இரா விழித்தலாலும், சிற்றின்ப காதல் கொள்வதினாலும் பிறக்கின்றது.

### வாதம் வர்த்திக்குங் காலம்

இந்த ரோகமானது ஆனி, ஆடி, அற்பசி, கார்த்திகை முதலான மாதங்களில் விசேடமாகப் பிறக்கின்றது.

கீழ்கூறப்பட்டுள்ள வாதஸ்தம்ப முதலாய் தந்தவாயு ஈறாக உள்ள ரோகத்தை 8 விதமாகப் பிரித்திருக்கின்றனர்.

இங்ஙனம் கூறப்பட்டுள்ள வாதரோகம் எண்பத்தினான்கினுள் நரம்புகளைப்பற்றி நோயுண்டாகும் ரோகங்களை எல்லாம் நியுரால்ஜியா (Ne uralgia) சூலை ரோகமென்றும், நோய் இல்லாமல் சரீரத்தின் ஓர் பாரிசத்திலாவது அல்லது பல பாரிசத்திலாவாது பரிசம் கெட்டுப்போனால் பொராலிசிஸ் (Paralysis) என்னும் அசையும் தன்மையத்துப்போனால் பால்சி (Palsy) என்றும் ஆங்கிலேய மருத்துவர் கூறுவர். இந்த ரோகத்தில் பரிசமும் அசைவும் கெட்டிருந்தால் பெர்பக்ட் (Perfect) பூரணமான வாதரோகம் என்றும், இரண்டிலொன்று கெட்டிருந்தால் இம்பர் பெக்ட் (Imperfect) சாமான்னிய வாதரோகமென்றும் கூறுவதுடன், நம்முன்னோர்கருத்தின்படியே ரோகத்தின் பிரதான குணத்தினையோ அல்லது இடத்தினையோ முன்னிட்டுப் பெயரிட்டிருக்கின்றனர்.

### 1. வாதஸ்தம்பம்

இது, வாதமெழுந்து பொங்கி காலின்புறவடியைப்பற்றி குடையும், வீங்கும், தேகமெங்கும் நோயுடன் திமிருண்டாக்கும் இது அதிக சீதளமான வஸ்துக்களை மிதமிஞ்சிப் புசிப்பதினாலும் அதற்குச் சரியான உஷ்ணவஸ்துக்களை புசியாமையினாலும் இருபாதங்களி லிருக்கின்ற சப்ததாதுக்களையு மனுசரித்து அப்பாதங்களை அடித்துக்கொள்ளச் செய்யும். அத்தருணம் எழுந்துநின்றாலும்

தொடையில்நோயுடன் நடக்கவிடாமல் உதறும். ஆதலால்,இதற்கு உதறுவாத மென்பர்.

2. வாதகர்ஷ்ணம்

இது, பாதத்தை தூக்கும்போதும், வைக்கும்போதும் அவைகளில் சாணத்தை அப்பியதுபோ லிருக்கும். கால் குதிநரம்புகளில் கனத்துத் திமிருண்டாக்கும். குனியவும் நிமிரவும் வசப்படாது. காலில் மாத்தலும் கனத்தலும் நோதலுடன் ஒன்றோடொன்று அடித்துக்கொள்ளத் தூண்டும். இது அதிக சீதளமான ஸ்தானத்தில்வாசம்செய்வதினாலும் குளிர்ந்தகாற்றிலிருப்பதினாலும் பிறந்தது.

3 கரஸ்தம்பம்

இது, இரண்டுகால் அடிகளை நெருப்பில்வைத்தாற்போல் எரிச்சல் உண்டாக்கும். தேகம் வெளுக்கும். உலரும். காலில் புழு ஊர்தல்போல் மிகவூர்ந்து நடக்கவிடாது. வாய் உலரும், உடல் கனக்கும், இது அதிக வாதவஸ்துக்களைப் புசித்தலினால் பிறந்து,சர்வாங்கத்திலும் வியாபித்து, பின்பு கைகளை அனுசரிக்கும். அப்போது கைகளை அசைத்தலும் நீட்டலும் முடக்கலும் கூடாமையாக இருக்கும்.

4. தலஸ்தம்பம்

இது, உள்ளங்காலில் கனத்து குடைச்சலென்னும் பாதையை உண்டாக்கும் தேகம் உலரும்; மேல்மூச்சு உண்டாகும் தாகமெடுக்கும். தேகம் தளர்ச்சிபெறும். இது கடுகு, உப்பு, புளி முதலியவற்றை யதிகமாகப் புசித்தலினா லுண்டாகின்றது.

5. பூசுவாதம்

இது, மலதுவாரத்தில் அம்பு தைத்ததுபோல் குடைந்து நோயுண்டாக்கும். பின்னர், கால் அடியைப்பற்றி அதிக நோயுடன் குடைச்ச லுண்டாக்கும் உருக்குலையும். காலில் எதனையோ பூசியது போல் உணர்ச்சி யுண்டாக்கும்.

6 களாயகஞ்சம்

இது, கால் கை தொடை முதலியவைகளில் குடைந்து நடக்கவொட்டாமல் முடமாக்கி, கரடுகட்டி, சடம் வெளுத்து தினவும் சிரங்கு முண்டாக்கும். இத்தருணத்தில் சிலேத்துமம் அதிகரித்து அருசி மயக்கம் முதலியவற்றை உண்டாக்கும். இது சீத

காலத்தில் குளிர்ச்சியான பூமியில் சஞ்சரிப்பதினால் சகல கீல்களி லும் சீதளம் வியாபித்து உண்டாகின்றது.

### 7. ஊருஸ்தம்பம்

இது, வாய்வானது உள்ளடங்கி அடித்தொடை இரண்டையும் பற்றிக் கைகால் விரல் சுற்றி கனத்து சாணமப்பியதுபோல ஸ்பரிச முண்டாக்கித் தேகம் ஊதி திமிருடன் நடக்கொணுமற் செய்யும். இந்த ரோகம் முற்றிலும் அசாத்தியம்.

### 8. வாதகண்டகம்

இது, நடக்கும்போதும், உயரமாகத் தாவி எட்டும்போதும், சலத்தில் இறங்கி நடக்கும்போதும், மயக்கமுற்று தள்ளாடி விழச்செய்யும். அப்போது தேகமெல்லாம் பாம்புவிஷம் ஏறுவது போல் உணர்ச்சிகண்டு தேகம் தளர்ச்சி பெறும்.

### 9. கிருத்திரசிவாதம்

இது, தேகத்தில் பாம்புவிஷம் ஏறி இறங்குவதுபோல் தேகத்தி லுள்ள நரம்புகளில் வாயுவானது சேர்ந்துகொண்டு சர்மத்தில் முள்தைத்ததுபோல் குத்தல், கனத்தல், வேதனை முதலியவற்றைப் பிறப்பிக்கும்.

### 10. நரிதலை வாதம் (Arthritis)

இது, முழங்கால்கள் வீங்கி இரத்தம் திரண்டு கால்களை முட க்கவிடாமல், முழங்காலின் கீல்களில் தங்கிவிடும். அவ்விடத்தில் தடித்தல், மாத்தல், நோவு, மலபந்தம், நாடித்தீவரம் முதலிய வற்றை உண்டாக்கும்.

### 11. கும்பவாதம்

இது, சப்ததாதுக்களை யனுசரித்து முடிவில் தோளின்மீதும் கரத்தின்மீதும் பாம்பைப்போ லூர்ந்து நோயுண்டாக்கும். கன்னம் கண்முதலிய விடங்களில் எரிச்சல் காணுவதுடன் சிரசிற் றுடிப்பு, நாபியின்கீழ் வலி, அடிநாவி லழர்ச்சிமுதலியவற்றை யுண்டாக்கும்.

### 12. மலைத்தகம்பம்

இது, கையின் மணிக்கட்டிலும், கையின் குவிந்த கீல்களிலும் உள்ள நரம்புகளில் வியாபித்து கனமாக உரத்து அங்கங்களில் துடி ப்பு, கைகால்கள் நடுக்கம், அரைக்குக்கீழ் திமிர்முதலியவற்றையுண்

டாக்கும். இன்னும் இந்த ரோகிக்கு வெளியாகும் அபானவாயுவானது அதிக துர்நாற்றத்தை யுடைத்தா யிருக்கும்.

### 13. பாணிக்கம்பம்

இது, வாயுவின் பிரகோபத்தால் தேகத்திலுள்ள நரம்புகளில் வியாபித்து பசியின்றி ஆகாரத்தை யொடுக்கி, இரண்டு கைகளிலும் திமிருடன் உதறலுற்று, உறக்கமில்லாமல் வாய்விட் டலறும்படி செய்யும்.

### 14. கூனிவாதம்

இது, மலாசயத்தி லிருந்து மலதுவாரம் வரையில் வாயு ஸ்தம்பித்து நீங்காத வேதனையை யுண்டாக்கி வாந்தியையும் மயக்கத்தையும் விளைவிப்பதுடன், தேகம் வலித்து குளிர்ச்சியடைந்து கோழிப்பேன் ஊருவதைப்போன்ற உணர்ச்சியை யுண்டாக்கும்.

### 15. ஆகுனிவாதம்

இது, தேகமெல்லாம் குத்தலுடன் குளிர்ச்சிபெறச் செய்வதுமன்றி, இருமல், வாய்நீரூறல் தேகவசைவு, வியர்வை, தேகம் வெளுத்தல், ஊதல், வீக்கம், தாகம் ஆகிய இக்குறிகளோடு வருத்தமுறச்செய்யும்.

### 16. ஆக்ஷேபகவாதம்

இது, வாயுவானது பிரகோபித்து வயிற்று விலாப்பக்கங்களில் ஓடி, ஈரலைப்பற்றி நோயுண்டாக்குவதுடன் கைகால்முதலிய வங்கங்களில் ஓச்சல், அசதி, நோய் முதலியவற்றைப் பெறச்செய்யும்.

### 17. வாதஉபகாதம்

இது, கைகால் சந்து முதலிய வங்கங்களில் திமிருண்டாக்கி சாணம் அப்பியதுபோல் உணர்ச்சிபெறச் செய்வதுடன் நடைகொடாமல் வாட்டம், மயக்கம்முதலிய குறிகளுடன் வருந்தச்செய்யும்.

### 18. நெற்றிசூலை

இது, கண் புருவம் நெற்றிமுதலியவிடங்களில் குடைவதுடன் நாசித்தண்டு, குரல்வளையம், கை கால்முதலான அங்கங்களிலும் கடுப்புண்டாக்கும். இன்னும் சிரசில்வலி, குத்தல், மயக்கம், அழுகுரலான நித்திரை முதலியவற்றைப் பிரதான குறிகளாகப் பெற்று விளங்கும்.

## 19. கர்ணசூலை

இது, செவியின் துவாரங்களில் குத்திக் குடைவதுபோல் உபத்திரவம் செய்யும். இன்னும் மனச்சலிப்பு, தாகம், வயிற்றுமந்தம், மயக்கம், திகில், வாய்கசந்து புளித்தல் ஆகிய இக்குணங்களையும் பெற்றிருக்கும்.

## 20. செவிபடுவோதம் (Deafness)

இது, செவியில் கடலிரைச்சல்போல சப்தம் பிறப்பதுடன் களிமண்கொண்டு காதிலடைத்ததுபோ லிருக்கும். இதுவேயுமன்றி தொண்டையில் கபம்கட்டி இருமச்செய்யும். காதும் செவிடுபடும்.

## 21. பக்கவாதம் (Hemiplegia)

இது, வாயுவின் உபரியால் தேகத்திலுள்ள நரம்புகள் ஸ்தம்பித்து வலிக்கும் பக்கத்தில் இசிவு உண்டாகும், கையும் காலும் கோணும், வியர்வை யுண்டாக்குமென்பர். இன்னும் அது முதிர்வடைந்தால் கால் கோணி தரையில் நடக்கவிடாது, கையும் பிடிக்கவிடாது, அப்பாரிசத்தின் நரம்புகளின் ஸ்பரிசம் அற்று சோர்வை அடையும். இன்னும் ரோமசிலிர்ப்பு வாய்கோணல், எரிச்சல் முதலிய அறிகுறிகளும் உண்டாகு மென்பர். இதனை பாரிசவாதம், பக்ஷகாதவாத மெனவும் கூறுவர்.

## 22. பேய்வாதம்

இது, கால், கை, வயிறு, மார்பு, விரல், மூக்கு, கழுத்துமுதலிய விடங்களில் பற்றி நொந்து வீங்கித் திமிருண்டாக்கும். ஒரு பொருளையும் உறுதியாக பிடிக்க ஒட்டாமல் செய்யும்; வாய் கசந்து குமட்டல், மயக்கம்முதலிய குறிகளைப் பிறப்பிக்கும்.

## 23. பிராணலயவாதம்

இது, வாயுவின் பெருக்கத்தால் கண்களிலுள்ள கருவிழிகளை வெளுக்கச்செய்து பார்வையை மந்தப்படுத்துவது மன்றி கைகால்களையும் பற்றி மரத்தல், குத்தல், கனத்தல் முதலியவைகளை யுண்டாக்கி, நடுக்கத்தையும் உண்டாக்கும்.

## 24. சிலேத்துமஸ்தம்பம்

இது, மலத்துவாரத்தி னின்றும் சலத்துவாரத்தி னின்றும் முறையே மலம், சலம் கழியும்போது வெடிப்பின்றி சகிக்கமுடி

யாத வருத்தத்தையும் ரோமசிலிர்ப்பையும் உண்டாக்கும்; இன்னும் சிறுநீரில் மது கலந்திருக்கும்

## 25. சந்துவாதம் (Rheumatic Arthritis)

இது, அவையவ மூட்டுகளில் திமிர்த்து தேகமெல்லாம நொந்து எரிச்சல்கொண்டு தவிக்கச்செய்யும். இன்னும் மயிர்க்கூச்சம், மயக்கம், வாய்நீரூறல், சிலசமயம் வறட்சிமுதலிய குறிகளுடன் எத்தொழில்களையும் நடத்தவிடாமல் உபத்திரவம் செய்யும்.

## 26 சகனவாதம் (Lumbago)

இது, கழுத்தின்கீழும் அரைக்குமேலும் இரண்டு கால்களும் வீங்கும். இன்னும் மனக்கலக்கம் கண்ணெரிச்சல் சிறுநீர் சுருக்கம் முதலியவைகளுடன் தேகமெல்லாம் தேள் கொட்டியதுபோல் கடுக்கும்.

## 27 அற்புதவாதம்.

இது, ஸ்திரீசங்கம் பண்ணும்போதும், கோபித்தபோதும், உரக்கப் பாடும்போதும் அவல், கச்சாயம், பாக்கு கடிக்கும் போதும் வாய்கோணும்.

## 28 உரகவாதம் (Facial Paralysis)

இது, புருவம், காது, தலை முதலிய ஒருபுறத்து அங்கங்களில் வலித்து, வாய்கோணி, நடுங்கி, குளிர்ந்து கூச்சும். இதுவுமன்றி கண்விழிகள் இமைப்புறாமல் வியர்வையும், வாய்நீறும் மிகுதியாக உண்டாக்கும்.

## 29 உரகாரிவாதம்

இது, நெஞ்சும், குரல்வளையமும் நொந்து வாய்வானது ஈரலை பற்றி, அன்னத்தை உட்கொள்ளாமல் செய்யும். இத்துடன் வயிற்றுப்பிசம், நெஞ்சடைப்பு, தேகக்கூச்சம் முதலியவைகளையு முண்டாக்கும்.

## 30 ஆசுவதம்ப வாதம்

இது, உடல் வெளுப்பு, மயக்கம், இருமல், ஈளை நெஞ்சடைப்பு, ஐம்பொறி கலக்கம், நெடுமூச்சு, பாதத்தில் திமிர், முதுகெலும்புநோய், முழங்கால், கைகடுப்பு முதலியவற்றை யுண்டாக்கும்.

### 31 பாசத்தவாதம்

இது, வாய்வின் பிரகோபத்தால் தேகம் கடுத்து, சோம்பலாகி, கண்புகைச்சலடைந்து, பார்வை மந்தப் படுத்துவது மல்லாமல் வாய் வறண்டு, நாடி படபடத்து ஓடும்.

### 32 நேத்திரஉபத்திர வாதம்

இது, நெற்றி, புருவம், காதுமுதலிய விடங்களில் குடைச்சலுடன் உடம்பு ஊதும்; நிற்கவொட்டாமல் தள்ளிவிடும். இன்னும் தேகக்குடைச்சல், வியர்வை, மயக்கம், மயிர்கூச்சம் முதலியவற்றை யுண்டாக்கும்.

### 33 தண்டகவாதம்.

இது, வாய்வானது முதலில் மூலாதாரத்தைப்பற்றி மேலேறி முதுகிலிருந்து, சிரசில் வந்து வியர்த்து, நோயுண்டாக்கி, சர்வாங்கத்தையும் நோயுறச்செய்வதுடன், மலம், சலம் மஞ்சள் வர்ணமாகவும், தேகத்தை தண்டகம்போல் நீட்டவிடாமல் செய்யும்.

### 34. அஷ்டதந்திரவாதம்

இது, மலசலத்தை யடக்குவதாலும், சரீரத்தில் உதிரம் பொங்கித் தோய்வதினாலும் இந்த ரோகம் பிறக்கின்றது; இது ஸ்நானம் செய்யும்பொருட்டு சிரசில் எண்ணெயிட்டபோது, வாய்வானது நரம்பில் ஸ்தம்பித்து நடைகொடாமல் கெடுத்து நெஞ்சியிற்றுக்கி உள்ளுக்குள்ளே யாரோ அழைத்ததுபோல் சப்தஉணர்ச்சியை யுண்டாக்கி, அதனால் அடிக்கடி எழுந்திருக்கச் செய்யும். இன்னும் இந்த ரோகத்திற்குக் கண்ணீர் ததும்பல் வாய்நீர் கசந்தூறல், பற்கிட்டல், பிதற்றிப் பிணம்போலாதல், நெஞ்சத்திற்கோழை மிகுதல் ஆகிய இக்குணங்களையும் உடையதாகும்.

### 35. வசனுவாதம்

இது, தேகமெல்லாம் வலித்து கிலேசமுண்டாக்கி தேகத்தில் கொதிப்புண்டாக்கும். இன்னும் நாக்கு ஸ்தம்பித்தல், பற்கடித்தல், சிரசிலும் முகத்திலும் பாதத்திலும் துடித்தல், பிரமை முதலியவற்றை உண்டாக்கிச் சோர்வடைந்து விழச்செய்யும்.

### 36. மகாவாதம்

இது, வாய்வானது வயிற்றைப்பற்றி பொருமலோடு வலித்து கீழ்முதுகில் தங்கிவிடும்; அப்போது அன்ன மிறங்காமை, மலசலம்

பல முறையாகப்போதல், தேகமழலைகொள்ளல், மேனி மஞ்சள்நிற மாதல் ஆகிய இக்குணங்களைப் பிறப்பிக்கும்.

### 37. மிருத்துவாதம்

இது, வாய்வானது தேகத்தில் வியாபித்து, வலியுண்டாக்கி, தேகம் வெளுக்கும். திடீரென்று கைகால்கள் சோர்வடையும். மனதில் பயமுண்டாகும்.

### 38 உதரவாதம்

இது, வயிறு பொருமி, நொந்து, மிடறுகனத்து, விக்கலுடன் இளைப்பை யுண்டாக்கும். மலம் வருவதைப்போல் காட்டி நீர் இறங்கும்.

### 39. மூத்திரஉதிரவாதம்

இது, மார்புவீக்கம், தேகமழலை, நித்திரைபங்கம், வயிற்றில் வேதனை, விக்கல், இருமல், அடிவயிறு கனத்து நோதல் ஆகிய இக்குணங்களை யுடையதாகும்.

### 40. சுக்கிலவாதம்

இது, உடல் இறுகி வற்றும். மலம் மூத்திரம் வெளியாகாமல் சிக்குண்டு நா மூக்கு இவைகளில் உதிரம் காணுவதுடன் சிலேத்துமம் மேலிட்டு நெஞ்சில் கோழைகட்டும்.

### 41. சவ்விரங்கவாதம்

இது, முதலில் தேகம்வெளுத்து பின் கறுக்கும். அருசி, வாந்தி, தாகம், அன்னதுவேஷம், வயிற்றுப்பிசம், சலிப்பு, உறக்கம் முதலியவற்றை அறிகுறியாய்ப் பெற்றிருக்கும்.

### 42. ஊர்த்துவவாதம்

இது, வாய்வானது மேலே நோக்குதலால் வயிறுவிம்மி வாயில் நுரைதள்ளி சுவாசம் மேல்நோக்கும். அப்போது வாய் கழுத்து மார்பு நொந்து அழலைகொண்டு துடையும் நையும் வற்றி, பசுமை நிற மடையும்.

### 43. மைஞ்ஞானத்தம்பவாதம்

இது, வாய்வானதுபேசும்படியான குரலுறுப்பைப்பற்றி, நொந்து அதிகமாக வலித்து உபத்திரவப் படுத்துவதுமன்றி, கீழ்நோக்கின் கண்ணைத்திறக்கவொட்டாமல் மூக்கினால்நெடுமூச்சு விடச்செய்யும்.

இரண்டுசெவிகளிலும் நோய் உண்டாக்கும். அப்போது வாயானது திறந்தபடியே இருந்து, நாவறட்சி கொள்ளும்.

### 44. சிரகம்பவாதம்

இது, உதிரமானது நரம்புகளில் புகுந்து சிரசுமுதல் சரீர மெல்லாம் தாக்குதலால் செவிகேளாமை, கையும் காலும் வசக்கேடு, மனக்கலக்கம், நெடுமூச்சு, கொட்டாவி, நித்திரை, தலைநடுக்கம் முதலியவற்றைப் பிறப்பிக்கும்.

### 45. சதஸ்தம்பவாதம்

இது, நடுநாக்கு, நுனிநாக்கு இவைகளில் தேள்கொட்டிய விஷம்போல் நாவுத்தெறிப்படுவதுடன் துடித்தல், வாயதிரல், உருசி யின்மையாகிய இக்குணங்களை அறிவிக்கும்.

### 46. வச்சிரரூபகவாதம்

இது, கழுத்துப்பிடரியில் அதிகநோவு, கண்விழிகள் அசை வின்மை, நெஞ்சியில் ஒருவிதமான சப்தம், தலைவலி, நடுக்கல், குதிக்கால் நரம்புகளில் நோயுடன் திமிர், கொட்டாவி, மலசலச்சுருக் கம், சோம்பல் ஆகியஇக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 47. கண்டகிராகவாதம்

இது, அதிகசீதளத்தினல் குரலைப்பற்றி நொந்து மார்பு, பிடரி முதலான சர்வாங்கங்களிலும் அழற்சிகொள்வதுடன் நாசியின்வழி மூச்சு செல்லாமல் வாயின்வழி மாறும். இத்துடன் முகத்தில், வியர்வை, விலாநோய் முதலியவற்றை உண்டாக்கி, அன்னத்தைப் புசிக்கவொட்டாமல் செய்யும்.

### 48. நகாரிவாதம்

இது, வாய்வானது குரல்வளையத்திலும், விலாப்பக்கங்களிலு முள்ள பெரும் நரம்புகளில் பற்றி நோயுண்டாக்கும். அப்போது வாய்கிட்டல், கொச்சையான வசனம், நடுநாக்கு மரத்தல், உதடு தடித்தல், தேகம் நமைச்சல் முதலான குறிகளை யுண்டாக்கும்.

### 49 பதிதவாதம்

இது, அதிகமாய் பேசும்போது கழுத்திலுள்ள நரம்புகள் இழு க்கும்; அதிகமாய் பேசவிடாது. ஸ்திரிசங்கமத்தில் பிரியப்படாமலே

சப்த தாதுக்களையும் பலவீனப்படுத்தும். அடிக்கடி பசியுண்டாக்கும்.

50 யோனிசூலை

இது, மலதுவாரத்தின் வழியே ஆரம்பித்து பக்கமாய் இறங்கி யோனியைப் பற்றும். அப்போது முள்ளும் கோலுங்கொண்டு குடைவதுபோல் நோயுண்டாகும். ஆசனங்கடுத்து நீர் இறங்கும் நடக்கும் போதும் உறங்கும் போதும் பாதை அதிகப்படும்.

51 கருப்பச்சூலை

இது, வாய்வானது கருப்பாசயத்தைப் பற்றின காலத்தில் புருஷசங்கை ஏற்பட்டால் அப்போது மலச்சிக்கல் விலாப்புறத்து நோய் மனக்கிலேசம் முதலியவற்றை யுண்டாக்கும்.

52 அஷ்டசூலை

இது, வாய்வானது பிரகோபித்து ஆசனத்திற்றங்கி கடுப்புடன் மலச்சிக்கல் உண்டாக்கும். அப்போது இரு தொடை யோனி இவைகளில் உமி நெருப்பில் காற்று வீசுவதுபோல எரிச்சல் கொண்டு சிறு நீரானது துளித்துளியாக வெளியாகும். அத்தருணம் பல்லை நறநறவென்று கடிக்கச் செய்யும்.

53 குடல்வாதம்

இது, வாய்வானது குடலைப்பற்றி வலித்து நாபியின்கீழிறங்கி அடிவயிற்றில் நொந்து, விரை தன்னை வலித்து, வீங்கி, உபத்திரவம் செய்யும். அப்போது நளிர்சுரம், திடுக்கிடல், தலைவலி முதலியவற்றைப் பிறப்பிக்கும்.

54 அசுவவாதம்

இது, வாய்வானது சிறுகுதிரை பாய்ச்சலாக சடல மனைத்தும் குலுங்கும்படியாக மேல் நோக்கி ஏறி, அவ்வாறே கீழ்இறங்கி அண்டத்தை வீங்கச்செய்து, கோசத்தைச் சுருங்கச் செய்யும். அடிவயிற்றிலும் இசிவு காணும்.

55. மேச்சுவாதம்

இது, வாய்வானது ஆண்குறியைப் பற்றிச்சுருக்கி நோகும் நீர் கடுத்து சிவந்து இறங்கும். இதனோடு குளிர், சுரம், மயக்கம், தேகம் அசதி, கொட்டாவி, சோம்பல் முதலிய குறிகளையும் உண்டாகும்.

### 56. மூடவாதம்

இது, வாய்வானது பிடரி நரம்புகளைப்பற்றிப் படிப்படியாய்க் கீழ் இறங்கி, மலாசயத்தைப் பற்றும். அப்போது கௌபீனத்தை கட்டி சுற்றி வரைந்தாற்போல் வீக்கத்தில் வலிதோன்றி உபத்திரவப் படுத்தும்.

### 57. வசவாதம்

இது, வாய்வானது வாதபித்த சிலேத்தும ரத்த நரம்புகளின் துவாரங்களிலும், குடலிலும், தேகத்திலும் வியாபித்து, தேக சிலிர்ப்பு, உடல் கனத்தல், சரும பிருத்தப், அரோசகம் முதலியவற்றை யுண்டாக்கி, உள்ள தேஜஸையும் கெடுத்து வாட்டமுறச் செய்யும்

### 58. பீஜஸ்தம்பவாதம்

இது, இரண்டு பீஜங்கள் வீங்கிப் புண்போல் வலித்து சலாக்கு யேற்றினாற்போல் வலிக்கும். வெண்ணிறமாகச் சிறுநீர் கொஞ்சம் கொஞ்சமாக இறங்கும் ஆண்குறி அடிக்கடி விம்மும்.

### 59. அந்தரவேட்டி

இது, இரண்டு பீஜங்களும் பெருத்து வீங்கி நோய் எடுப்பதுடன் அவ்விடத்திலுள்ள நரம்புகளும் வலிக்கும். குடலில் கள கள வென்று இரைச்சல் காண்பதுடன் வயிற்றை முறுக்கி உபத்திரவம் செய்வதுமன்றி சில சமயம் குளிருடன் சுரம் காயும்.

### 60. சித்துவாத சுரோணிதம்

இது, தேகம் வூதல், நாவழவழப்பு, நெருப்பில் சுட்டாற்போல் தேகமெல்லாம் கொப்பளித்தல், தோலுரிந்து வீங்கல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 61. வாதசுரோணிதம்

இது, தேகம் மெலிவுற்று அசைவுள்ள மூட்டுகளில் வீக்கம் கண்டு நடக்கவொட்டாமல் செய்வதுடன் அன்ன துவேஷம், உறக்கம், வாய் நீரூறல் ஆகிய இவைகளைப் பிறப்பிக்கும்.

### 62. வைகிருதவாதம்

இது, தேகத்தில் வீக்கம்கண்டு இரத்தம் கனத்து எங்கும் பரவி ஸ்பரிசம் கெடும். இன்னும் தேகத்தில் திமிருடன் இருமல் சுரம் காயும். இது சிசிருருதுகாலமாகிய, மாசி பங்குனி மாதத்தில்

வாதம் அதிகரித்துவரும். கிரீஷ்மருது காலமாகிய ஆனி ஆடிமாதத்தில் பித்தம் அதிகரித்து வரும். ஏமந்தருது காலமாகியமார்கழி தை மாதத்தில் சிலேத்துமத்தை அதிகரித்து வருமென்று சிலநூல்களில் கூறப்பட்டுள்ளன.

### 63. உதிரவாத சுரோணிதம்

இது, கணைக்காலும் முழங்காலும் சந்து புறங்களும் வீங்கி வடிவதுடன் விரல்களில் அதிகநோ யுண்டாக்கும். இன்னும் சிந்தை தடுமாறல், சலிப்பு, பித்தவாதத்தா லெழுந்ததேகவழலை, ஆகார வெறுப்பு முதலிய குணங்களைப் பெற்றிருக்கும்.

### 64. பயித்திய வாதசுரோணிதம்

இது, உதிரமானது பொங்கி யுரைந்து தேகமெங்கும் பரவி நோயுண்டாக்கும் அப்போது முழங்கால் முழங்கை சிறுவிரல், கன்னம் நெற்றி, விலாமுதலிய விடங்களில் குடைச்சலுடன் சுரமும் தேக வெளுப்பும் உண்டாக்கும்.

### 65. சிலேத்துமவாத சுரோணிதம்

இது, உடல் குளிர்ச்சியாய் வயிறு வீங்கி வலிக்கும். அப்போது தலைவலி கோழையுடன் சுவாசம், மயக்கம், கனவு, வாய் வறட்சி உருசியின்மை நாடிபடபடப்பு முதலியவைகளை உண்டாக்கும்.

### 66. உதரவாத சுரோணிதம்

இது, சுரத்துடன் நடுக்கல், நாவறட்சி, தலைநோய், தேகவாட்டம், மயக்கம், பேதி, தாகம், அன்னத்தின்மீது இச்சை முதலியவற்றையுண்டாக்கும்.

### 67. குனவவதானகவாதம்.

இது ஸ்திரீகள் கருப்பமுண்டான மூன்றும் மாதத்தில் கருப்பம் கெட்டு இரத்தம் வெளியாகி வயிற்றைச்சுறுக்கி கால்கைகளை இஷ்டம்போல் அசையவிடாமல் தேகம் அழலை கொள்ளும், அப்போது கோபம், மனக்கிலேசம், சலிப்பு முதலியவற்றை உண்டாக்கும்.

### 68. கண்டகவவதானகவாதம்

இது, பிரசவித்தபோது பச்சையுடம்பில் வலியுண்டாகி நாசி புருவம் நாக்கு உள் நாக்கு பல் முதலிய இடங்களில் அதிக நோயை யுண்டாக்கும்.

### 69. சிரகம்பவவதானகம்

இது, வாய்வானது சிரசின் அடிபாகத்தைப்பற்றி நொந்து பின்னர் படிப்படியாக கீழ் இறங்கி இருதொடைகளிலும்பற்றி உபத்திரவம் செய்யும். இன்னும் அக்காலத்தில் அவ்வாயுவானது தேகத்திலெங்கும் பரவி நொந்து வாட்டமுறச் செய்வதுடன் திமிருண்டாக்கும்.

இங்ஙனம் கூறப்பட்டுள்ள அறுபத்தொன்பது வாதரோகங்களையும் ஆராய்ச்சிசெய்யும்போது அதுவாய்வானது பிரகோபித்து ஆமாசயத்தில் பிரவேசித்தபோது நாவறட்சி, வாந்தி, சுவாசம், தொண்டையடைப்பு, ஏப்பம், முதலியவற்றையும், சர்மத்தில் பிரவேசித்தபோது தோல்வெடிப்பையும், இரத்தத்தில் பிரவேசித்தபோது ஸ்பரிசமின்மை, அழற்சி, விரணம், வயிற்றுப் பொருமல், அரோசகம், தேகமெலிவு, மயக்கம் முதலியவற்றையும், மாமிசத்தில் பிரவேசித்தபோது குத்தல், வலி, கிரந்தி, தலைசுற்றல் முதலியவற்றையும், அஸ்தியில் பிரவேசித்தபோது தொடைசந்து, எலும்பு முதலியவற்றில் வலியையும், மஜ்ஜைதாதுவில் பிரவேசித்தபோது நித்திரையின்மை, தேகவலி, அஸ்திமலினம் முதலியவற்றையும், சுக்கிலதாதுவில் பிரவேசித்த போது இந்திரிய நஷ்டத்தையும், சந்துகளில் பிரவேசித்தபோது வீக்கம், அசைவின்மை முதலியவற்றையும் சர்வாங்கங்களிலும் பிரவேசித்தபோது திமிர், தினவு, குத்தல், குடைச்சல், துடிப்பு, இசிவு, சந்திகோணல், நடுக்கம், பரிசமின்மை ஆகிய இக்குணங்கள் ஏற்படுகின்றன.

இவைகளுக்கு சிகிச்சை

* வீரமெழுகு, * தேங்காய்மெழுகு, || பஞ்சசூத செந்தூரம், காலருத்திராங்க எண்ணெய், வீரபற்பம், சர்வாங்கவாத சூரணம், சண்டமாருதச் செந்தூரம், * காளமேக நாராயணச்செந்தூரம், || மேகவாயுக்குளிகை, || அயவீரமாத்திரை, அயவீரச்செந்தூரம், ஆகிய இவைகள் குணந்தரத்தக்கதென்றுணர்க

வாதரோகங்களுக்கெல்லாம் சிகிச்சைசெய்ய உத்தேசித்தப் போது முதலில் முற்கூறப்பட்டுள்ள அவிழ்தங்களில் பேதியாகக் கூடிய ஏதேனும் ஒன்றை தினம் ஒருவேளை 3 நாள் நாலைந்துமுறை நன்றாக விரேசனமாகும்படி கொடுத்துவிட்டுப் பின்னர் பேதியா

காத அவிழ்தங்களிலொன்றை தினம் 2-3 வேளை சமயோசிதமாகக் கொடுத்துவரவேண்டும். அத்தருணம் நோயுள்ள விடங்களில் வாத கேசரித்தயிலம், அண்டத்தயிலம், அற்ககக்ஷீராதித்தயிலம் மாஷ தயிலம், மைனத்தயிலம்,முதலியவற்றிலொன்றை தேய்த்து வருதல் சாலச் சிறந்தது.

இதற்குமேல் வாதரோகத்தால் சிரசிலுண்டாகும் ரோகங்களை யும் அதற்கு சிகிச்சைகளையும் கண்டுணர்க.

குறிப்பு:—அவிழ்தங்களின் செய்பாகத்திற்கடியில்பிரயோகவிப ரங்களைக் கூறியவிடத்தில் இன்னின்ன அவிழ்தம் இன்னின்ன ரோகங்களை தீவரமாக குணமாக்கும் என்று வரைந்திருப்பதினால் பண்டிதர்கள் பகுத்துணர்ந்து சிகிச்சை செய்வாராயின் எவ்விதத் திலும் நற்பெயரடைவதற்குச்சிறிதும் சந்தேகமில்லை.

70. வாதத்தலைவலி

எட்ஏக் (Head-ache) சிபலாலஜியா (Cephalagia)

இது, வாய்வானது முதலில் பிடரியைப்பற்றி பின்னர் சிரசில் நோயுண்டாக்கும். இத்துடன் இரண்டு செவிகள், நாசி, உச்சி, நெற்றி முதலிய விடங்களில் அலகு செருகியதைப்போல் உபத்திர வத்தை யுண்டாக்கும்.

71. பித்தத்தலைவலி

இது, நாசியில் நீர் சொரியும், நாவில் நீரூறும், உண்ணாக்கில் அழலைக்கொண்டு நோவும். இன்னும் செவி, சிரசு, கண், புருவம் முதலிய விடங்களில் நீர் கோர்வையால் கனத்துக் குத்தலோடு துன் புறச் செய்யும்.

72. சிலேத்துமதலைவலி

இது, அதிக சலம் சாப்பிடுவதினாலும், உண்டவுடன் சிறிது நேரம் உலாவாமல் நித்திரை கொள்வதினாலும், சிரசில் நீரேற்ற முண்டாகி பிடரிவலி, சிரபாரம், சுரம், பசியின்மை, தேகவெளுப்பு முதலியவற்றை யுண்டாக்கும்.

73. சன்னிவாதத்தலைவலி

இது, தலைவலித்தல், மனக்கிலேசம், நெஞ்சடைப்பு, பெரும் மூச்சு, செவிகளில் ஆப்பிட்டாற்போல் உபத்திரவம் முதலியவற்றை யுண்டாக்குவதுடன் வாயைப் பேசவொட்டாமற் செய்யும். இன்

னும் தேக முழுவதும் புழுக்கள் ஊர்வதைப்போல் உணர்ச்சியை உண்டாக்கும்.

74. இரத்தபித்தத்தலைவலி

இது உதிரம் மீறி செவி, நாசிவாய் முதலிய விடங்களில் இரத்தம் கொட்டுதலுடன் அங்கங்களில் துடிப்பு, மேல்மூச்சு, தேகம் கறுத்தல், குளிர், தாகம், மயிர்க் கூச்சம், திமிர் முதலியவற்றை விளைவிக்கும்.

75. கிருமித்தலைவலி

இதுவே பீனஸம் (Ozaena)

இது, சிரசிலுள்ள இரத்தம் மாமிசம் முதலியவைகள் கெட்டு கிருமிகளாக ஏற்படும். அப்போது நாசித்தண்டு புருவம், மிடறு, கைகால் முதலிய விடங்களில் குத்தல் வலித்தல், மண்டை வறளல், வாய் நீரூறல், நாசியில் சலம் வடிதல், துர்நாற்றம், நாணற் பூவைப் போன்ற கிருமிகள் தோன்றுதல் ஆகிய இக்குணங்களை யுண்டாக்கும்.

76. சூரியாவர்த்தம்

(Hemicrania or Sun-pain)

இது, வாயுவானது பித்தத்தில் கூடி வலதுபக்கமாவது இடதுபக்கமாவது கண், நாசி, புருவம் முதலிய வங்கங்களினடியிற் பற்றி குத்தலுடன் வலிக்கும். அப்பாரிசத்தின் கண் சிறிதுசுருங்கச்செய்வதுடன் தேகம் பாரிக்கச்செய்யும். இது வெய்யிலேற ஏறப் பிரபலித்து சூரியன் அஸ்தமனமாக நோய் சாந்தப்படும்.

77. சந்திராவர்த்தம்

(Hemicrania or Moon-pain)

இது, வாயுவானது சிலேத்துமத்தில் கூடி தேகமாதி யெங்கும் வலியுண்டாக்கும். அப்போது தும்பல், நாசியடைப்பு, புருவம் நெற்றி முதலிய விடங்களில் புண்போல் நோதல் ஆக இக்குணம் உடைத்தா யிருந்து சூரியோதயமாக நோய் சாந்தப்படும்.

78. ஒற்றைத்தலைவலி (Hemicrania or Megrim)

இது, சிரசின் ஒருபக்கத்திலுள்ள நரம்புகளில் வியாபித்து செவிகளிரண்டையும் பிளந்தாற்போல் நோயுண்டாக்கும். அப்

போது கண்ணீர்ததும்பல், பெரும்மூச்சு, திடுக்கிடல், சிணுக்கிரு மல், பசியின்மை, ரோமசிலிப்பு முதலியவற்றை யுண்டாக்கும்.

சிகிச்சை

வாதத் தலைவலிமுதல் ஒற்றைத்தலைவலி ஈறாக உள்ள சிரரோ கங்களுக்கெல்லாம் நாபிமாத்திரை, * கஸ்தூரிமாத்திரை, * ஜீன் மாத்திரை முதலியவற்றி லொன்றை தினம் இருபோது கொடுத்து வர சிரசிலுண்டான வாத சீதளத்தை நிவர்த்திக்கும். இந்தரோகம் கண்டத்திற்கு மேற்பட்டதாதலால் அவிழ்தங்களை விட ஸ்நானங் களினால் நிவர்த்தி செய்வதே எளிதாகும். ஆகைபால் சமயோசித மாக இஞ்சி மூலைப்பால் தயிலம், நாகராதித் தயிலம் || பூநாகத் தயி லம், அரக்குத் தைலம், அசுவகந்தி பலாலாக்ஷா தயிலம், அரக்கு சந்தனாதி தயிலம், டிக்காமல்லித் தயிலம் முதலியவற்றி லொன்றை ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு தேர்ந்தெடுத்து ஸ்நா னம் செய்விக்க தீவரத்தில் ரோகம் குணமாகும். இன்னும்நோயுள்ள இடங்களில் ஒத்தடம், மேல்பூச்சு, புகை, ஆக்கிராணம், நசியம் முதலியவற்றை உபயோகித்தல் அதிக நன்மையைத் தரும்.

## 79 கர்ணவர்த்தம்

## இயற்வக் (Earache)

இது, பிடரி, காது. முதலிய ஸ்தானங்களில் அதிகவலித்து ஆப்புக் கொண்டடைத் ததைப்போல் குடையும் பிடரி செவி முத லிய விடங்களில் நீரேற்ற முண்டாகி கனத்திருக்கும். இன்னும் உச்சி நெற்றி முதலிய ஸ்தானங்களில் நோய் காண்பதுடன் பசி யின்றி உறக்க முதலியவற்றை யுண்டாக்கும்

## 80 வாதகர்ணசூலை

## (Otorrhoea)

இது, செவிகளில் வலிகண்டு சீழ் காண்பதுடன் சமுத்திரம் போல் செவிகளி லிரைச்சலுண்டாக்கும். அப்போது செவிகேட் காது. ஒழுங்கற்ற வார்த்தைகளைப் பேசச்செய்யும். இன்னும் தனது சக்தியைப் பெரிதும் குறைக்கும்.

## 81 பித்தகர்ணசூலை

இது, செவிகளில் கிரந்தி யுண்டாக்கித் துன்புறச் செய்வது டன் நாற்றமுடைய உதிரம் சீழ் முதலியவற்றை வெளிப்படுத்தும். அப்போது செவிகளிரண்டும் வீங்கி தலை நோயுண்டாகும்

## 82 சிலேத்தும கர்ணசூலை

இது, செவிகளில் குரும்பி சேர்ந்து பெருங்கோலைக் கொண்டு குடைந்தாற்போல நோயுண்டாக்கும். அப்போது செவிகளில்இரைச்சலும் தினவும் உண்டாகும்.

## 83. கிருமி கர்ணசூலை

## (Polypus)

இது, செவிகளில் கம்பு முளையரிசியைப்போல் நிரைந்து துள்ளித் துள்ளி விழும்படி உபத்திரவத்தை செய்யும். புழுக்கள் ஊர்ந்து புண்ணாக்கி உதிரம் சீழ் முதலியவற்றை வெளியாக்கும். அப்போது செவிகளிரண்டும் துடிப்பதுடன் மந்தப்படும்.

### சிகிச்சை

கர்ணாவர்த்தமாதியாக கிருமிகர்ணசூலை ஈறாக உள்ள ரோகங்களுக்கு சிகிச்சை கூறின்

காதில் அதிகக்குரும்பிசேர்ந்து அதனால் உபத்திரம் மேலிட்டிருப்பின் அதை பீச்சாங்குழலினால் வெந்நீர்விட்டுப்பீச்சி சிறிது நேரம் விட்டுக் காது குரும்பியை மெதுவாக செவிதுவாரத்தில் விட்டு விலக்கவேண்டும். காதில் சீழ்கொண்டிருப்பின் சுத்தமான பஞ்சியையாயினும் அல்லது சுத்தமான சீலையையாயினும் ஒரு சுப்பலில் சுற்றிமெதுவாக செவிதுவாரத்தில் விட்டுச் சீழைச்சுத்தப்படுத்திப்பின்னர் காது வலிக்காகக்கூறப்பட்டுள்ள தைலங்களிலேதேனுமொன்றை விட்டுப் பஞ்சு கொண்டு அடைத்து வைக்கவேண்டும். இந்தச் செவிரோகத்தை முன்னிட்டுக்கன்னம்சிரசு முதலிய வங்கங்களில் உபத்திரவ மிருப்பின் தலைவலிக்குக்கூறப்பட்டுள்ள ஒத்தடம் மேல்பூச்சு முதலிய சிகிச்சையைச் செய்வதுடன் சிரரோகத்திற்குக் கூறப்பட்டுள்ள உஷ்ணவீரியமான ஸ்நானங்களினாலும் நிவர்த்திக்க வேண்டும்.

## 84. தந்தவாயு இதுவே தந்தசூலை

## டூத்ஏக் (Tooth ache)

### சிகிச்சை

சுரமிருப்பின் சுரத்தைப் பரிகரிக்கத்தக்க ஏதேனும் உஷ்ண வீரியமுள்ள யாத்திரை செந்தூரம் முதலியவற்றி லொன்றை தினம் இரண்டல்லது மூன்றுவேளை தேனில் அனுபானம் செய்து

கொடுக்கவேண்டும். பல்வலி யிருப்பின் தந்தவாயு சூரணம், பற்பொடி முதலியவற்றால் பற்றேய்த்து வெந்நீர்கொண்டு வாயலம்பிவரின் உடனேகுணமாகும். தாள்முதலிய விடங்களில் நோய் இருப்பின் ஒத்தடம் மேல்பூச்சு முதலியவற்றைப் போடுவதுடன், இன்னும் வாய்கொப்பளிக்கும்படியான கியாழங்களையும் இடையில் உபயோகித்துவரின் சாலச் சிறந்தது.

இந்த ரோகத்தில் வாத சீதளம் மிகுந்து சீதளவஸ்துக்கள் பற்களில் தாக்கின் அவைகள் பிளந்து போவதைப்போல இருப்பின் தந்ததாளன ரோகமென்றும், பற்களில் புளிப்பாவது சீதள வஸ்துவாவது காற்றாவது படும்போது சகிக்கக்கூடாத கூசுதலையும் உபத்திரவத்தையும் உண்டாக்கின் தந்தஹரிஷ ரோகமென்றும், பற்களில் குத்தலும் நோயும் உண்டாக்கி அவைகள் விழுந்து விடுவதைப் போல இருப்பின் தந்தபேத ரோக மென்றும், மிருதுவான வஸ்துக்களைப் புசித்தபோதிலும் பற்கள் அசைவு கொண்டு அதிக உபத்திரவத்தைச்செய்யின் தந்த சலன ரோக மென்றும், ஈறுகள் தேய்ந்து தசையின் ஆதாரவு இல்லாமல் பற்கள் சரியுமாயின் தந்தகராளரோக மென்றும், பற்களில் உபத்திரவத்தை யுண்டாக்கி இடையிலுள்ள சந்துகளி லொன்றில் ஒருசிறுபல் முளைத்து மற்றப் பற்களுக்கெல்லாம் வன்மையையுண்டாக்கினால் அதிதந்த ரோக மேன்றும், பற்களை சரிவரத்துலக்கமுறவிளக்காமையால் அச்சந்துகளில் பாசிப் பற்றி உலர்ந்து மணலைப்போல உதிர ஆரம்பிக்கின் தந்தசருக்கார ரோக மென்றும், பற்களின் மேற்பாகம் தேய்ந்து பொடிபொடியாக வெடிப்புற்றால் தந்தகபாலிகா ரோகமென்றும், பற்களில் சில நீலநிறமாக மாறுதலடையின் தந்தசியாவ ரோகமென்றும், பல்லீறுகள் வீங்கிரணமுண்டாகி நோவு அதிகரித்துக் கிருமிகள் உண்டாகி உபத்திரவமுண்டாகின் தந்தபிரஹூணரோக மென்றும் பத்துவிதமாக வடநூலாசிரியர் கூறியிருக்கின்றனர். இவைகட்கெல்லாம் முற்கூறப்பட்ட பரிகாரங்களினாலேயே குணமாகும்.

---

# பித்தரோக இலம்பகம்.

## (BILIOUS DISEASE)

### பித்தம் வர்த்திக்குங்காலம்

பித்தமானது சரீரத்தில் ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, பங்குனி, சித்திரை ஆகிய இம்மாதங்களில் உபரியாகும்.

### பித்தரோக பூர்வரூபம்

அரோசகம், அன்ன துவேஷம், வாய்கசப்பு, புளிப்பான வாந்தி, குளிர், சுரம், எரிச்சல், சித்தப்பிரமை, நாவுலரல், மயக்கம், மூர்ச்சை, தலைசுற்றல், கண்சிவத்தல்,நடுக்கல், கொட்டாவி, விக்கல், பல்லைக்கடித்தல், கூவுதல், சோம்பல் என்னும் இக்குணங்களுடன் கண் நகம் மலம் மூத்திரம் ஆகிய இவைகள் மஞ்சள்வர்ணமாகும் இன்னும் அதிக உஷ்ணத்தினால் சீதளமும், கோழையும், வியர்வையும் உண்டாகி சிலேத்துமம் மேலிடும். அச்சிலேத்துமத்தால் இனிப்பானவாந்தி, வாய் நாவு உமிழ்நீர் முதலியவைகளில் கசப்பு,புளிப்பு, இனிப்பு ஆகிய சுவைகளுண்டாக்கும். இன்னும் தீக்ஷணாக்கினியாயின் அவ்வக்கினியி லிருந்து சலம்பிறப்பதால் மந்தாக்கினி யாகும் அப்போது அஜீரணம், மலபந்தம், வயிறு பொருமல், பேதி, இருமல், இரைப்பு, கோபம், துக்கம், பயம், கிலேசம் ஆகியஇக்குணங்களெல்லாம் ஏற்படும். இவைகள் எல்லாம் சகல பித்தரோகத்திற்கும் பொதுவான குறிகளாம்.

### 1. ஆவுருபித்தம்

இது, தேகம் காய்தல், தாக மெடுத்தல், நெஞ்சில் கோழைமிகுதல், இளைப்பு, ஆயாசம், நாப்புளிப்பு, மலசலம் மஞ்சள் நிறமாதல், இருந்திருந்து கூவுதல், அடிக்கடி படுக்கையை விட்டு எழுந்திருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 2. ஆம்பலபித்தம்

இது, தேகம் கறுத்தல், ஆவேசம் போன்ற தலையசைப்பு, உண்ட உணவு செரிக்காமல் மறுதினம் வாந்தியாதல், நாவுபுளித்தலுடன் சிலசமயம் கசத்தல், விக்கல், வயிற்று பொருமல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 3. உன்மத்தபித்தம்

இது, தேகத்தில் கடுப்பு, பசிதீபனம், தலைபாரம், ஓரிடத்திலேயே இருத்தல், யாரிடத்திலும் ஊமையைப் போல் பேசாதிருத்

தல், நித்திரையின்மை, வாய்நீரூறல், மனக்கலக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 4. தமந்தபித்தம்

இது, கள்ளுண்டவனைப்போல் புத்தி கெட்டிருத்தல், நாவடி நரம்பு மஞ்சள் வர்ணமாகத் தோன்றல், ரோகியை அழைக்கவழைக்க பிரேதம்போ லிருத்தல், தாகம், நாவறட்சி, மிகுபோஜனம் விரும்பல், மௌனம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 5. வாதபித்தம்

இது, கண் மங்கலாதல், அதிக கூக்குரல், கண்விழி சுழன்று நீர்ததும்பல்,கிலேசம், வியர்வை, மயக்கம், தியக்கம், வாந்தி, அன்ன. துவேஷம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 6. வன்னிபித்தம்

இது, வயிற்றுளைவு, கபாலத்தில் கொதிப்பு, செந்நிறமான சிறுநீர், தேகம் கறுத்து படிப்படியாக வெளுத்தல், மயக்கம், தியக்கம், ஆகாரம் செல்லாமை, நாவழவழப்பு, நாப்புளிப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 7. சிலேத்தும பித்தம்

இது, தேகம் முதலில் வெளுத்து பின்கறுப்பாதல், அடிக்கடி கோபித்தல், மயக்கம், புத்தி தடுமாறல், இருமல், கண்நிறம் பச்சை வர்ணமாதல், பசிதீபனம், தும்மல், தலைபாரம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 8. சுரோணிதபித்தம்

இது, தேகத்தில் உதிரம் பொங்கி சுண்டி தேகமெல்லாம் குடைதல்,தேகத்தில் முள்தைத்தாற்போ லிருத்தல், தாகம், தலைவலி, வாந்தி, கோழைக்கட்டு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 9. விகாரபித்தம்

இது, நித்திரையின்மை, வாய்கசப்பு, பலபேச்சு, கண்சிவத்தல், மனக்கலக்கம், தேகக்கறுப்பு, தேகம் வெளுத்துக் கறுத்தல், வாந்தி, மயக்கம், வாய்நீரூறல், அன்னதுவேஷம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 10. விரணபித்தம்

இது, தேகத்தில் திமிர், தினவு, விரணம், நாவு கசத்தல், நரம்பிற் றுடிப்பு, அங்கஞ் சிலுத்தல், நித்திரையினின்று திடுக்கிட்டு எழுந்திருத்தல், வாய்நீரூறல்என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 11. உரத்தபித்தம்

இது, மூர்க்கமான கோபம், அடிக்கடி சண்டைபோடல், இரைச்சலோடு கூவுதல், நித்திரையின்மை, கண்சிவத்தல், பேதி, தேகம் ஊதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 12. இரத்தபித்தம்

இது, அதிகமான இருமல், அவ்விருமலில் இரத்தம் காணல், சரீரம் வற்றல், அடிவயிறு சுருங்கல், நாற்றமுறு முமிழ்நீர், இடுப்பில் குடைச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 13. காசபித்தம்

இது, இருமல், விக்கல், வாந்தி, தேகவலி, தேக அழலை, குரல் கம்மல், வாய்நீரூறல், நாவினிலினிப்பு, கிலேசம், மார்புகனத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 14. சுவாசபித்தம்

இது, மேல்மூச்சு, வயிற்றுப்பசம், தேகவலி, வாய்நீரூறல்,மயக்கம், பார்வைமந்தம், மார்புவலி, இருமல், பசியின்மை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 15. செம்பித்தம்

இது, செந்நிறமான வாந்தி, மலம் இறுகி சிவந்து காணல், மயக்கம், வியர்வை, உதிரத்தையொத்த சிறுநீர், தாகம், தலைச்சுற்றல், அடிக்கடி திடுக்கிடல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 16. கரும்பித்தம்

இது, சிரசு, உடல்நடுக்கம், தலைவலி, உறக்கம், கடைக்கண் சிவத்தல், தேகம் கனத்து வற்றல், உருசியின்மை பசியின்மை, கருமைநிறமான வாந்தி என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 17. கரப்பான்பித்தம்

இது, தேகத்தில் சொறி, தேகத்தில் கொப்புளங்கள், வயிற்றுளைவு, வயிற்றில் குமரல், காலோய்ச்சல், இடுப்புவலி, திமிர் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 18. அசீரணபித்தம்

இது, பசியின்மை, தேகக்கடுப்பு, மலமிறுகல், தலைவலி, கண்ணீர் சொரிதல், வயிற்றிலிரைச்சல், அடிவயிறு கனத்தல், கைகாலோய்ச்சல், புளித்தேப்பம், வாய் நீரூறல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 19 உருசிபித்தம்

இது, மனஞ்சகிங்காமல் புரட்டி புரட்டி வாந்தியாதல், அருசி, மயக்கம், நாவடி கனத்தல், நாவி லுணர்ச்சியின்மை, எரிச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 20. எரிபித்தம்

இது, அடிதொடை, உள்ளங்கால்கைகள், கண்கள்முதலான ஸ்தானங்களில் எரிச்சல், செவி,நாசி வறண்டுபோதல்,முதுகு முழங்கால்களாகிய விடங்களில் வலி, காற்றின்மேல் இச்சை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 21. அழலைப்பித்தம்

இது, இளமையில் நரை, தேகம்வளுப்பு, கடைக்கண் சிவப்பு, கண்டபடி ஞானம்பேசல், ஏமாற்றல், பரிகாசஞ்செய்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 22. துடிப்பித்தம்

இது, அங்கங்களில் துடிப்பு, வாய் தேகம் பச்சைநிறமாதல், உருசியோடு அன்னம் வேண்டல்,அலைந்து திரிதல், மாதரிச்சை, சண்டைக் கிழுத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 23. விஷப்பித்தம்

இது, சோர்ந்து விழுந்திருத்தல், ஒருவர்மீது கொடுமையைத் தூற்றல், உள்ளங்கால்முதல் சிரசுவரையில் விஷம் ஏறுவதுபோல் ஏறும், தேகம்முழுவதும் வலி, அன்ன துவேஷம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 24 அதிசாரப்பித்தம்

இது, வயிற்றிலிரைச்சல், பேதி, வயிற்றுப்பசம், விலாப்பக்கங்களில் வலி, ஈரலில் நடுக்கம், தாகம், மயக்கம், அரோசிகம், சலிப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 25. மூலபித்தம்

இது, வயிறு இரைந்து பேதியாதல், சலிப்பு, கோபம், தடுமாறல், ஆசனத்தில் முளை, அடித்தொடை முழங்கால் நோவு, உடல் வெளுத்தல், தூக்கம், சோம்பல், கண்கரித்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 26. உதிர்பித்தம்

இது, அம்மை வார்த்ததுபோல் தேகமெல்லாம் தினவு, புண்கள், தேகம் மஞ்சள்வர்ணமாதல், மலசல சுருக்கம், நாடித்துவளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 27. கண்டபித்தம்

இது, குரல்வளையம் கனத்தல், வாய்கசப்பு, வாந்தி, நாவழவழப்புடன்வறட்சி, சமுத்திரத்தின் ஓசைப்போல் இருசெவிகளினுமுணர்ச்சி, கூந்தல் செந்நிறமாதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 28. ஓடுபித்தம்

இது, ஓடல், உதாசனித்தல், பல்லைக்கடித்தல், நெருப்பின் நிறத்தைப்போன்ற கண்சிவப்பு, கூக்குரலிடல், கொக்கரித்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 29. மூடுபித்தம்

இது, பொன் ஆபரணங்களை பூமியில் புதைத்தல், யாவரையும் தூஷித்துப் பேசல், மொணமொணப்பு, கைகால்களினால் வீண்வேலை செய்தல், அன்னதுவேஷம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 30. நடுக்குபித்தம்

இது, சிரசு, நெற்றி, பிடரி, முதுகந்தண்டு, கண்டம், தாடை ஆகிய இவ்விடங்களில் நடுக்கம், கனத்தல், எரிச்சலுடன் கசப்பான வாந்தி, பொடியிருமல், நித்திரையின்மை, வாய்நீர்வடிதல், நாவிற்றடிப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 31. கபாலபித்தம்

இது, சிரசு நடுக்கம், குளிரோடு தேகம் கடுப்பு, அம்புதைத்தாற்போல் சிரசில் வேதனை, தேகம் மஞ்சள் நிறமாதல், முகவீக்கம், நாசித்தண்டு நோய், மூர்ச்சை, படுத்து அடிக்கடி எழுந்திருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 32. சத்திபித்தம்

இது, தேகத்தில் திமிர், ஈரல்வலி, வாந்தி, தலைநடுக்கம், மயக்கம், தேகத்தில் காங்கை, அரோசிகம், ஆண்மைகுன்றல், தாகமின்மை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 33. தாகபித்தம்

இது, அடிவயிறு துடித்தல், சர்வாங்கத்திலும் அனல்வீசல், அளவுகடந்த தாகம், சீதள வஸ்துக்களின்மேல் இஷ்டம், கண்டத்தில் வியர்வை, பிடரி, அடிநா இவைகளைச் சார்ந்த நரம்புகளின் பிருத்தம், புளிப்பான பண்டத்தின்மேல் இச்சை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 34. விக்கல்பித்தம்

இது, தாகத்துடன் வாந்தி, விக்கல், தேகம் குளிர்ச்சிபெறல் தலைபுரட்டல், பால்போன்ற நுரை வாயிற்றள்ளுதல், தேகத்தளர்ச்சி, கைகாலோய்ச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 35. சயபித்தம்

இது, இருமல், தேகமழலை, தாகம், தேகம் வெளுத்தல், தேகம் ஊதல், கண் வெளுப்பாதல், நெஞ்சிற் கோழை, மார்பு எரிச்சல், அதிகநித்திரை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 36. திமிர்பித்தம்

இது, மயக்கம், வயிற்றில் முள்தைத்தாற்போ லிருத்தல், காலையில் வாந்தி, நினைவோடு நித்திரை, அங்கங்களசதி; தேகமெங்கும் திமிர் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 37. வலிபித்தம்

இது, அடிவயிற்றை இழுத்து நோதல், நாவறட்சி, சிரபாரம், கீல்களில் நோய், ஈரற்குலையில்பாதை, பச்சைநிறமான மலம், வயிற்றிலெரிச்சல், மாரடைப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 38. சீதபித்தம்

இது, தேகத்தில் வியர்வை கண்டுசலம்வடியும், மயக்கம், உடல் கனத்தல், பிடரிஇசிவு, வயிற்றுப்பசம், வாய்நீர் உப்புனாத்தல், செந்நிறமான சிறுநீர் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 39. கிருமிபித்தம்

இது, அடிவயிற்றில் திமிர், தேகத்தில் தினவோடு கடுப்பு, மல சலம் வறட்சி, கால்கைகள் வாழைத்தண்டுபோல் சீதளித்தல், மலத்தில் கிருமிகளோடு துற்நாற்றம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 40. அசாத்தியபித்தம்

இது, லாகிரிவஸ்துக்களை உண்டவன்போல் தன்னை மறந்திருத்தல், அதிக தாகம், வாதாடல், பலபேச்சு, கண்சிவத்தல், நாவறட்சி என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 41. மார்க்கபித்தம்

இது, சகல நூல்களையும் கற்றதுபோல் பேசல், உட்கார்ந்து ஓடல், ஆடையைக்கிழித்துப்போடல், வாயில் வந்ததுபோல் புலம்பல், சிரசு பிடரிமுதலிய விடங்களில் இசிவு, தேகம்வாடல், பிறரைப்பழித்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 42 மருந்தீடுபித்தம்

இது, மௌனம், நெஞ்சுலர்தல், தேகபசதி, அந்தமில்லாமல் உரக்கம், திடுக்கிடல், புத்திகலங்கல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

இந்தபித்தரோகத்தை ஆங்கிலேயமருத்துவசிந்தாந்தப்படிபித்தமிகுதியால் நாவிலிருக்கின்ற நரம்புகளின் சுபாவம் கெட்டு உண்டாகின்ற அரோசகத்தை நாஸியா (Nausia) என்றும், இரத்தத்தில் பித்தம் அதிகரித்து சர்மத்தில் இருக்கின்ற இழைகள் சுருக்கமடைந்து நீர் சுரந்து நமைச்சல், குத்தல், எரிச்சல் முதலியவைகள் உண்டாகி தழும்புகள் ஏற்படின் யுர்டிகெரியா (Urticaria) அல்லது நெட்டில் ராஸ் (Nettlerash) என்றும், தனக்கெதிரில் இருக்கின்ற பொருள்கள் அசைவது போலாயினும் தன்தேகம் சுழல்வதைப் போலாயினும் தோற்றி இரண்டொரு விநாடி நிலைதப்பி எதையாவது பிடித்துத் தப்பிக்கொள்ளும் மயக்கம் கிறுகிறுப்பைகிட்டினஸ்-வர்டிகோ (Giddiness-vertigo) என்றும், பித்தமானது மூளையை அனுசரித்து ஒருவர் நடந்துகொள்ள வேண்டியகிரமம் தப்பி நடக்கும்படியான பித்தவெறியை மேட்நஸ் (Madness) என்றும், இல்லாத ஒருபொருளை இருப்பதாகச் சிந்தித்துக் கவலைக்கொண்டு

பயப்படல், நடுங்கல், ஆடல், பாடல், அழுதல், கூரலிட்டுக்கூவல் முதலியபித்தோன்மாத ரோகத்தை ஹிஸ்டிரிக்ஸ் (Histerics) ரோகமென்று பலவாறு கூறுகின்றனர்.

சிகிச்சை

பித்தம் அதிகரித்து இரத்தத்தாதுவையும் மச்சைதாதுவையும்பற்றி உண்டாகின்ற தேகஎரிச்சல், தேகவறட்சி, தேககாங்கை, வாந்தி, கண்புகைச்சல், கிறுகிறுப்பு, மயக்கம், முதலியவைகளுக்கு வில்வாதி லேகியம், மஹாவில்லாதி லேகியம், ஆவாரைச்சூரணம், அதிமதுரச்சூரணம், படிகாரச்செந்தூரம், புளியாரைக் கிருதம், சீரகச்சூரணம்முதலிய அவிழ்தப் பிரயோகங்களினாலும், * ஜீவரக்ஷாம்ருததைலம், மஹாசந்தனாதிதைலம், இலகுசந்தனாதிதைலம், பிருங்காமலகத்தைலம், கீழ்வாய்நெல்லித்தைலம் முதலியவற்றின் ஸ்நானங்களினாலும் நிவர்த்தி செய்தல்வேண்டும்.

இந்த ரோகத்தில் உஷ்ணமிகுதியால் சீதளமும்கோழையையும் மேலிட்டிருப்பின், மால்தேவிச் செந்தூரம், பச்சைகற்பூரச்சூரணம் முதலியவற்றால் நிவர்த்திக்கவேண்டும்.

பித்தமிகுதியால் மூளையின் சக்தியைவிகல்பப்படுத்தியிருப்பின் சீன அண்டபற்பம், திரிவண்டபற்பம், இலவண அண்டம் முதலிய அவிழ்தங்களினாலும் கோமூத்திரத் தைலம், சம்பீர தைலம் முதலிய ஸ்நானங்களினாலும் நிவர்த்திக்கவேண்டும்.

---

## சிலேத்துமரோக இலம்பகம்.
## (PHLEGMATIC DISEASE)

### சிலேத்துமம் வர்த்திக்குங்காலம்

சிலேத்துமமானது சரீரத்தில் மாசி பங்குனி என்னும் மாதங்களில் உற்பத்தியாகி வைகாசி மாதத்தில் பூரணவலுவை யடைந்து ஆடி ஆவணி புரட்டாசி மாதங்களில் உபரியாகும்.

### சிலேத்துமரோக பூர்வரூபம்

தேகங்கனத்து நறுக்கித் துவைத்ததுபோல் வலியுண்டாகும். தேகத்திலும் முகத்திலும் மினுமினுப்புடன் குடைச்சல், இருமல், இரைப்பு, ஆலசியம், நடுக்கல், சிரோபாரம், நெஞ்சியிற்கோழைக் கட்டு, குளிர்ச்சி, வியர்வை, கீல்களெல்லாம் கட்டுவிட்டதைப்போ

லிருத்தல், விக்கல், சுரம், குளிர், மந்தாக்கினி, வாயில் வழுவழுப்புடன் கோழை உண்டாதல், கண்களில் சலக்கோவை, நாசியில் நீர் வடிதல், நாசியடைப்பு, தும்மல், நாற்றம், வாந்தி என்னும் இக்குணங்களை சிலேத்துமரோகமானது தனக்குப் பழைபரூபமாய்ப் பெற்றிருக்கின்றது. இக்குணங்கள் சகல சிலேத்தும ரோகத்திற்கும் பொதுவாக இருக்கும்.

### 1. இருமல்சிலேத்துமம்

இது, இருமலில் இனிப்புச்சுவையான சளிவிழுதல், முகசிலிர்ப்பு, நாசியில் நீர்வடிதல், தேகம் வெளுத்தல், மலத்தில் சீதம் கலந்திருத்தல், சிறுநீர் சிவந்து கொஞ்சங்கொஞ்சமாகப்போதல், தேகத்தில் ஒருவிதமான அழலைஎன்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 2. காசசிலேத்துமம்

இது, தேகம் சீதளமாதல், தேகம் பாரிப்புடன் கனத்தல், நாடி மெலிவுற்று நடப்பதில் சிலேத்துமநாடி விரைந்துசெல்லல், வாய் வறளல், அதிக உஷ்ணம், நாசித்தண்டிற் கனத்தல், தினவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 3. சுவாசசிலேத்துமம்

இது, நெஞ்சியிற் கபங்கட்டல், இருமல், மூக்கடைப்பு, குறட்டைவிடுதல், குளிர், சுரம், மயக்கம், நெஞ்சடைப்பு, வாயும் நாசியும் வறளல், அதிக தாகம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 4. தீபனசிலேத்துமம்

இது, அதிக தீபனம், சர்வாங்கத்திலும் எரிச்சல், நோவு, அழலை, அழுகை, நெஞ்சடைப்பு, கைகால்களில் சீதளித்தல், தேகம் பாரித்தல், உண்ணாக்கில் பசபசப்பாகிய தினவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 5. மந்தச்சிலேத்துமம்

இது, வயிற்றில்மந்தம், மலசலங்கட்டுப்படல், வாந்தி, வியர்வை, ஒக்காளம், மேல்சுவாசம், தொண்டைக்குள் காறல், இருமல், வாய் கசத்தல், துவர்த்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 6. வாதசிலேத்துமம்

இது, வயிற்றுப்பல், கடுகடுத்து மலசலம் இறங்குதல், அழுத்தினால் சர்வாங்கத்திலும் பள்ளம் வீழ்தல், நோவு, உதடும் பல்லும்

கறுத்தல், தேகமெல்லாம் நறுக்கித் துவைத்ததுபோல் வலி, மேக நீரையொத்த நீரிறங்கல், வெள்ளை காணுதல், பற்களில் பொறுக்கக்கூடாத குடைச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 7. பித்தசிலேத்துமம்

இது, மயக்கம் அன்னதுவேஷம், வாய்நீரூறல், கண்டத்தில் கபம் கட்டுதல், இருமல், மேல்மூச்சு, தேகம் மஞ்சள் நிறமாதல்என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 8. தோந்தச்சிலேத்துமம்

இது, சர்வாங்கத்திலும் அழலை, விக்கல், இருமல், சுவாசம், அதிக சுரம், அசதி, எரிச்சல், தாகம், தலைவலி, மனக்கிலேசம், மார்பு நோவு, குளிர், மயிர்க்கூச்சம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 9. சன்னிசிலேத்துமம்

இது, நாக்குக் கறுத்தலுடன் வறளல், சுரம், எரிச்சல், சர்வாங்கத்திலும் வலி, அசதி, மறதி, கன்னம் காது புருவம் நாசி சிரசு உச்சி இவைகளிற் படபடப்பான துடிப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 10. சுரசிலேத்துமம்

இது, சுரம், தேகம்பாரித்து வலி, அடிக்கடி வியர்வை காணல், அன்னமுண்டவுடன் வாந்தி, வயிற்றுளைச்சல், வயிற்றுப்பசம் மேல், மூச்சு, இருமல், நாவறளல், தாகம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 11. அதிசாரசிலேத்துமம்

இது, வயிற்றில் குத்தல், இரைச்சல், இரண்டுவிலாவிலும் சூலை, வயிறு விம்மல், அதிசாரம்போன்ற சிவந்தபேதி, மார்பிலும் நெஞ்சியிலும் வலி, வாய்வறளல், இருமல், சுவாசம், தாகம், எரிச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 12. சலசிலேத்துமம்

இது, அளவுகடந்த தாகம், சிக்கலுடன் தடிப்பாய் அடிக்கடி சிறுநீரிறங்கல், அழுதல், குறற்கம்மல், கோழையாகிய சிலேத்துமம் விழுதல், பற்களசைதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 13. அக்கினிசிலேத்துமம்

இது, இருமலில் கோழை விழுதல், சர்வாங்கத்திலும் எரிச்சல் அல்லது கால்கைகண் மூக்கு இவ்விடங்களிலாவது எரிச்சல் கை

கால்களில் சீதளம், அதிக தீபனம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 14. பூதசிலேத்துமம்

இது, கண்களை உருட்டிப்பார்த்தல், ஊமையைப்போ லிருந்து திடீரென்று உரத்துப்பேசல், குறட்டைவிடல், நெடுமூச்சு, கொடி கொடியாக சளிவிழுதல், இருமல், வியர்வை, நறநறெனப் பல்லைக் கடித்தல், சந்தோஷத்துடன் பேசிக்கொண்டே கோபம்பிறத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 15. முசல் சிலேத்துமம்

இது, சர்வாங்கத்திலும்வலி, சரீரம் உணர்ச்சியற்று தளருதல், கண் சிவத்தல், கண்ணீர் வடிதல், சருமமுழுவதும் கன்றுதலுடன் கருகல், உணர்வின்றி மலசலம் நழுகல், மேல்சுவாசம், இருமல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 16. வெறிச் சிலேத்துமம்

இது, மீசையை முறுக்குதல், கோபித்தல், எழுந்திருந்து ஓடல், பல்லை இளித்துக்காட்டல், பாடல், ஆடல் கண்சிவத்தல், தேகங்கறுத்தல், உதடுவெறளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 17. விகார சிலேத்துமம்

இது, விகாரப்பார்வை, மாதர்களிடத்தில் இச்சை, தேகம் இளைத்தல், சங்கீதம்பாடுதல், அதிகமோகம், துக்கம், அன்னதுவேஷம் மயக்கம், மாறுபாடானவார்த்தை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 18. சுரோணித சிலேத்துமம்

இது, முழங்காலில் குடைச்சல், முதுகு விலாப்பக்கங்களிலுளைச்சல், முழங்கால் முழங்கை கீல்களில் வீக்கமுடன் குடைச்சல், நெஞ்சிற் கோழைக்கட்டு, தாகம், இருமல், மேல்மூச்சு, நாவறட்சியுடன் இனித்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 19. விரண சிலேத்துமம்

இது, நெஞ்சில் விரணம், சீழ்கலந்த சளிவிழுதல், கழுத்து பிடரி கன்னம் இவ்விடங்களில் வீக்கம், சுரம், குளிர், எரிச்சல், இருமல், கூச்சல், கண்டத்தில் புண்போல் நோதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

20. துர்க்கந்த சிலேத்துமம்

இது, இருமினல் சீழும் இரத்தமும் கலந்து விழுதல், அதில் கவிச்சுநாற்றம், அன்னமும் அவிழ்தமும் செல்லாமை, அடிவயிறு கால் கை இவைகளில் வீக்கம், தாகம், தேகமிளைத்தல்,காங்கை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

21. நித்தியசிலேத்துமம்

இது, வெள்ளோக்காளம், சுரம், இருமல், தேகம் சுட்கித்தல், எரிச்சல், கிறுகிறுத்துக் கீழ்விழுதல், குறற்கம்மி பேசவிடாமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

இங்குக் கூறப்பட்டுள்ள கபரோகங்களை யெல்லாம் ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி பிராங்கிடிஸ் (Bronchitis) என்று கூறுவர். இது மூலத்தில் அக்கினி மீறி கபாலத்தைப்பற்றி இரத்த தாதுவைக் கெடுத்து நீராக்கி நுரை ஈரலையும் அதனைச்சார்ந்தசுவாசக் கிளைகளிலும் உள்ள சளியூருஞ் சவ்வுகளிலும் வியாபித்து இருமலுடன் சளி வெளிப்படும். இத்தகைய ரோகத்தை அக்கியூட் பிராங்கிடிஸ் (Acute Bronchitis) என்றும், கிரானிக் பிராங்கிடிஸ் (Chronic Bronchitis) என்றும் கூறுவர்.

இவைகளில் அக்கியூட் பிராங்கிடிஸ் என்பது மிகக்கொடியது. இது கண்டவுடன் சுரம், மார்பில் பிடிப்பு,குறுகுறுவென்ற சப்தம், மேல்சுவாசம், ஓயாத இருமல், ஆரம்பத்தில் நார்போல கபமிருந்து சீழ்போல மாறுதலடைதல், ஆயாசம், தீவரநாடி, அழுக்குபடிந்த நா, தலைவலி ஆகிய இக்குணங்களோடு கண்டு முடிவில் அறட்டல், புறட்டல், இரத்தநிறமான சிறுநீர், சிறுநீர் சுருக்கம், பாதம் கால் இவைகளில் வீக்கம், பிதற்றல், உறக்கம் விகாரம் முதலியவற்றை யுண்டாக்கி அசாத்தியமாக முடியும்.

கிரானிக் பிராங்கிடிஸ் என்பது சுரமில்லாமல் விபரீதகஷ்டங்களின்றி நாட்பட்டு இருமலுடன் கபம் வெளிப்பட்டிருக்கும் இதற்குச்சரிவர சிகிச்சை செய்யாவிடின் சிலசந்தர்ப்பம் சுவாசகாசமாகவேனும் க்ஷயமாகவேனும் மாறுதல் அடையும்.

எங்ஙனமிருப்பினும் சுவாசக்கிளைகளிலுள்ள கபத்தை நீராக்கி வெளிப்படுத்தவும் மீண்டும் அச்சீதளம் உபரியாகாமல் நுரைஈரலை பாதுகாப்பதற்கு வேண்டிய சிகிச்சை செய்யவேண்டியது பண்டிதன் கடமையாதலால் அடியில் கூறப்பட்டுள்ள அவிழ்தங்களைக்

கொண்டு நிவர்த்திசெய்தல்வேண்டும். தூதுளைக்கிருதம்,கபாங்குசச் சூரணம், ஆடாதோடைக் கிருதம், கண்டங்கத்திரிக் கிருதம், மால் தேவிச் செந்தூரம், காசகுலாந்தகச் செந்தூரம், படிககற் செந் தூரம் முதலியவற்றை உபயோகித்துவர நிவர்த்தியாகும்.

---

## பிரமியரோக இலம்பகம்
## (GONORRHOEA-CLAP)

### பிரமியரோக பூர்வரூபம்

கீழ்வயிற்றுப்பசம், நாபியின் நாலுபக்கங்களிலும் நோவு, மூத் திரம் பலவர்ணமாகப் போதல், அடுத்தடுத்து வருத்தத்துடன் நீரி றங்கல், ஆண்குறி விம்மல், விருவிருப்பு, சிறுநீர் கலங்கல், மூத்திரம் சிதறிச்சிதறி விழுதல், கிரிச்சரம் ஆகிய இக்குணங்களை எல்லாம் பிரமியரோகத்திற்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கும்.

### 1. வாதபிரமியம்

இது, மூத்திரமானது கோசலத்தைப்போற் றோன்றல், ஆண் குறித்தண்டினடியில் வலித்தல், கட்டியாக சீழ்விழுதல், பீஜங்கள் கனத்து வலித்தல், அடிவயிறு பக்கங்களில் குத்தல், வயிற்றில் இசிவு, ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 2. பித்தபிரமியம்

இது, சரீரம்வற்றல், தியக்கம், கீல்களில்வலி, தேகம் கறுத்தல், எரிச்சல், ஆசனம் ஆண்குறி யிவைகளில் கடுப்பு, சலத்துவாரத்தில் மஞ்சள் நிறமான சீழ் கசிவு, கைகாலோய்ச்சல், ஆண்குறி விம்மல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 3. சிலேத்துமபிரமியம்

இது, ஆண்குறியில் கடுப்பு, சலத்துவாரத்தில் நீர் தங்கிப்பின் வெண்மைநிறமான கலங்கல் வெளிப்படல், வாய் கண் இவ்விடங்க ளில் இரத்தக் குறைவு, அடிக்கடி நீரிறங்குவதைப்போ லருகல், தே கம் காங்கையாக இருத்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 4. வாதபித்தபிரமியம்

இது, தேகமெல்லாம் வலி, ஆண்குறியி னடியில் அலகைப் பாய்ச்சியதைப்போ லடிக்கடிவலித்தல்,மூத்திரத்தில் மாவைக்கரைத் தது போல் வெண்ணிறமான வண்டல் வெளியாதல், மலம் இறுகல்,

சுறுக்கோடு நீரிறங்கத் துடித்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 5. பித்தசிலேத்துமபிரமியம்

இது, வாய்க்கசப்பு, அடிவயிற்றில் இசிவு, சலத்துவாரத்தில் மஞ்சள்வர்ணமான வெள்ளைவிழ்தல், ஆண்குறித்தண்டி னடியில் சுறுக்கெனக் குத்தல், சர்வாங்கக் கீல்களிலும் பிடிப்பு அல்லது நோய்,பகலுறக்கம், பசியின்மை, உடலூதல்ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 6 தொந்தப்பிரமியம்

இது, தேகத்தில்தினவு, அடிவயிறுகனத்தல், அடிக்கடிசிறுநீர் கடுப்புட னிறங்கல், ஆண்குறியில் கசிவுண்டாகி சீலையில் பலநிற மான கரைபிடித் துறைதல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்

### 7. கட்டிப்பிரமியம் (Gonorrhoea with Syphilis)

இது, தேகத்தில் பல கட்டிகள் தோன்றல், ஆண்குறியில் தினவு, இரண்டு பீஜங்களிலும் சொரி பிடித்தாற்போல் நீர்கசிவு, ஆண்குறியில் கட்டி உண்டாகி சீழ்வடிதல், தேகமிளைத்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 8. சலப்பிரமியம் (Gonorrhoea with Bubo)

இது, தேகத்தில் வலி, வாய் கசப்புடன் வாந்தி, மயக்கம், அடிக்கடி நீரிறங்கல், அந்நீரில் கழுநீரைப்போன்ற வெண்மைநிற மான கலங்கல்தோன்றல், அடிவயிற்றிலு பாதி, மலத்தில் சீதம்விழு தல், அரையில் கட்டிக்காணல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 9. தந்திப்பிரமியம் (Gonorrhoea with Gleet)

இது, அடிவயிறு நோதல், ஆண்குறியினடியில் விருவிருத்தல், சிறுநீரிறங்குமுன் தந்திபோல் வெண்ணிறமாக வீழ்தல், சீலையில் கசிவோடு தோய்வு, கைகாலெரிச்சல்ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 10. இரத்தப்பிரமியம் (Haematuria)

இது, மயக்கம், வருத்தத்துடன் முயலிரத்தம்போல் நீரிறங்கல், தேஜசுகெடல், பேய்போலலைதல், அடிக்கடி நீர் தடைப்பட்டு கொஞ்சங்கொஞ்சமாக இறங்கல் ஆகிய இக்குணங்களை பெற்றிருக்கும்.

### 11. சீழ்ப்ரமியம்

இது, ஆண்குறியைக் கடுத்து சீழ்போல் வெளியாதல், நாபியில் விரணம், கைகால்களில் குடைச்சல், அடிக்கடி நீரிறங்கல், குளிரோடு சுரம் காய்தல், மனக்கிலேசம், மயக்கம், தேகமெல்லாம் வலி ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 12. ஒழுகுப்ப்ரமியம்

இது, மூத்திரத்துடன் சீழ் உதிரம்கலந்தொழுகல், தேகத்தில் பல கட்டிகள் தோன்றல், ஆயாசம், குடைச்சல், தேகமழலை, பாயும் படுக்கையாகப் படுத்திருத்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 13. அரித்திராப்ரமியம்

இது, மஞ்சள்நிறமான வெள்ளை காணல், எரிச்சலோடு நீரிறங்கல், சல துவாரத்தில் கம்பியைச் செருகியதைப்போலுபாதி, முகம் மஞ்சள்நிறமாதல், நாக்கசத்தல் ஆகிய இக்குணங்களைபெற்றிருக்கும்.

### 14. கிரிச்சரப்ப்ரமியம்

இது, மஞ்சள்வர்ணமாக நீரிறங்கல், ஆண்மைகுன்றல், அதிக வருத்தத்துடன் நீரிறங்கல், நீர்கட்டி உபத்திரவம் செய்யல், உறக்கமின்மை, ஆகாரம் செல்லாமை, மனசஞ்சலம், தேகமுளைச்சல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 15. கரப்பான்பிரமியம்

இது, அடிவயிறு முறுக்கி சீதம் விழுதல், எரிச்சலோடு நீரிறங்கல், தேகத்தில் சொரி, தேகம் காய்தல், நீர்த்துவாரத்தில் குத்தலுடன் சுண்ணாம்பு கற்களைப்போல கடுத்து விழுதல், மலசலச்சுருக்கம், ஆண்குறியில் என்னேரமும் கசிதல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 16. கற்பிரமியம்

இது, ஆண்குறியில் சதா கள்ளைப்போன்ற நீர்கசிதல், தேகத்தில் கற்றாழை நாற்றம் வீசல், சிறுநீர் சிக்கி வயிறுவிம்மல், பசியின்மை, தேகபளுவு ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 17. தாதுபிரமியம்

இது, சிலந்திப்பூச்சியின் நூலைப்போல சிறுநீரிற் காணல், நீர் சிவந்துபோதல், தண்டு அடிக்கடி விம்மி அடிபாகத்தில் வலித்தல்,

நீரைச்சோதிக்க அடியில் கலங்க லேற்படல், விலாப்பக்கங்களில் குத்தல், நீர் துளித்துளியாக வீழ்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 18 நீச்சுபிரமியம்

இது, கள்ளைப்போல் நீரிறங்கல், அதில் வெள்ளையுடன் சீழ் கலந்திருத்தல், தண்டுவிம்பலில் நோதல், ஆண்குறியிலுள்ள நரம்புகள் சுருக்கமடைதல், அடிவயிற்றில் குத்தல், தேகம் குளிர்ச்சியாதல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 19. வலிப்பிரமியம்

இது, குகம்முதல் குய்யம் வரையிலுள்ள நரம்புகளில் குத்தல், அடிக்கடி வலித்தல், முகத்தின் தேஜசுகெடல், மயக்கம், நாக்கசத்தல், கால்களில் திமிர், நீரிறங்கும்போது வெள்ளையுடன் துர்மாமிசம் விழல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 20. மதுப்பிரமியம்

இது, வண்டலுடன் தேன்போல் நீரிறங்கல், சலதாரையில் விரணமாதல், தேகத்தில் ஓர்விதமான துர்நாற்றம், உருசியின்மை, நாவறட்சி, என்னேரமும் சலம் விரும்பல், நீரிறங்கியபின் ஆயாசம் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 21. விரணப்பிரமியம்

இது, தேகமெல்லாம் விரணங்கள், மயக்கம், ஆண்குறியில் வீக்கம், சீழ் இரத்தம் வீழ்தல், கீல்களில் வலி, தேகம் காய்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

இந்தரோகத்தை அங்கிலேய மருத்துவர்கள் கனேரியா (Gonorrhœa) என்று சொல்வர். இது ஆண்குறியின் நீர்தாரையிலாயினும் பெண்குறியின் நீர்தாரையிலாயினும் சீழைப்போன்ற மேகநீர் கசிதலாம். அன்னியமாத ரிச்சை எவ்விதத்தினும் கொடியது என்று நம்முன்னோர் கூறியிருக்கும் ஆக்கினையை மீறி நடந்ததிற்காக உண்டானதண்டனை என்றே மதித்தல்வேண்டும். இவ்வியாதி புருஷர்களுக்காயினும் ஸ்திரிகளுக்காயினுமிருந்து பரிசுத்தமான சுகதேகிகளுடன் இணைவிழைச்சுக் கொள்வாராயின் பாலில் மோரைப் பிரைகுத்தியதைப்போல தேகத்தின் சுபாவத்தை முற்றிலும் மாற்றிவிடும். அப்போது நீர்த்தாரையில் நமைச்சல், நீர்கசிவு முதலியவற்றை யுண்டாக்கும். இதற்கு ஏற்ற சிகிச்சை செய்யத்

தவறின், அந்தநீர் சீழாகமாறுதல் அடையும். அந்த சீழானது வெள்ளை, மஞ்சள், பச்சை, சிவப்பு என்னும் பலவர்ணமாகத் தோற்றும். ஆண்குறியும் நீர் தாரையின் சளியூரும் சவ்வும் வீங்கி நீர்கடுத்து சன்னதாரையாக இரண்டு பிரிவாக முக்கலுடன் வேதனையைப் பிறப்பித் திறங்கும். அத்தருணம் நீர்தாரையில் அளவு கடந்த எரிச்சலை உண்டாக்கும். இராக்காலங்களில் ஆண்குறியானது விம்மி நோயெடுக்கும். அதனால் நித்திரைபங்க முண்டாகும். இந்த நிலைமையிலும் ஏற்ற சிகிச்சை செய்யாவிடின் இந்தரோகம் தனக்குத்தானே தணிந்து மேகநீர் சளிபோல் மாறுதலடைந்து அதில் கம்பிகளைப்போன்ற வெண்மைநிறம் வாய்ந்த வண்டல்கள் ஏற்படும். இதற்கே தந்திமேகம் கிலீட் (Gleet) என்று கூறுவர். இந்த ரோகம் நாளுக்குநாள் பிரபலப்பட்டால் நீரடைப்பு முதலியவற்றை யுண்டாக்கும்.

இந்த ரோகம் புருஷர்களுக்கே மிகுந்த உபத்திரவத்தைக் கொடுக்கத்தக்கது. ஸ்திரீகளுக்கு அதிக உபத்திரவத்தைக் காட்டாது. இங்ஙனம் உண்டாகிய ரோகத்திற்கு ஆரம்பத்திலாயினும் அல்லது வியாதி பிரபலமாவதற்கு முன்னாயினும், தகுந்த சிகிச்சை செய்து நிவர்த்திக்கவேண்டும். அப்படிச் செய்யத்தவறின் இரத்தத்தைப் பற்றிப் பலவிதமான விரணங்களையும், மேகரோகங்களையும் உண்டாக்கும். இதனை அடுத்த இலம்பகத்தில் கூறப்படும்.

### வெள்ளை, வெட்டை என்கிற ப்ரமியத்திற்கு
### (மூலிகைப்பிரயோகம்)

ஐவண இலையை (மருதோன்றி) அரைத்து, ஒரு சிறு எலுமிச்சம் பழமளவு பசுவின்பாலில் கரைத்து, இரண்டுமூன்று முறை சிறு கண்களையுடைய சீலையில் வடிக்கட்டி, தினம் இருபொழுது 3-நாள் சாப்பிட்டு, பாலன்னம் தவிர வேறொன்றையும் சேர்க்காதிருப்பின் குணமாகும்.

### வேறு

வெள்ளறுகு சமூலத்தை அரைத்து பெரும் நெல்லிக்காய் அளவு வெள்ளாட்டுப்பாலில் கலக்கித் தினம் இருபொழுது 3-நாள் சாப்பிட்டு முன்போல் பத்தியமிருக்கக் குணமாகும்.

### வேறு

கால்படி அத்திக்காய் பிஞ்சையும் ½-முடி தேங்காய்த்திருகலையும் போட்டுக் கல்லுரலில் இடித்துப் பிழிந்தசாற்றில் ஒரு விராக

னடை வெள்ளைக்குங்கிலிய சூரணத்தைப் போட்டுங் கலக்கி தினம் காலை ஒருபொழுது 3-நாள் கொடுக்கக்குணமாகும். பத்தியம் உப்பு, புளி, காரம் விலக்கவும்.

### வேறு

சிவப்பு அம்மாம்பச்சரிசி யிலையை (சிற்றிலைப்பாலாடை) சிறு எலுமிச்சம்பழமளவு அரைத்து, பசுவின்பாலில் கலக்கி தினம் இரு பொழுது 3-நாள் கொடுக்கக் குணமாகும். பத்தியம் பாலன்னம்.

### வேறு

நறுவிலி இலை, வெண்குன்றியிலை இவையிரண்டையும் வகை க்கு ஒரு நெல்லிக்காய்ப் பிரமாணம் அரைத்து கலந்து அதனில் ஒரு விராகனெடை வறுத்து இடித்த தேற்றான்கொட்டைச் சூர ணத்தைக் கூட்டி வெள்ளாட்டுப்பாலில்கலக்கி தினம் இருபொழுது 5-நாள் கொடுக்க நாட்பட்ட பிரமியமும் குணமாகும்.

### சிகிச்சை வேறு

நெல்லிவற்றல், படிகாரம், கற்கண்டு சமனெடையாக இடித் துச் சூரணித்து வேளைக்கு ஒரு விராகனெடை தினம் 3-வேளை மோரில் கலக்கிச்சாப்பிட நீர்எரிச்சல், கடுப்பு தீரும்.

### வேறு

நாகப்பழக்கொட்டை, படிகாரம், வால்மிளகு இவைகளைச் சமனெடையாகச் சூரணித்து வேளைக்கு ஒரு கழஞ்சி சீனியுடன் கலந்து தினம்மூன்று வேளை 3-நாள் சாப்பிட இரத்தப்போக்கு குணமாகும்.

இவ்விதமாக ஆரம்பத்தில் உபாயமான சிகிச்சைகளால் எரிச் சல், கடுப்பு, நீர்க்கட்டு, உதிரப்பெருக்கு முதலியவற்றை நிவர்த்தி செய்துகொண்டு அடியிற் கூறப்பட்டுள்ள அவிழ்தங்களில் ஏதேனு மொன்றைக் கொடுத்துவரின் இந்த ரோகம் முற்றிலும் குணப்படும். கற்பூராதி சூரணம், வெள்வங்கபற்பம், நாகரசபற்பம், பிரமேகலிங் கச் செந்தூரம், கருவங்கபற்பம், சந்தனாதிவடி, சந்தனாதிச்சூரணம், வல்லாரைக்கிருதம், மேகசஞ்சீவி எண்ணெய், பிரமதண்டு எண் ணெய், மேகத்தெண்ணெய், குங்கிலிய வெண்ணெய், சதாவரிக்கிரு தம் முதலியவற்றைக் கொடுக்கவும்.

### பிரமியத்துடன் அரையாப்புகட்டி கண்டால்

பிரமதண்டு எண்ணெய், வல்லாரைக் கிருதம், மேகத் தெண்ணெய், * கொடிக்கள்ளி எண்ணெய், * விரரசப்பதங்கம், * பூவரசங்காய் எண்ணெய் இவைகளில் ஏதேனுமொன்றை 3-5 நாள் கொடுக்க கட்டிகரைந்து போவதுடன் துர்நீரும் வெளிப்படும். ஒருகால் கட்டி பழுத்த சந்தர்ப்பமாக இருந்தாலும் உடைந்து எளிதில் விரணம் ஆரும்.

### அரையாப்பு கட்டிக்கு மேல்சிகிச்சை

### சேராங்கோட்டை மெழுகு

சேராங்கொட்டை பலம்-1 மஞ்சள் பலம்-1 இவை யிரண்டையும் தேகத்தின்மேல் படாமல் இடித்து உறவானபின் இரண்டு பலம் தேன்மெழுகை நெருப்பனலில் உருக்கி அதனில்போட்டுக் கிளறி ஆறவிட்டு இடித்து, வில்லைதட்டி கட்டியின்மீது வைத்து, கச்சைகொண்டு வரிந்துகட்டி நான்காவது நாள் அவிழ்த்துப்பார்க்க கட்டி அடங்கிப்போகும். இன்னும் இந்த மெழுகை கீல்களில் துர்நீர் சேர்ந்து உண்டாகும் வீக்கங்களுக்கும் அண்டவாதத்திற்கும் கட்டலாம்.

### வேறு சாம்பிராணிமெழுகு

ஒருபலம் கற்பூரத்தையும் ஒருபலம் பளிங்கு சாம்பிராணியையும் தனித்தனிப் பொடித்து கல்வத்திலிட்டு ஓயாமல் வலுவுகொண்டரைக்க மெழுகுபோலாகும். இதை ஒரு கனமான புதுசீலையில் பிளாஸ்திரியைப்போல் தடவி நெருப்பனலில் காட்டி கட்டியின் மேல் போட்டு புதுமண்ணோட்டை வைத்து கச்சைகொண்டு வரிந்துகட்டி 3-வது நாள் அவிழ்த்துப்பார்க்க கட்டி கரைந்துவிடும். ஒருகால் கட்டி சீழ் அதிகரித்து குத்தல் உபத்திரவம் முதலியவைகள் உண்டாயிருப்பின் முற்கூறப்பட்ட மருந்தை அரைக்கும்போது ஒரு துவரம்பருப்பு அளவு வெள்ளைப்பாஷாணத்தைக் கூட்டி நன்ருய்க்கலக்க அரைத்துமுன்போலக் கட்ட மூன்ருவது நாள் முகம் விட்டு உடையும். அப்போது சிலைத்தைலம், விரணசஞ்சீவித்தைலம், விரணக்களிப்பு, துவர்சீலை முதலிய பிரயோகத்தால் நிவர்த்திக்க வேண்டும்.

[பிரமிய ரோகத்துடன் கோறுக்கேன்று சொல்லப்பட்ட ஆண்குறியிலுண்டாகும் விரணத்திற்கும், கிரந்திக்கும், கீல்களிலுண்டாகும் பிடிப்புகளுக்கும் சிகிச்சை.]

* வீரரசபதங்கம், * கொடிக்கள்ளி எண்ணெய்,*பூவரசங்காய் எண்ணெய், பிரமதண்டு எண்ணெய், வல்லாரைக் கிருதம், மேகத் தெண்ணெய், மேகசஞ்சீவி எண்ணெய், ரசகெந்தி மெழுகு, சூதபற் பம்,வெள்வங்கபற்பம், வாலைரசமெழுகுமுதலிய பிரயோகங்களினால் நிவர்த்தி செய்தல்வேண்டும்.

---

## மேகரோக இலம்பகம்.

### மேகரோக பூர்வரூபம்

மேகரோகமானது சரீரத்தில் வியர்வை, துர்நாற்றம், தளர்ச்சி, தேகம் கனத்தல்,படுக்கையிலும் உட்காரவிலும் சுகத்திலும்நித்திரை யிலும் இச்சை, மார்பு, கண், நா, காது இவ்விடங்களில் எரிச்சல், தலைமயிரும் நகமும் விரைவில் வளர்தல், சீதள வஸ்துவின்பேரில் இச்சை, கன்னமும் நெஞ்சும் உலரல், தாகம், வாயினிப்பு, கைகா லெரிச்சல், ஆண்குறி சுருங்கல், சுக்கிலநாசம் என்னும் இக்குணங் களையெல்லாம் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கும்.

இந்தரோகத்தை வாதத்தில் நாலு, பித்தத்தில் ஆறு, சிலேத்து மத்தில் பத்து ஆக, இருபது வகையாகப் பிரித்திருக்கின்றனர்.

### வாதமேகநீரின் விவரம்

### 1. ஆச்சியகந்திமேகம்

சிறுநீரானது நெய்யைப்போல் தடித்து இறங்கும். சீலையிற் றோய்த்துக் கொளுத்தினால் எரிவதும் வேளைக்கு ஒரு குறுணி என் னும் அளவாக நீரிறங்குவதுமாக இருக்கும்; அப்போது ஆயாசம், தேகம்வாடல், மூர்ச்சை இவைகளைப் பெறும், இதற்குச் சரிவர சிகி ச்சைசெய்யத்தவறின் ஒருவாரத்திற்குள் மரணத்திற்கு ஆளாக்கும்.

### 2 சுத்தமேகம்

சிறுநீரானது கோசலத்தைப்போல் வாசனையுள்ளதும், அதனை சீலையிற்றோய்த்துக் கொளுத்தினால்மிகுந்த பிரகாசத்துடன் எரி வதுமாக இருக்கும். ஒருவேளைக்கு நாழி அளவாக நீரிறங்குவது டன் முகத்தின் தேஜசுமாறி, இளைப்பு ஆயாசம் முதலியவற்றை யுண்டாக்கும். தகுந்தசிகிச்சை செய்யத்தவறின் பதினைந்து நாளில் கொல்லும்.

3. வாதபிரமியமேகம்

சிறுநீரானது கொழுப்பையொத்துக் கனத்து மாமிசநாற்றத்துடன் ஒரு வேளைக்கு நாழி அளவாக அடிக்கடி இறங்கும். இதனைக் காய்ச்சிப்பார்க்க தேன்போலுறையும். இப்படி கண்ட ரோகத்திற்கேற்ற சிகிச்சை செய்ய தவறின் 6-வது மாதத்தில் கெடுதியை உண்டாக்கும்.

4. மாங்கிசசிராவிமேகம்

சிறுநீரானது வெள்ளாட்டுக் கொழுப்பையொத்தும், காய்ச்சினால் அவ்வாட்டின் நெய் நிறம்போலும், கருப்பஞ்சாற்றின் மணமும் உண்டாய் வேளைக்கு குறுணியளவாக இறங்கும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின் 5-வது மாதத்தில் கெடுதியை உண்டாக்கும்.

முற்கூறப்பட்ட நான்கின் சமுதாயகுணம்

கை கால் கண் உடல் இவைகள் அழலைபெறும்; பல், நாக்கு, நடுத்தொண்டை இவைகள் கருமை நிறமடையும்; நாவறட்சி, மயக்கம், அரட்டல், புரட்டல், அன்னந்தண்ணீர் அதிகம் வேண்டல், துர்க்கந்தமான அபானவாயு பறிதல் நாடிகுண பேதப்படல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

பித்தமேகநீரின் விபரம்

5. அப்பியமேகம்

சிறுநீரானது யானையின் மதசலத்தைப்போல அதிகவிரைவாய் வேளைக்கு நாழி அளவு இறங்கும். அதனைக் காய்ச்சிப்பார்க்க துவர்மண்போலுப்புறையும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின் எட்டாவது மாதத்தில் கெடுதியை விளைவிக்கும்.

6. பித்தப் பிரமியமேகம்

சிறுநீரானது கற்றாழைச் சாற்றையொத்த நிறமும் நாற்றமும் உள்ளதாய் வேளைக்கு இருநாழி யளவு இறங்கும். இதனைக் காய்ச்சிப்பார்க்க மிகுந்த துர்நாற்றத்தை யுண்டாக்கும். இதற்குத் தக்கபடிசிகிச்சை செய்யத்தவறின் மூன்றாவது வருஷத்தில் கெடுதியை உண்டாக்கும்.

7. சவிரணமேகம்

சிறுநீரானது சுண்ணாம்பையொத்த காரமும் துர்நாற்றமும் உள்ளதாய் வேளைக்கு ஒருநாழி யளவு இறங்கும். நீர்பாய்ச்சிய

இடத்தில் ஈ எறும்புகள் அரிக்கும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத் தவறின் இரண்டாவது வருஷத்தில் கெடுதியை உண்டாக்கும்.

## 8. மதுமேகம் (Lithiasis)

சிறுநீரானது மஞ்சள் நிறமாயும் பீசத்திலும் கோசத்திலும் கடுத்தலுடன் அடிக்கடி அரைநாழி அளவு நீரிறங்கும். அதனைக் காய்ச்சிப்பார்க்க அடியில் வெண்மை நிறமுடைய வண்டல் பற்றும். அப்போது மேனி கண் முதலியவைகள் வெளுக்கும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின் ஐந்தாவது வருஷத்தில் கெடுதியை உண்டாக்கும்.

## 9. சாந்திரமேகம்

சிறுநீரானது சுத்தமாக பளிங்குநிறமாக இருக்கும். பீசமும் கோசமும் கடுத்து தாழைவிழுதை இடித்துப் பிழிந்தெடுத்த சாறு போல் வேளைக்கு ஒருபடி இறங்கும். இதனைக் காய்ச்சிப்பார்த்தால் சீழ்போல்நாறும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின்ஐந்தாவது வருஷத்தில் கெடுதியை உண்டாக்கும்.

## 10. ஆர்க்கமேகம்

சிறுநீரானது இரத்தநிறத்தையும், லவணத்தையும் துர்நாற்றத்தையும் பெற்று கோசபீசங்கள் கடுத்து வேளைக்கு இருநாழி அளவு இறங்கும். காய்ச்சிப்பார்க்க புலால்நாற்றம் வீசும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின் 9-வது மாதத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### முற்கூறப்பட்ட ஆறின் சமுதாயகுணம்

சரீரம் வற்றலுடன் எரிச்சல், தேகத்திலும் நீரிலும் கவுச்சி நாற்றம், நீரைக் காய்ச்சிப் பார்க்கும்போது சீழ்போலும் கற்றாழைச் சாறுபோலும் தேன்போலும் வாசனை யுண்டாதல், கோசபீஜம் கடுப்பு, வாயில் விரணமுண்டாகி நாறுதல், விக்கல், அரோசிகம், சுரம், அரட்டல் புரட்டல்,தியக்கம், மூர்ச்சை, நாவறட்சி, தாகம், வாந்தி, ஆயாச மிவைகளைப் பெற்றிருக்கும்.

### சிலேத்தும மேகநீரின் விபரம்

## 11. வசாமேகம்

சிறுநீரானது கொழுப்பைக் கலந்ததுபோல் நிணவாசனையுடன் அடிக்கடி வேளைக்கு குறுணியளவாக இறங்கும். நீர்பாய்ச்சிய இடத்தில் ஆடைகட்டும். இதனைக் காய்ச்சினும் அவ்வாசனையே வீசும்.

அத்தருணம் தகுந்த சிகிச்சை செய்பத்தவறின் ஏழாவது வரு டத்தில் கெடுதியை விளைவிக்கும்.

### 12. உத்தமமேகம்

சிறுநீரானது சுத்தசலம்போ லிறங்கும். காய்ச்சினுலும் நல்ல சலத்தைப்போ லிருக்கும். இது வேளைக்கு குறுணியளவாக இறங் கும். இதனைப் பகுத்தறிந்து சிகிச்சை செய்பத்தவறின் பத்தாவது மாதத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### 13. மச்சைமேகம்

சிறுநீரானது மச்சைஎன்னும் மாமிசநிறமாகவும் அது கலந் ததுபோலவும் எலும்புகளிலுள்ள மூளையை உருகப்பெற்று வேளைக்கு முந்நாழி அளவாக வெளியாகும். இதற்குத் தகுந்த சிகி ச்சைசெய்யத்தவறின் 5-வது வருடத்தில் துன்பத்தைவிளைவிக்கும்.

### 14. ஆதிக்கமேகம்

சிறுநீரானது காய்ச்சினுலும் சும்மா வைத்திருந்தாலும் இள நீர் சலம்போல நிறமும் வாசனையும் உள்ளதாய் வேளைக்கு நாழியள வாக வெளியாகும். அப்போது தாகமதிகரிக்கும், தேகம் இளைக் கும், மனங்கிலேச முண்டாக்கும். இதற்குத் தகுந்தபடி சிகிச்சை செய்யத்தவறின் ஏழாவது வருடத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### 15. சுராமேகம்

சிறுநீரானது பனங் கள்ளைப்போலவே வெளுப்பாக நுரையுட னிறங்கும். அப்படி இறங்குவதில் முதல் தெளிவாகவும், குழம்பாக வும் வேளைக்கு நாழியளவாகவும் இறங்கும் காய்ச்சினுல் கள்ளின் மணமே வீசும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின் ஏழாவது வருடத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### 16 சுக்கிலமேகம்

சிறுநீரானது சுக்கிலத்தைப்போலவே வெளுப்பாகவும் தாழஞ் சாற்றைப்போலும் இறங்கும். இதனைக் காய்ச்சிப்பார்க்க ஈரல்போற் றேயும். இதற்குத் தகுந்த சிகிச்சை செய்பத்தவறின் மூன்றுவது வருடத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### 17 உதகமேகம்

சிறுநீரானது கமுநீர்போல தெளிவாகவும் வெளுத்தும் மிகு ந்தும்வெளியாகும். இதனைக் காய்ச்சினுல் சங்கு சுண்ணும்புபோல்

வண்டல் கீழ்தங்கும். தேகமும் நாறும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின் ஒருவருடத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### 18. பிரசமேகம்

சிறுநீரானது தேன்போல வேளைக்கு குறுணியளவு இறங்கும். சோதித்துப்பார்க்க அடியில்மெழுகைப்போல வண்டல் நிற்கும். நீர் பாய்ச்சிய இடத்தில் ஈ எறும்புகள் மொய்க்கும். இதற்கு ஏற்றபடி சிகிச்சை செய்யத்தவறின் ஐந்தாவது மாதத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### 19. இலவணமேகம்

சிறுநீரானது சுண்ணும்பைக் கரைத்ததுபோல் வேளைக்கு நாழியளவு இறங்கும். இதனைக் காய்ச்சிப்பார்க்க அடியில் உவர்மண் சுண்ணாம்பு இவைகளின் நிறமாகத்தோற்றப்படும். இதற்குத்தகுந்த சிகிச்சை செய்யத்தவறின் பதினைந்தாவதுவருடத்தில் துன்பத்தை விளைவிக்கும்.

### 20. தைத்தியமேகம்

சிறுநீரானது மாமிசத்தைக்கழுவின நீர்போல நீர்த்தாரையில் முறுக்குண்டு நாற்றத்துடன் வேளைக்கு முக்காழி அளவாக வெளியாகும். அதனைக் காய்ச்சினால் கவுச்சுவாசனையே வீசும். இதற்கேற்ற சிகிச்சை செய்யத்தவறின் 3-வது வருடத்தில் கெடுதியை உண்டாக்கும்.

### முற்கூறப்பட்ட பத்தின் சமுதாயகுணம்

சரீரம் பருத்தல், வெளுத்தல், தேகத்தில் தினவு, அன்னமும் தண்ணீரும் மிகவேண்டல், இருமல், கோழை, ஆயாசம், உளைச்சல் முதலியவற்றைப் பிரதான குணங்களாகப் பெற்றிருக்கும்.

### மேகரோக தசாவஸ்தை

1-வது கீழ்வயிற்றில் சங்கடந்தோன்றல், 2-வது நீரிறங்கியவுடன் ஆயாசம், 3-வது வாயு பிரபலப்படுதல், 4-வது முத்தோஷமதிகரித்தல், 5-வது சுக்கிலம் நசித்தல், 6-வது அதிக தாகமும் நீரில் மேகமும் உண்டாகுதல், 7-வது அரோசிகமும் தேகசாட்டியமும் பிறக்குதல், 8-வது கட்டிகள் எழும்புதல், 9-வது பேதி அதிகரித்தல், 10-வது ஞாபகமாறி உயிர் நீங்குதல் என்றறிக.

முற்கூறப்பட்ட பிரமிபரோகமானது குணப்படாமல் நாளுக்கு நாள் தேகத்திலேயே இலயித்திருப்பதினாலும், தாய்தந்தையர்கள் கருவினின்றே இத்தோஷ முன்னிட்டிருப்பதினாலும், மேகசம் பந்தமான ஸ்திரிகளிடம் மிதமிஞ்சிய சஞ்சாரஞ் செய்வதினாலும் இரத்தம் கெடுதலடைந்து மற்றைய தாதுக்களையும் நாளுக்குநாள் கெடுத்து தேகத்திலுள்ள ஜீவசத்துக்களை நீர்மூலமாக அளவுகடந் திறங்கச்செய்யும். இந்தரோகத்தை நம்முன்னோர் 20 விதமாக கூறி யிருப்பினும் ஆங்கிலேய மருத்துவர்கள் இரண்டு விதமாகத்தானே கூறியிருக்கின்றனர். அதாவது வெகுமூத்திரம் (டையேபிடஸ் இன்ஸிபிடஸ் Diabetes Insipidus) இது, ரோகிக்கு ஒருவேளை தேகம் கொஞ்சம் உஷ்ணமாய் இருக்கும். பிறகு ஒருவிதமான வாசனையுடைய நீர் இறங்கும் இதனால் சரீரம் வறட்சி, தாகம், மல பந்தம், தாதுநஷ்டம், இடுப்பில்வலி, கைகால், எரிச்சல், பலக்குறைவு முதலியவைகளை உண்டாக்கும். மதுமூத்திரம் (டையேபிடஸ் மெல் லிடஸ் Diabetes Mellitus) இது, சாதாரணமாய் நீர் வெளுத்த நிற மாகப் போகும். அதில் இனிப்பானசத்து ஏற்படும். ஒரு இராப் பகலில்ஏறத்தாழ $2\frac{1}{2}$ முதல் 3 பயிண்டு அளவு நீரிறங்கும். கொடிய வியாதிகளில் 20-30 பயிண்டு அளவு இறங்குவதுமுண்டு.

## சிகிச்சை

இத்தகைய நீர்ரோகங்களுக்கு அப்பிரகச்செந்தூரம், தங்கச் செந்தூரம், ||மேகசிந்தாமணிச் செந்தூரம், கருவங்கபற்பம், * மது மேகலேகியம், || இடியாவரைலேகியம், || மதுமேகக்கியாழம், சந்திர காந்திசூரணம், மேகநாதி எண்ணெய், ஆவாரைக்கியாழம், நாவல் கொட்டை மாத்திரை, முதலிய (அவிழ்தங்களைக் கொண்டு நிவர்த் திக்கவேண்டும்.

குறிப்பு:— இந்நூலில் குறிக்கப்பட்டுள்ள அப்பிரகச் செந்தூர மும் தங்கச் செந்தூரமும் பெருத்த நன்மையை உண்டாக்கும் என் பதில் சந்தேகமேயில்லை. மேகசிந்தாமணிச் செந்தூரம் செய்வதற்கு இந்தஅப்பிரகச்செந்தூரத்தைச் சேர்த்துக்கொள்ளல் விசேஷமான குணத்தை உண்டாக்கும்.

---

# குஷ்டரோக இலம்பகம்

# (LEPROSY)

## குஷ்டரோக பூர்வரூபம்

குஷ்டரோகமானது சரீரம் பளபளப்பு, மாறுநிறம், மிருகடினத்துடன் தடித்த சருமம், அச்சருமத்தின்மேல் தொட்டவிடத்தில் தினவு, வியர்வை, சிலவேளையில்லாமை, எரிச்சல், ரோமசிலிர்ப்பு,சிறிது காயம்படினும் பெரிய விரணமாதல், அதில் கறுத்த உதிரம் சொரிதல், பேசும்போது கண்டம்வறளல்,அதிநித்திரை,மிகுந்த விரணம் என்னும் இக்குணங்களையும், சீக்கிரத்தில் பிறந்து நெடுநாட் கழித்தும் ஆறாமல் குழிகள்விழுந்து குத்தலைத்தருகின்ற விரணங்களையும் தனக்குப் பழைய ரூபமாகப் பெற்றிருக்கின்றது. இதனைக் குறைநோய் என்றும் பெரும்வியாதி என்றும் கூறுவர்.

[இந்தரோகத்தைப்பதினெட்டுவிதமாகப்பிரித்திருக்கின்றனர். அதன்விபரம்]

### 1. புண்டரீக குஷ்டம்

இது, சரீரம், முகம், காது இவ்விடங்களில் தாமரையின் பூவிதழ்போல குவிந்து கறுப்பாகவும் வெளுப்பாகவும் சிவப்பாகவும் தினவுடன் எழும்பி விரணங்களாகும். அவைகளில் நோவு,எரிச்சல், நமைச்சல் முதலியவைகள் அதிகரிப்பதும் தாமரையிலையில் சலம் போல் இரத்தமானது விரணத்தில் ஒட்டாது நிற்கும். இன்னும் குழம்பான சிலைத்தண்ணீர் வடியும்.

### 2. விஸ்போடகுஷ்டம்

இது, சரீரமெங்கும் தினவுண்டாக்கி சிவந்து வெளுத்து விஸ்தரித்து நல்லபாம்பின் விஷப்படம்போல தடிப்பாக விரணங்கள் எழும்பும் அப்போது எரிச்சல் சகிக்கக்கூடாத துன்பம் முதலியவற்றை யுண்டாக்கும்.

### 3. பாமாகுஷ்டம்

இது, சரீரத்தில் வெளுப்பாகவும், சிவப்பாகவும் தாமரை முகிழையொத்த கொப்புளங்கள் எழும்பி சொறியோடு தினவை யுண்டாக்கும். இன்னும் நல்லபாம்பினுடைய மேற்சட்டை விடுவதைப்போல் விட்டு வீங்கிக் கைகால் குறையும்.

### 4. ஏகசர்மகுஷ்டம்

இது, தேகமுழுதும் கறுத்து தோலுறிந்து சிவப்பாக மாறும். அப்போது தினவு, சொறி, வறவறப்பு கால்விரல்களில் கனத்தல்,

தேக வலி, திமிர், வெடிப்பு, வீக்கம், அசதி இவைகளைப் பெற்றிருக்கும்.

### 5. கர்ணகுஷ்டம்

இது, சருமமானது பச்சைவர்ணத்துடன் பொரிபொரியாக வெடித்தல், திரிதோஷாதிக்கம், தேகம்பாரித்து காக்கட்டான் பூநிறமாகத் தோன்றலுடன் வீக்கம் இவைகளை உண்டாக்கும்.

### 6 சிகுதகுஷ்டம்

இது, சருமத்தில் மஞ்சள்நிறமாக முதலில் கண்டு, பின்னர் வெளுத்து சிவந்து முடிவில் கறுப்பாகமாறும். அப்போதந்த இடங்களில் தடித்து வெடித்து சீழ்காணும், வயிற்றின்சதை கடினமாகி சீழ்சொரியும். சருமத்தில் திமிர் வியாபிப்பதுடன் எரிச்சலை யுண்டாக்கும்.

### 7. கிருஷ்ணகுஷ்டம்

இது, சர்வாங்கமும் கறுத்தல், சருமத்தில் திமிரோடு நாறுதல், நோதல், சப்ததாதுக்களும் உஷ்ணமாதல், அரையிலும் புறங்காலிலும் கொஞ்சங்கொஞ்சமாகவும் சிரசில் அதிகமாகவும் விரணங்கள் காணல், அதனால் மனக்கிலேசம் முதலியவற்றை யுண்டாக்கும்.

### 8. அவதும்பரகுஷ்டம்

இது, சரீரத்தில் கொப்புளங்கள் அத்திப்பழத்தையொத்து அடுக்கடுக்காய் கிளம்பி காய்ந்து தேகமெங்கும் கறுப்பாகித் தோங்கும். இன்னும் திமிர், சொறி, செந்நீர் சொரிதல், மயக்கம் முதலியவற்றை யுண்டாக்கும்.

### 9. மண்டலகுஷ்டம்

இது, சிரசிலும் சர்வாங்கத்திலும் பச்சைவர்ணமாயும், ரத்தவர்ணமாயும், தோற்றும். தலையில்வெளுப்பு, தேகமெங்கும் விரணங்கள் தடித்து கறுத்தல், சொறி, தினவுஇவைகளையுண்டாக்கிச் செந்நீர் சொரியும்.

### 10. அபரிசகுஷ்டம்

இது, சர்வாங்கத்திலும் கறுத்து வெடித்து ரத்தம் வடிதல், நோவு, தொடக்கூடாமை, வாதாதிக்கத்தால் அதிரல், உபத்திரவம், வீக்கம் முதலியவற்றை பெற்றிருக்கும்.

### 11. விசர்ச்சிகாகுஷ்டம்

இது, வாதப்பித்தத்தா லுற்பவித்து எண்ணெய் தடவியது போல வெளுத்தல், எரிச்சல், வேதனை, சிவந்ததடிப்பு, தோல் கடினத்துடன் சிவத்தல், சுறசுறப்பு, வெறுப்போடு சலிப்பு, வயிற்றிசிவு, கோபித்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 12. விபாதிகாகுஷ்டம்

இது, சிலேத்துமபித்தத்தால் பிறந்து தேகத்தில் வெடித்தலுடன் சகிக்கக்கூடாத அறுவெறுப்பு, அதிககாங்கை, கை கால் கண் காது கண்டம் இவைகளில் வெடிப்பு, வீக்கம், நல்ல சர்ப்பத்தை யொத்த தேககாந்தி, சந்துகளில் கறுப்புநிறமாக படர்தல் ஆகியஇக் குணங்களை உண்டாக்கும்.

### 13. கிடிபகுஷ்டம்

இது, சர்வாங்கமும் பச்சைநிறமாதல், கனத்து யானைத்தோலைப்போ லாகுதல், அடிக்கடி நீரிறங்குதல், தேகத்தில் சிலைத்தண்ணீர் வடிதல், நாற்றம், வாதாதிக்கம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

### 14. சர்மகுஷ்டம்

இது, தேகத்தில் வலியதிகரித்து துண்டுதுண்டான இருபிளப்பான வெடிப்புகளுண்டாகி வேதனையுண்டாக்கும். சருமம் பசுமை வெண்மை கருமை என்னும் இவ்வர்ணங்களாகி தினவுடன் தடித்து சீழ்வடியும், தொடவொண்ணு நோயுடன் மயக்கம், அசதி, வயிற்றுவலி முதலியவற்றையும் உண்டாக்கும்

### 15. தத்தருகுஷ்டம்

இது, தேகத்தில் சிவந்ததடிப்பு, வெளிறல், அதிகரோமம் முளைத்து அவைகள் சுருளல், பித்த சிலேத்துமாதிக்கம், தேகம் ஊதலுடன் திமிர் என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 16. சித்மாகுஷ்டம்

இது, வாத பித்தத்தா லுற்பவித்து சுரைப்பூவின் வர்ணமாக சரீரமுழுதும் திமிருடன் தடிக்கும். மஞ்சள்நிறம், அதில் ரத்தம் கசிதல், சசிக்கவொண்ணாத்திமிர், மறதி என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 17. சதாருதுஷ்டம்

இது, வாத சிலேத்துமத்தால் சரீரத்தில் சிவப்பு நிறமாகவும், வெண்மை நிறமாகவும், பச்சை நிறமாகவும் தடிப்பான விரணங்கள் பிறக்கும். அப்போது தினவும், எரிச்சலும் அதிகப்படும்; பின்பு கரடு கட்டி புண்ணாக்கும். சருமமானது பாம்பின் தோலைப்போல் திரைந்து தொங்கும். நாசி கண் காது கன்னம் இவ்விடங்களில் தடிப்பு மிகும்.

## 18. சுவேததுஷ்டம்

இது, சருமமானது தடிப்பாக சுத்தவெளுப்பாக மாறுதலடையும். அவ்விடங்களி லிருக்கிற ரோமங்களும் வெளுக்கும். இதனை நிறபேதங்களினால் சிவந்து கருமையாக விருப்பின் வாத வெண்குஷ்டமென்றும், செந்தாமரைப் பூப்போல சிவந்து வெளுத்திருப்பின் பித்தவெண்குஷ்ட மென்றும்; தும்மைமலர்போல வெளுத்திருப்பின் சிலேத்தும வெண்குஷ்ட மென்றும் சில நூலாசிரியர் கூறுவர்.

இந்தரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் லெப்ரஸி (Leprosy) என்றுகூறுவதுடன் இரண்டு விதமாகப் பிரித்திருக்கின்றனர். அதாவது சர்மம் தடித்துக் காண்பது ஒன்று, தடிப்பில்லாமல் திமிர்கண்டு காண்பதொன்று.

### சிகிச்சை

கருவங்கபற்பம், மால்தேவிச் செந்தூரம், வல்லாரைக்கிருதம் தாம்பிர மெழுகு *பறங்கிச்சக்கைச் சூரணம், ||சிவனார்வேம்புத் தைலம், ||குக்கில்வல்லாதி லேகியம், ||கந்தகத் தைலம் முதலிய அவிழ்தங்களைக் கொண்டு நிவர்த்திக்க வேண்டும். வெண்குட்டத்திற்கு மாத்திரம் ||பறங்கிப்பட்டைச் சூரணம், வெண்குட்ட மாத்திரை இவைகள் இரண்டினில் ஒன்றைச் சந்தர்ப்பத்திற் கேற்றவாறு கொடுத்து நிவர்த்திக்க வேண்டும்.

---

* பறங்கிச்சக்கைச் சூரணம் ௭௧-வது முறைப்படி செய்ததென் றறிக.

# பாண்டுரோக இலம்பகம்

# (ANAEMIA)

## பாண்டுரோக பூர்வரூபம்

பாண்டுரோகமானது, மார்பு அதிரல், சரீரம் சுறசுறத்தல், அரோசிகம், மஞ்சள் நிறமான சிறுநீர், வியர்வை, மந்தாக்கினி, தேகம் இளைத்தல், வெளுத்தல், ஆயாசம் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றன. இதனை வாதப் பாண்டு, பித்தப்பாண்டு, சிலேத்துமப்பாண்டு, திரிதோஷப்பாண்டு, விஷப்பாண்டு என ஐந்துவிதமாகப் பிரித்திருக்கின்றனர்.

### 1. வாதப்பாண்டு

இது, குடலைப்புரட்டி வயிற்றைவலித்தல், தாகமும் பசியுமற்று தேகத்தை நறுக்கித் துவைத்ததுபோ லிருத்தல், நடுக்கல், மலபந்தம் கண்சிவத்தல், தலைவலி, உடல் வெளுத்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 2. பித்தப்பாண்டு

இது, சரீரம் மஞ்சள் வர்ணமாகவும் அல்லது வெளுப்பாக வும் இருத்தல், கண்களில் இருள்கம்மல், தாகம், மூர்ச்சை, வாயில் மிளகின் காரத்தை யொத்திருத்தல், நெஞ்சுவலி, சுவாசபந்தம் அல்லது மேல்மூச்சு, கிறுகிறுப்பு, மயக்கம், வாய்கசத்தல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 3. சிலேத்தும பாண்டு

இது, சரீரத்தின் தசை நரம்பு வெளுத்தல், நாவில் உப்புறைத்தல், மயிர்க்கூச்சம், வாந்தி, அதனால் குரல்கம்மல், அதிகதும்பல் கோழை, இருமல், மயக்கம், இடுப்பசதி, விந்துநஷ்டம், சோருதல், எரிச்சல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 4 திரிதோஷபாண்டு

இது, அரோசிகம், சோர்தல், தயக்கம், மேல்மூச்சு, இளைப்பு, மிகுதியான சிறு நீரிறக்கம், பலஹீனம், மார்புதுடிப்பு, தேககாங்கை, தும்மல், தேகம்ஊதல், அசதி ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### 5. விஷப்பாண்டு

இது, தேகம் வெளிறல், நரம்புகளில் நோவு, தேககாங்கை, தாகம், அரோசிகம், விக்கல், வாந்தி, இருமல், மேல்மூச்சு, வயிற்

றிரைச்சல், அதிசாரம், மிருசுரம், மார்பு கனத்தல், தேகம் ஊதல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

இந்தரோகத்தை ஆங்கிலேப மருத்துவர்கள் சித்தாந்தப்படி அனீமியா (Anaemia) என்று கூறுவர். இது இரத்தத்தி லுள்ள சிவந்த அணுக்கள் குறைந்து வெளுத்துப்போவதே கார ணம் இரத்தப் பரிசோதனையில் 1000-க்கு 130-பாகம் சிவந்த அணுச்சங்கைகள் இருக்கவேண்டியதற்கு 80-60-30ஆகக் குறையு மாயின் இந்தரோகம் பிரபலப்படும். அப்போது இரத்தப்பசை கெட்டு முகம், கண்கள், உதடு, நாக்கு, வாய், ஈறு, தேகம் முதலிய வைகள் வெளுத்து வீக்கம்காணும்; அத்தருணம் நாடி மெலிந்து போதல், பசிமந்தம், கண்விழிகள் பெரிதாகத் தோற்றல், அசக்தி, ஆயாசம், நடைதளர்ச்சி, தியக்கம், மயக்கம், மார்புதுடித்தல் ஆகிய இக்குணங்கள் ஏற்படும். சிலகன்னிகைகளுக்கு பிரௌடையாகிற வயதில் ஒருவிதமான பாண்டு பிறப்பதுண்டு, இதற்கு சூதகபாண்டு குளோரோஸிஸ் (Chlorosis) என்பர்.

இதற்குச் சிகிச்சை இரத்தத்திலுள்ள அணுக்களை சிவப்பிக் கின்றதும் தேகத்திலுள்ள அசுத்தநீரை வெளியாக்குகின்றது மான திரிபுவனச் செந்தூரம், * சலமஞ்சரி, புடரசச் செந்தூரம், அயகாந்த, செந்தூரம், காந்தசெந்தூரம்,காரலவண பற்பம், சிந் தாதி லேகியம், மஹாவில்வாதி லேகியம், வில்வாதிலேகியம், அய காந்தகற்கம், கரிசலாங்கண்ணிச் சூரணம் முதலிய அவிழ்தங்களைக் கொண்டு நிவர்த்திப்பதுடன் அரக்குத்தைலத்தால் ஸ்நானம் செய் விக்கவேண்டும்.

---

## காமாலைரோக இலம்பகம்
## (JAUNDICE)

### காமாலை

முற்கூறப்பட்ட பாண்டுரோகம் பிறந்திருக்குங் காலத்தில் பித் தாதிக்கமான வஸ்துக்களை அதிகமாக புசிப்பதினாலும், மங்கையர் தம்மை மருவுவதினாலும் காமாலை ரோகம் பிறக்கின்றனவென்று கூறியிருக்கின்றனர். இதனைப் பதின்மூன்று விதமாகக் கூறுவர்.

### 1. ஊதுகாமாலை

கண்களிலும் வாயிலும் சலம்வடிதல், உடல்முழுதும் வீக்கத்துடன் கனத்தல், அதிக சீதளத்தினால் வெப்பம், தலைசுற்றல் தியக்கம், மஞ்சள்நிறமான சிறுநீர், தேகம் வாடல், திமிர் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

### 2. வறட்காமாலை

கைகால் வற்றல், அசதி, மலம் கறுத்தல், சிறுநீர் சிவந்தாவது கறுத்தாவது அருகலுடன் போதல், பார்வைமந்தம், தேகம் கறுத்தல் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

### 3. வாதகாமாலை

வயிறு பொருமல், மலபந்தம், வீக்கம், புறங்காலும் முகமும் அதைத்தல், எக்காரியத்திலும் சோம்பல், உடல்கடுத்தல், கண்பருத்தல் நித்திரையின்மை ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

### 4. பித்தகாமாலை

படுக்கையாகக் கிடத்தல், அன்னஞ்செரியாமை, வாதாதிக்கம், மேல்மூச்சு, உண்டவுணவு அப்படியே பேதியாதல், வயிற்றிரைச்சல், அசதி ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

### 5. சிலேத்துமகாமாலை

தேகத்தை உருவழித்தல், இருமல், தலை முகம் இவ்விடங்களில் வியர்வை, நடைதளரல், மேல்மூச்சு, தாம்பூலந்தரிக்குங் காலத்தில் செருக்கல், கண்சிவத்தல், உடல் நடுக்கம், நெஞ்சு கனத்தல், ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

### 6. வாதசிலேத்துமகாமாலை

அன்னஞ்செரியாமை, முகம் நாசி கண் இவைகளில் வியர்வை, வயிற்றிரைச்சலோடு பொருமல், நாவும் கண்ணும் வெளிறல், நடந்தால் மேல்சுவாசம், தேகவீக்கம், இருமல் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

### 7. பித்தசிலேத்தும காமாலை

உண்டவுணவு செரியாமல் வாந்தி, ஒபாத்தலைவலி, மனக்கிலேசம், வயிற்றிரைச்சலோடு பேதி, தாகம், முகம் கால்களில் வெளுப்பு, தேகம் ஊதல் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

8. தோஷகாமாலை

தேகத்தில் எரிச்சல், கடுத்தல், அடிக்கடி இருமல், தாகம், புளியேப்பம், நாவில் புளிப்பு, பசி, அடிவயிற்றில் வீக்கம், குளிர் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

9. மஞ்சட்காமாலை

மஞ்சள் நிறமான சிறுநீர், சரீரம் முழுதும் ஊதல், தளர்ச்சி, முகம் கால்கை உண்ணாக்கு கண்ணின் வெண்படலம் இவைகள்மஞ்சள்நிற மாதல், முகத்தில் மினுமினுப்பு, அன்னதுவேஷம், அழுகை, மனச்சலிப்பு, சுவாசத்தில் மஞ்சள்நாற்றம், தாதுநஷ்டம், மலபந்தம் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

10. அழலுகாமாலை

கைகால்கள் அசதி, கண் சிறுநீர் இவைகளில் மஞ்சள்நிறம் ஆண்குறியில் எரிவு, அசீரணம், வயிற்றுப்பசம், தேகம் அழலை ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

11. செங்கமலக்காமாலை

தாமதக்குணம், தேகத்தளர்ச்சி, சோம்பல், சிறுநீர் சிவந்து மஞ்சள்வர்ணமாக அருகிவீழ்தல், நகமும் உடலும் வெளுத்தல், உடல்வற்றல், சுரம், நாவும் உண்ணாக்கும் உமிழ்நீரும் மஞ்சளித்தல் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

12. கும்பகாமாலை

தேகம் கண்டுகண்டாக வீங்குதல், அடிக்கடி களைத்தல், வியர்த்தல், சிறுநீர் மஞ்சள்நிறமாகப் போதல், மாலைநேரத்தில் வியர்வை, வாதாதிக்கம், கண் சிவத்தல், சரீரம் சோருதல், மயிலைப்போ லுறங்கல் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

13. குன்மகாமாலை

சீரணகாலத்தில் அடிவயிற்றில் வலித்தல், வாந்தி, கண்களில் மஞ்சள்நிறம், மஞ்சள்நிறத்துடன் குழம்பிய சிறுநீர், வாய் வெளிறல், பிரமை, இருமல், இரைப்பு, மயிலைப்போன்ற உறக்கம், படுக்கையில் புரளல் ஆகிய இக்குணங்கள் ஏற்படும்.

சாத்தியாசாத்தியம்

பித்த காமாலை, மஞ்சட்காமாலை, சிலேத்தும காமாலை, ஊது காமாலை, வறட்காமாலை, வாதசிலேத்தும காமாலை, பித்தசிலேத்தும

காமாலை என்னும் இவ்வேழும் சாத்தியம். மற்ற ஆறும் அசாத்திய மெனக்கூறப் பட்டிருக்கின்றன.

இந்த ரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி ஜாண்டீஸ் (Jaundice) அல்லது இக்டரஸ் (Icterus) என்று கூறுவர். இது பித்த நீரானது குடலில் வந்து விழும்படியான சுபாவம் கெட்டு, மீண்டும் அது இரதத்திலேயே கலப்பதினாலும் ஈரலின் தொழில் விகல்பமடைந்து பித்தநீர் சுரக்காமல் இரத்தத்திலேயே நின்றுவிடுவதினாலும், பித்தப்பையில் கற்களுண்டாகி குடலினுள் செல்லவொட்டாமல் தடுப்பதினாலும் இந்த ரோகம் பிறக்கின்றது. அப்போது கண்கள், முகம், நகம், சர்மம் இவைகள் மஞ்சள் நிறமாக மாறுதல் அடைவதும் வாய்கசப்பு, தாகம், கோபம், மெலிந்தநாடி ஆகிய இக்குணங்களையும் உண்டாக்கும்.

சிகிச்சை

* காமாலைக்கியாழம், || திரிபுவனச்செந்தூரம், அயகாந்த கல்கம், அயகாந்த செந்தூரம், வில்வாதி லேகியம், கரிசாலை வெண்ணெய், கரிசலாங்கண்ணிச் சூரணம் முதலியவற்றைக் கொண்டு நிவர்த்திக்க வேண்டும்.

---

## சோபைரோக இலம்பகம்.

### டிராப்சி

### (DROPSY)

சோபைரோக பூர்வரூபம்

நேத்திரம் முதலியவற்றில் தாங்கமுடியாத அழற்சியும், நரம்புகளில் வீக்கம், இசிவு, வாந்தி, தேககனதி முதலியவற்றைத் தனக்குப் பழையரூபமாக பெற்றிருக்கின்றன.

சோபைரோகத்திற்குக் காரணம்

சந்நிபாதசுரம், சித்தப்பிரமை, விஷம்தீண்டி தேகத்தில் ஊறுதல், சிறை இருக்குதல், அடிபடுதல், நெடுந்தூரம் நடத்தல், மலைவாசம், நீர்க்கரைவாசம், சாம்பல் மண்முதலியவற்றைத் தின்னுதல் ஆகிய இவ்வற்றால் இரத்தம் முறிவுபட்டு இந்தரோகம் பிறக்கின்றன. இதனை நான்கு விதமாய்ப் பிரித்திருக்கின்றனர்.

### வாதசோபை

உடல் வற்றும், இரத்தநரம்புகள் வெளுக்கும், அசீரணம், துர்ப்பலம், நடுக்கம், சுரத்துடன் தேகம் வெளுத்தல், மயிர்முனைகளெல்லாம் சிவத்தல், அற்பநித்திரை, மந்தம், உளைச்சல் என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### பித்தசோபை

மயிர்முனைகள் மஞ்சளித்தல், சீதளவஸ்துக்களில் இச்சை, இருமல், எரிச்சல், இளைப்பு, தலைவலி, துர்ப்பலம், மயக்கம், வியர்வை, கண் புருவம் நாசித்தண்டு ஆகிய இவ்விடங்களில் நிறபேதம் என்னும் இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### சிலேத்துமசோபை

தேகத்தில்தினவு, மயிர்க்கால்களில் வெளுப்பு, சரீரம்முழுதும் சுறசுறப்பு, குளிர், நித்திரைபங்கம், விழியில் அனல்வீசல், குரல் நோதல், அதிகபேதி, மயக்கம், தேகத்தில் ரத்தம்சுறந்து வீங்கல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

### திரிதோஷசோபை

ஸ்திரிகள்மேல் கோபம், உடல் வீக்கம், சுரம், அதிசாரம், வயிற்றுக்கடுப்பு, ஆசனத்தில் கடுப்பு, அன்னதுவேஷம், கைகால்கள் துவளல், நடக்கையில் பெருமூச்சு, கிறுகிறுப்பு, வாய்நீரூறல் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருக்கும்.

சிலநூல்களில் இந்த சோபைரோகம் ஒன்பது விதமாக கூறப்பட்டிருக்கின்றது. அவை முற்கூறப்பட்ட நான்கோடு வாதபித்தசோபை, வாதசிலேத்துமசோபை, பித்தசிலேத்துமசோபை அபிகாதசோபை, விஷசோபை எனச்சேர்க்கப்பட் டிருக்கின்றன. இவைகளில் முதல்மூன்று முற்கூறப்பட்டுள்ள திரிதோஷ தொந்தங்களின் விசேடமாகும். மற்ற இரண்டும் முறையே காயப்படல், விஷம்தீண்டல் ஆகிய இவைகளின் தீங்கினால் உண்டாகும் குணவிசேடங்கள் கூறப்பட்டதாகும்.

### சோபைரோக அசாத்தியம்

உபத்திரவ மில்லாமல் வீக்கம்மாத்திரம் கண்டால் சாத்தியமாகும். சரீரத்தில் வீக்கமானது நெடுநாளாக தங்கிவிட்டாலும்புருஷர்களுக்கு முதல் முதல் பாதத்தில்கண்டு மேலேறினாலும், ஸ்திரி

களுக்கு முதலில் முகத்தில்கண்டுபின்னர் கீழ் இறங்கினாலும், இவ்விருதாரத்தார்க்கும் வயிறு, குதம், அல்குல், ஆண்குறி இவ்விடங்களில் வீக்கம் கண்டாலும், இவைகளுடன் வாந்தி சுரம் மேல்சுவாசம் பேதிகண்டாலும், வீக்கம்கண்டு வடிக்தபின்பு மறுவலும் பேதியும் சுரமும் கண்டு வீங்கினாலும் அசாத்தியம்

இந்தரோகமானது ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி டிராப்சி (Dropsy) நீரேற்றமென்பார்கள். இது சீரஸ்மெம்பிரேன் சவ்வுகளிலாவது அல்லது சருமத்துக்கடியிலிராநின்ற ஸெல்லுளர் டிஸ்யூ என்னும் சவ்வுகளிலாவது ரத்தநீர் சேர்ந்து ஊதலாகச்செய்யும். இங்ஙனம் செய்வித்த இடத்திற் கேற்றவாறு பெயரிட்டிருக்கின்றனர். அதாவது:-இந்தவீக்கம் முகத்தில்மாத்திர மிருந்தால் சோபைடிராப்சி (Dropsy) வயிற்றில் கண்டால் ஜலோதரம், மகோதரம், அண்டத்திலிருந்தால் நீர்அண்டம், கைகால்களில் ஓரிடத்தில் கண்டால்வீக்கம்,விஷப்பூச்சிகளின் கடியால் கண்டால் விஷசோபை, ஓரிடத்தில் வீக்கம்கண்டு மற்றோரிடத்திற்குப் பரவினால் ஆகந்துக சோபை, ரசகெந்தி பாஷாணம் அடி வெட்டுகாயம் முதலியவற்றாலுண்டான வீக்கத்திற்கு அபிகாதசோபை என்று கூறி யிருக்கின்றனர். ஆனால் இவ்விலம்பகத்தில் முகத்திலுண்டான வீக்கத்திற்கே சோபைரோகமென்றும் சிகிச்சையும் கூறப்பட்டிருக்கின்றன. மற்ற விஷயங்கள் தனித்தனிக் கூறப்படும்.

சிகிச்சை

||சலமஞ்சரி: வில்வாதிலேகியம், சிந்தாதிலேகியம், புடாசசெந்தூரம், சுயமக்கினிகுமாரன், அயகாந்தச்செந்தூரம், காந்தசெந்தூரம், அயகாந்தகல்கம், ||திரிபுவனசெந்தூரம், ||அயகற்பம், கரிசலாங்கண்ணிச்சூரணம் முதலியவற்றைக் கொண்டுநிவர்த்திக்கவேண்டும்.

---

## மகோதரரோக இலம்பகம்.

## (DROPSY OF BELLY OR ASCITES)

### மகோதரரோக பூர்வரூபம்

பசியின்மை, உணவுவெகுநேரம் பொருத்து தாகத்தைக்கொடுத்து ஜீரணிக்குதல், இதனால் ஜீரணமானதும் ஆகாததும் அறியமுடியாமை, அடிக்கடி பலங்குன்றுதல், சொற்பவேலை செய்திடினும்

பெருமூச்சு வாங்கல், பெரும்மலச்சேர்க்கையால் சிலவேளை பேதி, பாதங்களில்சிறிது வீக்கம் உண்டாதல், கீழ்வயிற்றுச் சந்திகளில் வலி, வயிற்றில் சாதாரணமாயுள்ள மடிப்புகள் மறைதல், அதன் மீது கொடிகொடியாக இரத்தக்குழாய்கள் படர்ந்துதோற்றுதல் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழைய பூர்வகுணங்களாகப் பெற்றிருக்கும்.

இந்த மகோதரரோகத்தை முப்பத்திரண்டு விதமாகப் பிரித்திருக்கின்றனர்.

### 1. வாதமகோதரம்

தேகம் வெளுத்தல், வற்றல், துர்ப்பலம், அன்னதுவேஷம், வயிற்றிரைச்சல், உப்பசம், முகக்களை மாறல், புளித்தேப்பம், அடிவயிற்றில் வீக்கம், மனக்கிலேசம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 2. பித்தமகோதரம்

கண்களில் காசாம்பூவர்ணம், சுரம், தாகம், அதிசாரம், தேக அழற்சி, வியர்வை, மனச்சலிப்பு, சருமம் சுறசுறப்பு, உண்டவுணவு செறியாமல் அப்படியே பேதியாதல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 3. சிலேத்துமமகோதரம்

உடல்நடுக்கம், அரோசிகம், நித்திரையின்மை, குளிர், சுரம், அதிகசுவாசம், கோபம், வயிற்றுப்பசம், தேகம்வெளுத்தல், நீர் மலம் போவதில்கடுப்பு, இருமல், கோழை ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 4. வாதசிலேத்துமமகோதரம்

உடல்வெளுத்தல், கடுத்தல், வயிற்றின்மடிப்புத் தோன்றாவீக்கம், வயிற்றிலுள்ள நரம்புகள் புடைத்தல், துர்க்கந்தமானவாயு பரிதல், வயிற்றில் திடுக்கிட்டாற்போலிரைச்சல், மலபந்தம், பீஜவீக்கம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 5. பித்தசிலேத்துமமகோதரம்

நாபிமுதல் மார்புவரையில் பிதுங்கலான வீக்கம், வயிற்றில் வாயு ஸ்தம்பித்தல், மலசலக்கட்டு, மார்புநோய், கால்கைகள் வீக்கம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

6. தோந்தமகோதரம்

தேகநிறம் மஞ்சளித்தல், வாதநாடி அதட்டியாய் நடத்தல், கண்ணீர் வெளுத்து பஞ்சுநிறமாகக்காணல், தேகமெல்லாம் வீக்கம், கைகால்வற்றல், வயிறுவிம்மல், தலைசுற்றல், தியக்கம் ஆகிய இக் குணங்களை உடைத்தாயிருக்கும்.

7. கல்மகோதரம்

இருமல், இளைப்பு, தேகம் மஞ்சள்நிறமாக வீங்கல், மேல் வயிறு கல்லைப்போல் வீங்கல், ஆகாரம் செல்லாமை, முகம்கறுத்தல், நரம்புகளில் பசுமைநிறம் தோன்றல், மலசலச் சுருக்கம், முடிவில் தேகம் வெளுத்தல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

8. வில்மகோதரம்

வயிறானது வில்லைப்போல பிருத்தமாக இருத்தல், மேல்வயிற் றில் வலி, பீஜங்கள் வீக்கம், மலசலச்சுருக்கம், ஓபாமபக்கம், அதிக தாகம், மனக்கிலேசம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

9. வழுவைமகோதரம்

வயிற்றில் நீர்கோத்துக்கொண்டு தளதளவென்றிருத்தல், திமி ரோடு மரத்தல், வயிற்றில் ஆகாரம் உண்டதுபோல் மாமிசம் வள ரல், பசியின்றியிருத்தல், படுக்கமுடியாமல் தவிக்கல் ஆகிய இக் குணங்களை உடைத்தாயிருக்கும்.

10. நழுவைமகோதரம்

அடிவயிற்றில் கட்டி, அழுத்திப்பார்க்க நழுவுதல், மேல்வயி ற்றி லெரிச்சல், துர்ப்பலம், மேல்மூச்சு, நடைகொடாமை, தேகந்தள ரல், நெஞ்சுவறண்டு புண்போலாதல் ஆகிய இக்குணங்களை உடைத் தாயிருக்கும்.

11 நீராம்பல்மகோதரம்

நாவறளல், இருமல், அடிவயிறு கனத்தல், கண்கள் வெளிரல், புறங்கால்களில் வீக்கம், மூர்ச்சை, மயக்கம், மலந்தளர்ச்சி, முகம் வேறுபடல், கைகால்கள் முடக்கொண்டிருத்தல் ஆகிய இக் குணங்களை உடைத்தாயிருக்கும்.

12. ஊரும்பல்மகோதரம்

மேல்வயிறு பொருமல், மயக்கம், தியக்கம், உறக்கம், முகம் வியர்த்து வெளுத்தல். தேகம் கனகனத்து வற்றல், சிரசில் பளுவு,

இவைகளின் காரணத்தால் மனக்கிலேசம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

13. வெப்புப்பாவை மகோதரம்

தேகத்தில் வெப்பமிகுந்து வாய்வானது கீழ்தாக்கல், அப்போது கைப்பு புளிப்பு இவைகளில் வெறுப்பு, சரீரமெல்லாம் கல்போல வீங்கிக்கனத்தல், வயிற்றில் புறண்டெழும்பி விலாப்பக்கத்தில் வந்துசேருதல், நாவில் உப்புசுவையதிகரித்தல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்

14 குலைமுட்டிமகோதரம்

வயிற்றில் சிறுகுழந்தைப்போல் ஈரற்குலையை முட்டியிருத்தல், பசியின்மை, மலத்தீய்ச்சல், ஆசனச்சுருக்கம், தேகங்கறுத்தல், முகம் கால் கை இவைகளில் வீக்கம், மேல்மூச்சு, குரல்கம்மல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்

15. கீழ்கவிசைமகோதரம்

அடிவயிற்றில் தட்டையாக கட்டியுண்டாகி வயிற்றை உப்பச்செய்தல், மேல்வயிற்றில் வில்லைப்போல இசிவு உண்டாதல், சந்துகளில் குடைச்சல், மனச்சலிப்பு, பெருமூச்சு, வாய்பிதற்றல், சலமலச் சுருக்கம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

16. மேற்கவிசைமகோதரம்

மேல்வயிற்றில் தட்டையாக கட்டிக்காணல், தசைநரம்புச்சுருக்கம், மார்புதுடிப்பு, பெருமூச்சு, மாரடைப்பு, குத்தல், வுாய்குமட்டல், வாந்தி, அன்னதுவேஷம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

17. பக்கக்கவிசைமகோதரம்

கட்டியைப்போல விலாப்பக்கத்தில் தோன்றல், வயிறு இறுகியழுந்தல், அடிவயிற்றில் குமரல், தாகம், எரிச்சல், வயிறுபொருமல், புளிப்பேறி நெஞ்சில் எரிவு, மலசலச் சுருக்கம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

18. பழுக்கவிசைமகோதரம்

விலாவின் அடிப்பாகமாகிய பழுவெலும்பினிடத்தில் முளையைப்போல் பற்றல், வயிறு கனத்துவிம்மல், மேல்மூச்சு, உளைச்சல், உறக்கம், அன்னங்கொள்ளாமை, வாய்வாதிக்கம், வயிறுஊதல், திணறல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

19. பெருவயிற்றுமகோதரம்

தேகம்வற்றல், வயிற்றில் மந்தம், வயிற்றில் கல்லைப்போல் அழுத்தமான வீக்கம், வயிற்றில் நரம்புகள் புடைத்துக்காணல், மலச்சிக்கல், வயிறு ஊதல், மயக்கம், கிணற்றில் தூறெடுத்து சலம் சுரப்பதைப்போல் வயிற்றில் நீர்சுரத்தல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

20 சூல்மகோதரம்

ஸ்திரீகளுக்கு கருப்பத்தைப்போல வயிற்றில் தோன்றி அதிக உபத்திரவத்தைக் கொடுக்கும். அப்போது தேகவழற்சி, அன்னத் துவேஷம், சலத்தின்மேரில் இச்சை, கால் கைசந்துகளில் வீக்கம், சிறுசுரம், அரோசகம், தேகவுளைச்சல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

21 வல்லைமகோதரம்

தொப்புளுக்கு நடுமையத்தில் உள்ளங்கையளவு கட்டி ஆப் பிட்டாற்போலிருத்தல், அன்னதுவேஷம், வெந்நீரின்மே லிச்சை, கைகால் அசதி ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

22. விஷமகோதரம்

பீஜம் உட்பட தேகம்வீங்குதல், வெளுத்தல், மெலிதல், பீஜம் தளர்ந்து தொங்கல், கடுநடுத்தப்பேச்சு, தூக்கம், திமிர், நடுக்கம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

23 பாண்டுமகோதரம்

முதலில் தேகம்வாடி ஊதல், நடைகெடல், வயிற்றினடியும் புறங்காலும் வீங்குதல், முகக்களை மாறுபடல், மயிர்றுறக்கம், ரோமங்கள் செந்நிறமாதல், இரத்தக்குறைவு, முகம் ஊதல், மேல்மூச்சு, குணக்கேடு ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

24. சோபைமகோதரம்

அடிவயிறு குழைந்து உப்பல், மேல்வயிறு பிகுத்தம், பீஜம் கை கால் இவைகளில் வீக்கம், இருமல், மேல்மூச்சு, தாகம், விக்கல் தேகக்குளிர்ச்சி, மலசலச்சுருக்கம் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

25. காமாலைமகோதரம்

உடல் நடுக்கம், குளிர்ச்சி, முகம் மார்பு இவைகளில் வியர்வை, தேகம் உலரல், புறங்கால் வீக்கம், அடிவயிறு சுருக்கம், கோழை

யுடன் சுரம், நித்திரையின்மை, தலைவலி, தாகம், சலிப்பு ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 26. குன்மமகோதரம்

ஈரற்குலையைவலிக்கும், அன்னஞ் செரியாமல் வயிறு குமறல், வாந்தி, பேதி, விலா இடுப்பு இவைகளில் வீக்கம், கோசலம்போல் நீரிறங்கல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 27. உதரமகோதரம்

கண்களில் வறட்சியுடன் சிவப்பாதல், வயிற்றில் வாயுசேரல், சிறுநீர் கொஞ்சங்கொஞ்சமாக இறங்கல், பசியின்மை, வயிறுகனத்தல், மலச்சிக்கல், வயிறுமுதல் மார்புவரையில் வீக்கமேறல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்

### 28. கூர்மமகோதரம்

தேகம்வறட்சி, கண்சிவத்தல், வயிறுவிம்மல், வாதாதிக்கம், கண்கள் சுருங்கல், இருமல், இளைப்பு, வயிற்றில் ஆமையைப்போல் கட்டி, அன்னஞ்செல்லாமை, பலக்குறைவு, வயிற்றில் இரைச்சலோடு குமறல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 29. பீலிகைமகோதரம்

தேகத்தில் அதிக நுட்பமான பரிசம், மலசலம் சரியாகப் போதல் வாயு கீழ்நோக்குதலால் கீழ்பாரிசத்தில் கொஞ்சம் வீக்கம் காணல், ஆகாரம் அதிகம் வேண்டல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 30. சுரமகோதரம்

காலிலிருந்து வயிறு வரையில் வீக்கம், கணைக்காற் புறங்கால் முதல் வீக்கம் கண்டு மார்பு பிடரிவரையில் தொடரல், வயிறு பொருமலோடு வீக்கம், சுரம், அசதி, எரிச்சல், காற்றின்மேலிச்சை, ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 31. சலமகோதரம்

சடமெல்லாம் சலம்கோத்து கனத்தல், தேகநிறம் மஞ்சளித்தல், வயிற்றுப்பசம், தேகவழலை, ஆண்குறி சோர்வு, முதுகு வயிறு வீங்குதல், சித்தங்கலங்கல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 32. மாமிசமகோதரம்

வயிற்றில் மாமிசம் வளர்ந்து அடிவயிற்றில் கல்லைப்போல் இருத்தல், உடல் வற்றல், தாகம், வாய்குளறல், வாயு மேல்நோக்கல், மல

சலத்தில் மாமிசம்போல் காணல் ஆகிய இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### சாத்தியாசாத்தியம்

வாதமகோதரம், பித்தமகோதரம், வழுவைமகோதரம், நழுவை மகோதரம், நீரும்பல் மகோதரம், ஊரும்பல் மகோதரம், வெப்புப் பாவை மகோதரம், மேற்கவிசை மகோதரம், சூல்மகோதரம், விஷ மகோதரம், வல்லைமகோதரம், பாண்டுமகோதரம், சோபைமகோத ரம், காமாலை மகோதரம், உதரமகோதரம், கூர்மமகோதரம் ஆகவிப் பதினைறு ரோகங்களும் சாத்தியப்படும். இவையொழிந்த மற்றவை அசாத்தியமென்று சித்தவைத்தியர்கள் கூறுவர்.

இந்தரோகமானது ஆங்கிலேயமருத்துவர்கள் சித்தாந்தப்படி வயிற்றிலிருக்கின்ற சவ்வுக்குள் நீர் அதிகமாச் சேர்ந்துகொண்டு விம்மலுற்ருல் சலோதரமென்றும், ஈரல்கள் குண்டிக்காய் இருதயம் முதலிய உள்ளுறுப்புகளில் நீர் அதிகமாகச் சேர்ந்துகொண்டு விம்மலுற்ருல் மகோதரமென்றும் கூறுவர்.

### சிகிச்சை

சலோதாரிமாத்திரை, || சலமஞ்சரி, துமட்டிக்காய் மெழுகு, சித்தாதிலேகிபம், காரலவணபற்பம், சண்டமாருதச் செந்தூரம், சுயமக்கினிகுமாரன், கலிங்காதி எண்ணெய் முதலியவற்ருல் நிவர்த்தி செய்தல்வேண்டும்.

---

## விஷபாகரோக இலம்பகம்

(விஷப்பாண்டு)

### 1. வாதவிஷபாகம்

ஒருபக்கத்தில் வீங்கிவற்றுதல், தேகவறட்சி, உறக்கம், சரீரம் வெளுத்தல், தலைபாரம், மிடறுவீக்கம், பசியின்மை, தேகத்தளர்ச்சி, மலசல சிக்கல் ஆகிய இக்குணங்களோடு விளங்கும்.

### 2. பித்தவிஷபாகம்

தேகத்தில் திமிர், சுரம், சர்மத்தில் வெடிப்பு, கிரந்தி, சர்வாங்க வலி, மேல்மூச்சு, அசதி, அநித்திரை ஆகிய இக்குணங்களோடு விளங்கும்.

### 3. சிலேத்துமவிஷபாகம்

தேகத்தில் திமிர், அற்ப இருமல், சரீரம் வெளுத்தல், கோழை யுடன் பெருமூச்சு, குளிர்சுரம், வீக்கத்துடன் வெடித்தல், அழலை, தேனைப்போல் சிறுநீரிறங்கல் ஆகிய இக்குணங்களோடுவிளங்கும்.

### 4. திரிதோஷவிஷபாகம்

வாந்தி, மூர்ச்சை, தாகம், அடிக்கடி சிறுநீரிறங்கல், மேல்சுவா சம் விக்கல், மயக்கம், உறக்கம், தேகம் வெளுத்தல், அருசி அதிசா ரம் பிரமை, வாய் நீரூறல் ஆகிய இக்குணங்களோடு விளங்கும்.

### 5. அக்கினிவிஷபாகம்

வாதபித்தாதிக்கம், கோழையுடன் வாந்தி, இருமல், மூர்ச்சை, வாய்நீரொழுகல், வீக்கம், படுக்கையிற் பொருந்தாமல் புரளல், மல சலச் சிக்கல், பக்கநோவு ஆகிய இக்குணங்களோடு விளங்கும்

### 6. எரிச்சல்விஷபாகம்

எந்த இடத்தில் பாரமாகக் காணப்படுகின்றனவோ அவ்விடத் தில் இரத்தம் சொரிதல், மஞ்சள்நிறமான கோழை, மேல்சுவாசம், மாரடைப்பு, தேகத்தில் விரணம், குத்தல், குன்மக்கட்டிபோல் நெஞ்சிற்புரளல், அதிசாரம், வீக்கம் எரிச்சல் ஆகிய இக்குணங்க ளோடு விளங்கும்.

### 7. கந்தவிஷபாகம்

சுரம், மயக்கம், சோம்பல், சர்வாங்கம் கனத்தல், மூர்ச்சை, தலைவலி, தாகம், அதிகவார்த்தை, தேகம்குளிரல், வயிற்றில் குத் தல், கடுத்து சீதம்விழுதல், உடம்பில் பிணநாற்றம் வீசுதல் ஆகிய இக்குணங்களோடு விளங்கும்.

### 8. சந்நிவிஷபாகம்

கறுப்பாக மலங்கழிதல், தேகத்தில் விரணம், இரத்தம் சொரி தல், சுரம், மயக்கம், மேல்மூச்சு, கொள்ளவித்த நாற்றம்போல் தேகத்தில் வீசல், முகத்தில் வீக்கம், வியர்வை, அசதி, பிதற்றல் ஆகிய இக்குணங்களோடு விளங்கும்.

### சாத்தியாசாத்தியம்

வாதவிஷபாகம், பித்தவிஷபாகம், சிலேத்தும விஷபாகம்,எரிவு விஷபாகம் ஆகிய இந்நான்கும் சாத்தியம்; இவையொழிந்தமற்றவை அசாத்தியமென்பர்.

இந்த ரோகமானது செம்பின் களிம்பு, மீன்முள், நெல்வாலின்முள் முதலியவைகள் சேர்ந்த போஜனத்தை அருந்தலாலும், மழைசலம், காடி, முன்னாள் சமைத்துவைத்த பழையபதார்த்தம், செம்புபாத்திரங்களில் சமைத்தெடுத்த அன்னம் கறிகள், அழுகலானமாமிசம் முதலியவற்றைப் புசித்தலினாலும், நித்திய சையோகம் செய்வதினாலும் இரத்தத்தில் விஷமதிகரித்துப் பிறக்கின்றன. இது பெரும்பான்மை பாண்டுரோகத்தின் ஓர்பகுதியாக ஏற்படுவதினால் பாண்டு சோபை முதலிய ரோகத்திற்கேற்ற சிகிச்சையே பொருத்தமானது.

---

## கிராணிரோக இலம்பகம்
## (CHRONIC DYSENTERY OR ENTERITIS)
### கிராணிரோக பூர்வரூபம்

உண்டவுணவு வெகுநேரம் பொறுத்து சீரணிக்குதல், புளியேப்பம், வாய்நீரூறல், முகக்களைமாறல், அரோசகம், உதடு உலரல், பிரமை, ஆயாசம், வயிறு விகுத்தலுடன் பொருமிக்கொள்ளல், வாந்தி, காதிரைச்சல், குடலிரைச்சல் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது. இந்தரோகத்தை அதிசாரம் விசூசி உட்பட இருபத்தைந்தாகப்பிரித்திருக்கின்றனர். அதன் விபரம் காண்க.

### 1. வாதக்கிராணி

நடுவயிற்றில் உப்பசம், அற்பதீபனம், தேகம் உலரல், மலம் சிதறலுடன் கறுத்து வெல்லப்பாகுபோல் பேதியர்தல், வயிற்றில் கட்டிகாணல் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 2. பித்தக்கிராணி

நடுவயிறு நோதல், பலவர்ணமாக பேதியாதல், உறக்கம், நாம்புகள் தளர்ச்சி, மலத்திலூன்கழிதல், உண்டமருந்து பேதியோடிறங்கல், உணர்ச்சியின்மை என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 3. சிலேத்துமகிராணி

அதிகநாங்கைபோடு தேகம்நாறல், வெளுப்பாக மலம்போதல், கைகால் தளர்ச்சியுடன் சூம்பல், தேகம் காய்தல், கண் சிவத்தல்,

நாசி நாவு இவைகள் வறட்சி, குடலைப்போலும் பாலைப்போலும் மலம்போதல், அறிவின்மை, அசதி, விக்கல் என்னும் இக்குணங் களை மேற்கொண்டிருக்கும்.

### 4. தோந்தகிராணி

காய்ச்சல், சமுத்திரத்தைப்போன்ற வயிற்றிரைச்சல், தலைவலி, குளிரோடு நடுக்கம், பாலைப்போல் அடிக்கடிக்கு கழிதல், வாயு படபடவெனப்பறிதல், தேகஎரிவு, தேகம் கறுத்தல், புறங்கால் வீக்கம் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 5. ஊஷ்ணவாயுகிராணி

மலம் இறுகி வயிற்றுப்பசம், இரைச்சல், அன்னஞ் செரியாமை, புளித்தேப்பம், வாய்நீரூறல், கைகால் அசதி, தேகங்கறுகி மெலிதல், பேதி என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 6. அந்தரவாயுகிராணி

உண்டவுடன் பேதியாதல், வாந்தி, அருசி, தாகம், தேகத் தளர்ச்சி, விலாவில் இசிவு, சரீரம் வெளுத்தல், விக்கல், செரியாமை என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 7. மூலவாயுகிராணி

அதிக இரைச்சலுடன் வயிற்றைப்புரட்டல், அடிவயிறு பொருமல், மலத்தீச்சல், மந்தம், அடித்தொடையில் குத்தல், சரீரந்துவளல், குதத்தில் முளையைப்போல் காணல் என்னும் இக் குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 8. துன்மக்கிராணி

தலைபாரம், அதிஉறக்கம், கண்களில் பீளைசாரல், வயிற்றில் குத்தல், வியர்வை, தலைநடுக்கம், எரிச்சல், உழலை, வயிறு பொருமி பேதியாதல்; சிலவேளை ஒருபுறத்தில் இரைச்சல் என்னும் இக்கு ணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 9. கருப்பக்கிராணி

பேதி, கடுப்பு, கை கால் வற்றுதலுடன் ஓய்ச்சல், கண்களில் மஞ்சள்நிறம், பலநிறமாகக் கழிதல், அதிகதாகம், வாந்தி, உழலை என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருந்து பிரசவித்தபின் ரோகம் சாந்தப்படும். இது ஸ்ரீகளுக்குமாத்திரம் காணும்.

## 10. ஒட்டுக்கிராணி

படுக்கையே இதமாகத்தோற்றல், இளைப்பு, வயிற்றில் அதிக நோவு, மார்பிலும் விலாவிலும் முதுகிலும் வலித்தல், மலமானது ஒரே தடவையாக இறங்காமல் துட்டிடைதுட்டிடையாகக் கழிதல், தொப்புள் வளையம்போற் சுருங்குதல் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

## 11. சங்கரகிராணி

வயிறுபொருமல், செரியாக்கழிச்சல், அபானத்தில் எந்நேரமும்சுடுகையுடன் நனைதல், குறுவியர்வை, உக்கிரமானசுரம், வாந்தி, நெஞ்சிற் கபாதிக்கம், மனக்கிலேசம், கண்கள்சரிதல் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

## 12. வாதஅதிசாரம்

டையரியா (Diarrhoea)

வயிற்றிற் பொருமலுடன் நோவு, சூலைரோகத்தைப்போல வாயு உபரிகாணல், சிறுநீர் சுருக்கம், உண்டவுணவு சரிவர சீரணிக்காமல் அரைகுறையாகப் பேதியாதல், மஞ்சள் நிறமாகவும், கறுப்பு நிறமாகவும் துர்க்கந்தத்துடன் பேதியாதல் நெஞ்சிற்புளித்தேப்பம் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

## 13. பித்தஅதிசாரம்

மலமானது அதிகவறண்டு நுரைநுரையாகப் பேதியாதல், வாதாதிக்கம், உடம்பு கை கால் இவைகளில் வீக்கம், அதிக காங்கை, தேகம் வெளிறல், தலைவலி, வாந்தி, வயிற்றுவலி என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

## 14. சிலேத்துமவதிசாரம்

நுரைநுரையாக வயிற்றுவலியுடன் பேதியாதல், அடிவயிறு வலித்தல், அருசி, இருமல், சுவாசம், மயிர்க்கூச்சம், ஆசனம் கடுத்தல், தேகத்தில் தினவு, கபாதிக்கம் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

## 15. திரிதோஷவதிசாரம்

தேகத்தினுட்புறத்தில் எரிச்சல், வெளிப்புறத்தில் குளிர்ச்சி, விக்கல்—வாந்தி, இருமலுடன் சுவாசம், வயிறு இரைச்சலோடு பொருமல், வயிற்றுவலி, மலத்தில் இரத்தம் சீதம்காணல், நித்திரை

யின்மை, உடல்நடுக்கம், குத்தல், உணர்ச்சியின்மை என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 16. சுரஅதிசாரம்

சுரம், மூர்ச்சை, பிரலாபம், அடித்தொடையும் கீல்களிலும் வலி, தாகம், கடுப்பு, சரீரங்காந்தல், நீரடைப்பு, உஷ்ணம், இருமல், பேதி என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 17. சந்நிபாதாதிசாரம்

அதிக சுரம், சுவாசம், இருமல், விக்கல், நாவறட்சி, பலவர்ணமானபேதி, தேகம் திமிருடன் மரத்தல், வயிற்றுவலி, அடிக்கடிக்கு மயக்கம், தேகமெல்லாம் குளிர்ச்சிபெறல் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 18. தோஷாதிசாரம்

உட்கொண்ட சலமானது செல்லவேண்டிய மார்க்கம் தப்பி நரம்புத்துவாரங்களில் விழுந்து அந்த நரம்புகளை பழுகப்பண்ணி அபானவாயுவோடு கூடி மலப்பைக்குள் புகுந்து மூலாக்கினிக்குக் கீழே பொருந்திய அசனத்தை செரிக்கவொட்டாது அப்போது வயிறு இரைந்து பேதியாகும் குணத்தை மேற்கொண்டிருக்கும்.

### 19. விதூமாசீரணம்

உண்ட அன்னம் வாந்தியாகுதல், புளித்த ஏப்பம், வயிற்றுப் பசம், பேதி, முகம் கறுத்தல், தேகம்வாடல், மயக்கம், முன்பின் தெரியாமை, மிருவேதனை, படுக்கையிற் பொருந்தாமை,* அதிக தாகம் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 20. தூமாசீரணம்

அசீரணத்தோடு புளித்தேப்பம், உண்ட வஸ்துக்கள் தக்காமல் அப்படியே வாந்தியாகுதல், உதடும் நாவும் வறளல், சரீரம் முழுதும் எரிச்சல், அல்லித்தண்டையொத்த குளிர்ச்சி, ஒருவேளை கண்டத்தில் வியர்வை, சரீரம் வாடல் என்னும் இக்குணங்களைமேற்கொண்டிருக்கும்.

### 21. விஷ்டம்பாசீரணம்

அசீரணத்தோடு சரீரமெல்லாம் மிகுநோவு, அதிசயித்தியம், கோழை, சரீரமும் கண்ணும் வெளிறல், வெளுத்தவாந்தி, பொய்ப் பசி, அடிக்கடி நுரைநுரையாகப் பேதியாகுதல், இருமல், சுவாசம்,

துயரம், தலைபுரட்டல் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 22. இரதசேடாசீரணம்

மனம் பொறுக்கமுடியாமல் வாந்தியாகுதல், மயக்கம், மூர்ச்சை, நாசி கண் நாவு இவைகள் கறுத்தல், அன்னத்துவேஷம், தாகம், வெளுத்தும் கறுத்தும் பேதியாகுதல், கண்ணை மேலுருட்டிப்பார்த்தல், தேகம் உதறுதல் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 23. வாதவிசூசி

### காலரா (Cholera)

முதலில் வாதநாடி அதிகரித்தலினால் வயிற்றிரைச்சல், பேதி, தேகங்கறுத்தல், விழிதிறந்தபடியே யிருத்தல், மனக்கலக்கம், சுரம், குடல் குமிறலுடன் புரட்டல்என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 24. பித்தவிசூசி

பித்தநாடியானது பகல் முழுதும் ஆக்கிரமிப்பதினால், பேதி தேகம் சும்பல், மூர்ச்சை, விக்கல், பிதற்றல்,வாந்தி,மயக்கததுடன் அரட்டல்புரட்டல், பிரலாபம் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### 25. சிலேத்துமவிசூசி

பேதியினால் கையில் நாடிகள் விரைவில் அடங்குதல், குரக்குவலி, மேல்பார்வை, நடைகெடல், புரளல், சரீரம் வெளிறல் என்னும் இக்குணங்களை மேற்கொண்டிருக்கும்.

### சாத்தியாசாத்தியம்

இங்ஙனம் கூறப்பட்டுள்ள கிராணி இருபத்தைந்தில் வாதகிராணி ஆதியாக சங்கரகிராணி ஈறாயுள்ள பதினொன்றில் வாதகிராணி, பித்தகிராணி, உஷ்ணகிராணி, அந்தரவாயுகிராணி, மூலவாயுகிராணி, கருப்பக்கிராணி, ஓட்டுக்கிராணி இவைகள் சாத்தியமும் மற்றவை அசாத்தியமாம். வாதஅதிசாரம், ஆதியாக இரதசேடாசீரணம் ஈறாயுள்ள பதினொன்றில் பித்தஅதிசாரம் விதூமாசீரணம், சுரஅதிசாரம் இவைகள் சாத்தியமும் மற்றவை அசாத்தியமாம்

வாதவிசூசி முதல் சிலேத்துமவிசூசி ஈறாயுள்ள மூன்றும் அசாத்தியம். இந்நூலாசிரியர் விசூசி என்னும் பேதியை அசாத்திய மெனக் கூறியிருப்பினும் சிலநூல்களில் வாதவிசூசி ஒன்றே சாத்தியம், மற்றவை கஷ்டசாத்தியம் எனக் கூறப்பட்டிருக்கின்றன. எங்ஙனமாயினும், ரோகம் கண்டவுடன் ஏற்ற சிகிச்சை செய்வாராயின் எவ்விதத்திலும் பயனுளதென்றறிந்த சித்தாந்தம்.

ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி இவ்விலம்பகத்தில் கூறப்பட்டுள்ள இருபத்தைந்து வகையினுள் வாதக்கிராணியாதியாக சங்கரகிராணி ஈறாக உள்ள பதினொன்றை கிராணிக் டிஸென்ட்டரி (Chronic Dysentery) எனக்கூறுவர். இது முதலில் சீதபேதியைப்போல் கண்டு எளிதில் சிகிச்சைக்கு வசப்படாமல் வயிற்றிலுள்ள பெருங்குடல் மலக்குடல் ஆகிய இவைகளிலுள்ள சிலேத்தும சவ்வுகளில் கொதிப்பேறி விரணமுண்டாக்கும். இதற்கு ஏற்ற சிகிச்சை செய்யாவிடின் இவ்வியாதி பிரபலமாகிக் குடலில் துவாரம்விழுந்து அசாத்தியமாகும். அப்போது மாமிசம்கழுவிய சலத்தைப்போலும், கறுப்பு நிறமாகவும், சகிக்கமுடியாத துர்நாற்றத்தையுடையதாகவும் அடுத்தடுத்துப்போகும். இந்தவியாதிப் பிரபலமாவதற்குமுன்னரே உயர்தரமான அவிழ்தங்களைப் பிரயோகிப்பது சாலச்சிறந்தது.

சிகிச்சை

இலிங்க அன்னபேதி செந்தூரம், ||ஷட்குணசெந்தூரம், இலிங்கலவண செந்தூரம், படிகாரச்செந்தூரம், ஜாதிபலாதி சூரணம், கட்டுவாதி சூரணம், காடிகார ரசசெந்தூரம், அன்னபேதிசெந்தூரம், குடஜாவலேகியம், சிந்தாதி லேகியம், சுயமக்கினிகுமாரன் முதலியவற்றைக்கொண்டு நிவர்த்திசெய்தல் வேண்டும்.

வாதஅதிசாரமாதியாக இரதசேடாசீரணபேதி ஈறாக உள்ள பதினொன்றை (டையரியா Diarrhoea) என்று சொல்வர். இது ஆரம்பத்தில் மலம் சுபாவம் தப்பி அடிக்கடி சலரூபமாகவும், சீதங்கலந்ததாகவும், இரைச்சலோடு நுரைத்ததாகவும், குழம்பாகவும், மாவுகரைத்த வர்ணமாகவும், இன்னும் பலநிறமாகவும் பேதியாகும். அப்போது குமட்டல், நாக்கில் மாவுபடிதல், வாய்நாற்றம், வயிற்றிரைச்சல், வயிற்றுளைச்சல், புளியேப்பம் முக்கல் முதலிய இக்குணங்களை உண்டாக்கும். இந்த அதிசாரரோகத்தை ஆரம்பத்

தில் சரியானபடி அவிழ்தங்களைப் பிரயோகப் படுத்தாவிடின் குடல் களில் விரணமுண்டாகி கிராணியாக மாறுதல் அடையும். இதற்கு சிகிச்சை கிராணிரோகத்திற்குக் கூறப்பட்டுள்ள அவிழ்தங்களை யாகும்.

வாதவிசூசி முதல் சிலேத்தும விசூசி ஈருக உள்ள மூன்றை யும் (காலரா-Cholera) என்று கூறுவர். இது விஷக்காற்றின் சம் பந்தத்தால் ஆமாசய விகல்பமுடையார்க்கு எளிதில் தாக்கி இந்த ரோகத்தைப் பிறப்பிக்கும். இப்படி பிறப்பித்தவர்களுடைய மல சலம், எச்சில், வாந்தி இவைகளினின்று விஷமானது எங்கும் பரவி நல்ல திடகாத்திர முள்ளவர்களையும் பற்றும். அப்போது உண்டா கும் வாந்தியும் பேதியும் ஒருவிதமான அன்னம் வடித்த கஞ்சி சலம்போலிருக்கும். வயிற்றிலும் சதைகளிலும் வலிகண்டு பிடிவாகி விடும். சிறுநீர்சுத்தமாக இறங்காது. தாகம் பிரபலமாக இருக்கும். நாடியும் சுவாசநடையும் குறைந்து அதிக தளர்ச்சியுண்டாக்கி தேகம், நாக்கு, சுவாசம் இவைகள் வாழைத்தண்டைப்போல் சில் லிட்டுவிடும். விரல்கள் சிறுத்து வாயுதடு சரீரம் நீலநிறமாகிவிடும். கண்கள் குழிவிழும். முகமும் தேகமும்வாடும். சுவாசம் மெது வாகி நாடி அடங்கும். கடைசியில் இரத்தவோட்டம் நின்றுவிடும்.

இந்தரோகத்திற்கு உடனே சிகிச்சைசெய்தல் நன்று. ஒருக் கால் காலதாமசமாயினும் கூடியவரையிலும் அடியில் கூறப்பட் டுள்ள அவிழ்தங்களைக் கொடுத்துவரின் நிவர்த்தியாகும். இந்த வியாதிகண்ட மூன்றுமணி நேரத்திற்குள்ளாகச் செய்தலே உத்தம மெனச் சிலபண்டிதர்கள் கூறுவர்.

|| அஷ்டாங்க திராவகம், காடிக்கார ரசசெந்தூரம், வீரரச செந்தூரம், * விஷபேதி சங்காரணி (மாத்திரை) || விஷபேதி சங்கா ரணி (மெழுகு), || கற்பூராதிமெழுகு, || விஷபேதி சஞ்சீவி, என்னும் அவிழ்தங்களினல் நிவர்த்திக்கவேண்டும்.

---

# மூலரோக இலம்பகம்
# (PILES)
## மூலரோக பூர்வரூபம்

மூலமானது, அக்கினிமந்தம், மலபந்தம், அடித்தொடைச் சதையிலும் கணுக்கால் கண்டச்சதையிலும் அதிகநோவு, ஆயாசம், தேகமெலிவு, கண் அதைப்பு, பேதி அல்லது மலக்கட்டு, ஆசனத்தில் மிகுநோவு, அபானவாயு பறிதல் என்னும் இக்குணங்களோடு அவ்வாயு எந்நேரமும் நாபிக்குக் கீழ்வயிற்றில் சஞ்சரிப்பதினால் வயிற்றில் ஒருவிதமான சத்தத்தையும் நோவையும் உண்டாக்கிக் கொஞ்சங்கொஞ்சமாக மலம் பிரயாசையுடன் வெளிப்படும். அப்போது குடலிலும் ஆசனத்திலும் இரைச்சல் காண்பதுண்டு. இன்னும் அவ்வாயுவானது மேல்நோக்கின் இளைப்பு, ஏப்பம், மார்புதுடிப்பு, எக்காரியத்திலும் புத்திசெல்லாமை, சோம்பல், முகக்களை வேறுபடல், துர்ப்பலம் ஆகிய இவைகளுடன் கிராணி, தோஷம், பாண்டு, குன்மம், மகோதரம் முதலிய ரோகங்களுக்குண்டான தீய குணங்களையும் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கும். இந்த ரோகத்தை இருபத்தொன்றாகப் பிரித்திருக்கின்றனர்.

### 1. நீர்மூலம்

தொப்புளில் வலித்தல், கீழ்வயிற்றிலுப்பசம், மலத்தீச்சல், வாய் நீரூறல், அபானவாயு பறியும்போது நுரைபோல் வெளிகாணல், சுருக்காக மலம்வருவதைப்போல் காட்டி இறுகல், மலத்திற்குமுன் நீர்போல் கழிதல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 2. முளைமூலம்

ஆசனம் தடித்தலுடன் கடுப்பு, எரிச்சல், அடிவயிறு கல்லைப் போல் விம்மல், ஆசனத்தில் தினவு, மலச்சிக்கலோடு இரத்தம்பீறல், வயிற்றிலிரைச்சலோடு காற்றுப்பரிதல், தேககாங்கை, ஆசனத்தில் மஞ்சட்கிழங்கின் முளையைப்போல் தோற்றல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்

### 3. செண்டுமூலம்

ஆசனத்தில் கருணைக்கிழங்கின் முளையைப்போல் எழும்பி. வலித்தல், இரத்தமும் நீருமாகக் கசிதல், மலச்சிக்கலுடன் ஆசனஞ் சுருங்கல், வயிற்றிலிரைச்சல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 4. சிற்றுமூலம்

தேகத்தில் எரிச்சல், மயக்கம், இளைப்பு, வயிற்றில் குத்தல் இரைச்சல் இசிவு, ஆசனத்தில் பல சிறுமுளைகள், தேகம் வெளுத்தல், பசியின்மை என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 5. வரள்மூலம்

மலம் இறுகலுடன் இரத்தம் துளித்துளியாக வீழ்தல், தேகத்தில் உஷ்ணம் தணிதல், வீரியம்பேசி சண்டைக்கு இழுத்தல், முளை ஆசனத்திற்குள்ளே ஒடுங்கியிருத்தல், நாட்செல்ல செல்ல பலம் குன்றல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்

### 6. இரத்தமூலம்

தொப்புளில் வலித்தல், மலமிறங்கும்போது இரத்தம் கதிர் போல் பீறிடல், தேகம் வெளுத்தல், கைகால் அசதி, மார்புநோய், தலைநோய், மயக்கம், கண்கள் மஞ்சளித்தல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 7. சீழ்மூலம்

ஆசனம் கடுத்தலுடன் எரிச்சல், மலத்தில் சீழும் சலமும் விழுதல், மேனி வெளுத்தல், மஞ்சளித்தல், நடைகெடல், தேகமெலிவு, சிறுநீர் மஞ்சளித்திறங்கல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 8. ஆழிமூலம்

ஆசனத்தில் வள்ளிக்கிழங்கைப்போலத் திரண்டு ஓரே முளையாக இருத்தல், மலத்தோடு நீர் சீழ் இரத்தம் இவைகள் சொரிதல், மலச்சிக்கல், காரம் சிறிதுமிகின் ரோகமதிகரித்தல், துர்ப்பலம் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 9. தமரகமூலம்

ஆசனத்தில் உலக்கைப்பூண்போலக் தடித்து தாமரை மலர் போல விரிந்திருத்தல், கொஞ்சங்கொஞ்சமாக மலம்கழிதல், ஆசனத்தில் தினவு, இரத்தம் விழுதல், வயிறிரைந்து பேதியாகுதல், பசியின்மை, மேல்மூச்சு, அசதி என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

## 10. வாதமூலம்

ஆசனத்தில் கோவைப்பழம்போல் சிவந்திருத்தல், அதனில் கறுத்தநிறமான சிறுமுளைகள் பலதத்தோன்றல், அவ்விடத்தில் கடுப்பு, தினவு, குத்தல், எரிச்சல், திமிர், வயிற்றுநோய், மலச்சிக்கல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

## 11. பித்தமூலம்

தலைவலி, ஆசனத்தில் பருத்திக்கொட்டை நெல்லு இவைகளைப்போல முளைகள் தோன்றல், மலம் உருண்டை உருண்டையாகவேனும் அல்லது திரிதிரியாகவேனும் இரத்தத்துடன்வெளியாதல், ஆசனம் கடுத்தல், எரிச்சல், வியர்வை, ஆசனக்கடுப்பு, அற்பபலவீனம் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

## 12 சிலேத்துமமூலம்

ஆசனத்தில் வெண்மைநிறமான முளை, எந்நேரமும் தினவு, எரிச்சல்,கடுப்பு, சீழும் நீரும் கசிவு, கனத்தவலியுடன் மலம் இறங்கல், சிறுநீர் அதிக சூடாகப்போதல், குணபேதம், தாது நஷ்டம், இரத்தக்குறைவாய் தேகம் வெளுத்தல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

## 13. தோந்தமூலம்

ஆசனமானது கோழியின் மலாசயம்போல் ஓயாமல் சுருங்கி விரிதல், நடைகெடல், வயிற்றுப்பசம், வருத்தமுறக் கடுத்து பேதியாகுதல், வியர்வை, தாகம் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

## 14. வினைமூலம்

அன்னஞ் செறியாமை, புளியேப்பம், அடிவயிற்றில் குத்தல், கோபம்மிகுதல், நரம்புகள் இசிவு, ஆசனத்தில் மிகுந்தவேதனை என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

## 15. மேகமூலம்

ஆண்குறியில் வெள்ளைகாணல், ஆசனத்தில் இரத்தம் சொரிதல், சத்தத்தோடு மலங்கழிதல், நீர் எரிச்சல், தேகவலி, சிறுநீரினிப்பு என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

## 16. பவுத்திரமூலம்

ஆசனத்தில் கட்டிப்போற் றோன்றல், நீர் அடிக்கடி போதல் கைகால்கள் கனத்தல், குதம் குய்யம் இவையிரண்டும் கோழியின்

தசைப்போல அதிக சூடாக இருத்தல், ஆசனத்தைச்சுற்றி மாம் பூவைப்போல முளைகள் தோன்றல், கோவைப்பழம்போல் சிவந்திருத்தல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 17. கிரந்திமூலம்

ஆண்குறியில் புண்ணுதல், கைகால்களில் கடுப்பு, கனதி ஆசனத்திற்குள் விரணமாகி கொடிகொடியாக முளைத்தல், சீழ் இரத்தமும் சலமும் கசிதல், அக்கினிபோல் அனலுடன் எரிச்சல் மிகுதல், மலத்தீச்சல், ஆசனம் வெடிப்புற்று வெளித்தோன்றல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 18. குதமூலம்

ஆசனமானது மூங்கிலின் குருத்துப்போல கீழிறங்குதல், சீழும் ரத்தமும் சொரிதல் வயிறு பொருமல், கைகால் சந்துகளில் வீங்குதல், அடிக்கடி நாவறட்சி தாகம், இருதொடைவலி, அதிக கோபம் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 19. புறமூலம்

ஆசனத்தில் கடுப்புடன் எண்ணெய், சலம், போலக்கசிதலுடன் தினவும் திமிரும் உண்டாதல், தேகத்தில் சிரங்கு சொரி முதலியவை உண்டாதல், படுக்கையில் சுகமின்மை, பிணத்திற்கொப்பாக முகம் வேறுபடல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 20. சுருக்குமூலம்

ஆசனத்தை அதிகமாக சுருக்குக் கொண்டு பெருங்குடலில் வலியை யுண்டாக்குதல், ஆசனத்தில் தடிப்பு, இரத்தமும் தண்ணீருமாக சொட்டுதல், தேககாங்கை, சரீரம் வெளுத்தல், அசைவின்மை என்றும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### 21. சவ்வுமூலம்

ஆசனத்தைச்சுற்றி சவ்வுபோல் திரட்சியாகத் தோற்றுதல் சீழும் தண்ணீரும் கசிந்து கொண்டிருத்தல், வாயு அதிகரித்த போது அம்முளைகள் விம்மல் என்னும் அறிகுறியை முதன்மையாகப் பெற்றிருக்கும்.

### சாத்தியாசாத்தியம்

நீர்மூலம், முளைமூலம், வாள்மூலம், இரத்தமூலம், வாதமூலம், பித்தமூலம், மேகமூலம், பவுத்திரமூலம், கிரந்திமூலம், புறமூலம்,

சுருக்குமூலம், சவ்வுமூலம் ஆகிய இவைபன்னிரண்டும் சாத்தியம் மற்றவை அசாத்தியமெனக் கூறப்பட்டிருக்கின்றன.

இந்த ரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தபடி எக்டர்னல் பயில்ஸ் (External Piles) அதாவது வெளி மூலமென்றும் இன்டர்னல் பயில்ஸ் (Internal Piles) அதாவது உள்மூலமென்றும் பிலிடிங் பயில்ஸ் (Bleeding Piles) அதாவது இரத்தமூலமென்றும் மூன்றுவகையாகக் கூறுவர்.

இவைகளில் எக்ஸ்டர்னல் பயில்ஸ் என்னும் வெளிமூலமானது ஆசனத்தின் ஓரமாக இருக்கும் நாடி நாளங்கள்பெருத்து கட்டியாகவேனும் நீண்டமேடாகவேனும் வெளிதோற்றுதலாம்.

இன்டர்னல் பயில்ஸ் என்னும் உள்மூலமானது மலவாயலின் உட்புறத்திலுள்ள நாடிநாளங்கள் பெருத்து நீண்டமுளையாக உள்ளடங்கி யிருத்தலாம்.

பீலிடிங்பயில்ஸ் என்னும் இரத்தமூலமானது மலமிறங்கும் போது உள்மூலமுளையிலிருந்து இரத்தம் பீறிடுதலாம்.

இங்கு வரையப்பட்டுள்ள மூன்றுவிதமான மூலரோகத்தினுள் ஒவ்வொன்றையும் இரண்டுபிரிவாகக் கூறுவர். அதாவது மூலத்தின் பெருக்கத்திற்கு ஏற்றவாறு மலமிறங்கும்போது சங்கடமும் வேதனையும் இல்லாமலிருக்கின்றதோ அதனை இன்டோலென்ட் என்றும், எந்தரோகத்தில் எரிச்சல், குத்தல்நமைச்சல், ஊடைப்பு வேதனை இவைகளை உண்டாக்கின்றதோ அதனை இன்பிளேமட் என்றும் கூறுவர்.

சிகிச்சை

குடஜாவ லேகியம், மூலநிவாரண லேகியம், காராமைலேகியம், நாகபற்பம் முதலிய அவிழ்தங்களைக்கொண்டு நிவர்த்திக்கவேண்டும். ஆசனத்தில் முளைபெருத்து வெளிதள்ளிவிடினும் அல்லது உபத்திரவம் மேலிடினும் எச்ச இலம்பகத்தில் கூறப்பட்டுள்ள மூல முளைப்புகை ஒத்தடம் முதலியவற்றைக்கொண்டு நிவர்த்தி செய்க.

# சயரோக இலம்பகம்.

# (CONSUMPTION OR PHTHISIS)

## சயரோக பூர்வரூபம்

சயரோகமானது, பீனிசம், இருமல், வாய்நீரூறல், வாயினிப்பு, மந்தாக்கினி, தேகம் இளைத்தல், அதிகபோசனம், இன்பமான பொருளை வெறுத்தல், அன்னபானாதிகளில் அசுத்தமானப் பண்டம் எதுவோ இருப்பதைப்போலெண்ணல், அதிரல், வாந்தி, அரோசகம், போதுமானவரை புசித்தாலும் துர்ப்பலம், கையைத் திருப்பித்திருப்பிப் பார்த்தல், முன்கால் வீக்கம், கண்கள் வெளிறல், இரண்டு கைகளும் இளைத்தல், தனது தேகம் நாளுக்குநாள் இளைக்கின்றதே என்று திடுக்கிடல், ஆரம்பத்தில் மாதர் மாமிசம் மத்திய பானம் இவைகளில் இச்சை, கோழையில் அசங்கிதமின்மை, முகம் மறைய முக்காடிட்டுகொள்வதி லிச்சை, நகமும் மயிரும் விரைவில் வளருதல் ஆகிய இக்குணங்களோடு, நித்திரையில் ஓணான் பாம்பு குரங்கு நரி நாய் பக்ஷி இவைகளினால் ஏதோ ஒருவேதனை உண்டானதாகவும், மயிர் எலும்பு உமி சாம்பல் இந்த குவியல்களின் மேல் தான் ஏறினதாகவும் நாடு தேசங்கள் பாழானதாகவும், ஏரி குளங்கள் வற்றினதாகவும், நட்சத்திரம் மலைகள் கீழே மோதியதாகவும் கனவுகளைகாணல் என்னுமிவைகளை தனக்குப் பழைய ரூபமாகப் பெற்றுள்ளன.

இந்த சயரோகம் பன்னிரண்டு விதமாகக் கூறப்பட்டிருக்கிறது.

### 1. பிர்மசயம்

தேகம் இளைத்தல், இருமல், கண்கலங்கல், கோழையின் மிகுதியால் இழுப்பு, விடாசுரம், அரோசகம், வாந்தி ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்

### 2. சத்திரியசயம்

சுரம், தலைவலி, நெஞ்சில்வலி, மிகுதியான மஞ்சட்கோழை, தேகவலி, இருமல், வாந்தி ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

### 3. வைசியசயம்

கைகாலோய்ச்சல், வெயில் மிதந்தபோது வியர்த்தல், காய்தல், இருமலில் கோழை விழுதல், தேகம் வெளுத்தல், அன்னத்துவேஷம் ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

4 சூத்திரசயம்

கண்களில் நீர்ததும்பல், அடிக்கடி இருமல், மிடறு புண்ணுதல், தேகம் வெளிறல், காலைநேரத்தில் குளிர், மயிர் கூச்சம், மயக்கம், தேக உளைச்சல், வியர்த்தல் ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

5. வாதசயம்

தலைவலி, விலாசந்து நடுமுதுகு கடுத்தல், வாந்தி, சுரம், தாகம், தோள் கை கால் முதலியவிடங்களில் துடிப்பு, கழுத்து நீண்டு காட்டல், அதிசாரம், இருமல், வெண்மைநிறமான கோழை, தேகக் குளிர்ச்சி ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

6. பித்தசயம்

விலாவின் என்புகள் கடுத்துச் சுருங்கும்படி இருமல், கோழை மிகுதியாக விழுதல், இரத்தவாந்தி, மூர்ச்சை, குரல்கம்மல், அசீரணம், தேகம் முதலில் வெளுத்துப்பின் மஞ்சளித்தல், சிறுநீர் மஞ்சள்வர்ணமாக இறங்குதல் ஆகிய இக்குணங்களை நிலைபெறச் செய்யும்.

7. சிலேத்துமசயம்

கோழையுடன் இருமல், வாந்தி, மூர்ச்சை, மந்தாக்கினி, பேதி, குரல்கம்மல், தேகவெளுப்பு, அசதி, நாசியில் நீர்சொரிதல், சுரம், சருமத்தில் சொரி ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

8. வாதபித்தசயம்

தேகமெல்லாம் கடுத்தல், சுரம், தாகம், கோழையுடன்வாந்தி, அருசி, இருமல், சுவாசம், தேகஎரிச்சல், மயக்கம், வாய்நீரூறல், சிறுநீர்கடுத்திறங்கல் ஆகிய இக்குணங்களை நிலைபெறச் செய்யும்.

9. வாதசிலேத்துமசயம்

தொண்டைகம்மல், தொனிபேதம், சுரம், மேல்சுவாசம், வாந்தி, இருமல், தேகமெங்கும் கடுத்தல், மிகுதியான கோழை தள்ளுதல், துர்ப்பலம், அக்கினிமந்தம், அரோசகம், தேகம் வெளுத்தல், கைகால்கள் சூம்பல் ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

10. பித்தசிலேத்துமசயம்

அதிகநித்திரை, அசதி, சுரம், கோழையுடன் வாந்தி, சிலசமயம் இரத்தவாந்தி, அதில் துர்நாற்றம், இருமல், பேதி, தலைசுற்றல்,

பிரமை, தாகம், உதிரத்தைப்போன்ற சிறுநீரிறங்கல் ஆகிய இக் குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

### 11. விகாரச்சயம்

காதில் இரைச்சல், கண்கள் வெளுத்தல், தேகம் கட்டுவிட்டு மாமிசம் தளரல், தேகத்தில் விரணம், மேல்மூச்சு, விலாப்பக்கத்தில் வலி, இரத்தத்துடன் வாந்தி, மூச்சு வாய் இவைகளில் துர்நாற்றம் ஆகிய இக்குணங்களை நிலைப்பெறச் செய்யும்.

### 12. தோந்தசயம்

தொனிபேதம், சுரம், இருமலுடன் கோழை, ரத்தவாந்தி, நடுக்கல், பேதி, துர்நாற்றம், மயக்கம், நடுநாவில் கறுப்புநிறமான வட்டம், தேகத்தில் கற்றாழை நாற்றம் ஆகிய இக்குணங்களை நிலை பெறச் செய்யும்.

### சாத்தியாசாத்தியம்

பிர்மசயம், சத்திரியசயம், வைசியசயம், பித்தசயம், சிலேத்துமசயம் ஆகிய இவ்வைந்தும் சாத்தியம் மற்றவை அசாத்தியமென்று கூறுவர்.

இந்தரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் கன்சம்ஷன் (Con sumption) அதாவது தேகத்தை தின்றுக்கொண்டு போகிற வியாதி என்று கூறுவர். இந்தவியாதி முதலில் ரத்தம்கெட்டு அதனில் கிரந்திகள் என்னும் சிறுவணுக்கள் உற்பத்தியாகி சுவாசப் பையின் கண்ணறைகளுக்கு மத்தியிலும், கண்ணறைகளிலும், சிறிய சுவாசக்குழல் கிளைகளிலும் அமைந்து இந்தகொடிய ரோகம் பிறக்கின்றது. அந்த கிரந்தி என்னும் அணுக்கள் நாளுக்குநாள் பெரியதாகி ஆரம்பத்தில் கடினமாகவும் சிலநாட் சென்றபின் அக்கிரந்திகளைச் சுற்றி நுரையீரலில் விரணப்படுத்தி உடைந்து மிருதுவாகி அவ்விடங்களில் குழிவிழும் அவ்விடத்திலுள்ள சீழ் சுவாசக்குழல் கிளைகளுக்குள் சென்று கபத்துடன்வெளிப்படும். அப்போது சுவாசம் சரிவர உள்வாங்கும் சக்தியற்று இங்குஉண்டாகும் பாதையால் சிறிது திணரல் உண்டாகும். இதுவே க்ஷய இருமல் என்பர். இப்படி நாளுக்குநாள் கிரந்திகள் பிரபலமடைந்து நுரைஈரல்களை கெடுப்பதுமன்றி பிராணரக்ஷணைக்குரிய தொழிலை நடத்தவிடாமல் கெடுத்துவரும். அந்தசமயத்தில் இருமல், ரத்தம் விழுதல், துர்ப்பலம், சீழைப்போன்ற கபம் விழுதல்,மாமிச பதார்த்தங்களின் மேல்

வெறுப்பு அஜீர்ணம், தீவரநாடி, சுரம், கஷ்ட சுவாசம், தேக இளைப்பு, வியர்வை, பேதி, குரல்கம்மல், மேல்மார்பு நோய், தேக உளைச்சல், முதலியவைகள் உண்டாகும். இந்த ரோகத்திற்கு ஆரம்பத்திலேயே அடியிற் கூறப்பட்டுள்ள சிகிச்சைகளைச் செய்துவரின் நன்மையைப்பயக்கும்.

சிகிச்சை

தாளகபற்பம், தாளகப்பதங்கம், க்ஷயகுலாந்தகன், * தபாஷீர் சூரணம், தூதுளைக்கிருதம், ஆடாதோடைக்கிருதம், கண்டங்கத்திரி கிருதம் முதலியவைகள் சிறந்ததாகும்.

---

## காசரோக இலம்பகம்.

## (ASTHMA)

காசரோக பூர்வரூபம்

காசரோகமானது, முதலில் உற்பத்தியாகையில் தொண்டையின் உட்புறத்தில் தினவும், முட்சொருகல்போ லிருத்தலையும், அரோசகத்தையும், அதோமுகமாகச் சஞ்சரிக்காநின்ற வாயு மேல்நோக்கி மார்பில்தாக்க கண்டத்தில் இருமலையும் உண்டாக்கிப் பின்னர் சிரசின் நரம்புகளில் வியாபித்து சரீரமெல்லாம் நறுக்கித் துவைத்ததுபோல் அதிக வேதனையையும் குரல்கம்மலையும் தனக்குப்பழையரூபமாகப் பெற்றிருக்கின்றன.

1. மந்தாரகாசம்

நாசியில் மாறுச்சலம் வடிதல், தும்மல், கபசேர்க்கையால் மேல்மூச்சு, பாம்பின் சீறலைப்போல இழுப்பின்தொனி, கண்டம் முகம் காது இவைகளில் வியர்த்தல், இருமலோடு கோழை, குரல் கம்மல் என்னும் இக்குறிகளைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

2 பட்சமந்தாரகாசம்

பிரதி வளர்பிறையிலும் இந்தரோகம் ஆரம்பித்து தேய்பிறைதோரும் சாந்தப்படும். அப்போது இருமல், இளைப்பு, கோழையின் மிகுதியால் குரல் கம்மல், வயிற்றுபொருமல், நாசியில் சலம் வடிதல் என்னும் இக்குறிகளைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

3. சுடர்காசம்

பிரசவித்த ஸ்திரீகட்கு நெருப்பனலையொத்த சுரம், அபாரமான தலைவலி, தேகஉளைச்சல், வயிற்றுப்பசம், பேதி, கடும்மூச்சு,

சகிக்கக்கூடாதவர்களாய் துடிதுடித்தல் என்னும் இக்குறிகளைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

4. வாதகாசம்

நெஞ்சியிற்றினவு, செவிகளிலிரைச்சல், அரோசகம், நாசியின் துவாரங்களில் மாமிசம் வளர்ந்து அதனால் படபடத்த கீழ்மூச்சு, கோழையுடன் இருமல் என்னும் இக்குறிகளைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

5. பித்தகாசம்

இருமல், புரட்டல், வாந்தி, இனிப்போடு உப்பு சுவை நாவிற் றோன்றல், தேகமெல்லாம் கடுப்பு, குரல்கம்மல், இருமலில் இரத்தம்விழுதல், தேகம் இளைத்தல், அன்னத்துவேஷம், புளியேப்பம், மயிர்க்கூச்சம், சுரம், சித்தம் கலங்கல் என்னும் இக்குணங்களைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

6 சுவாசகாசம்

அதிகமான கோழையுடன் இருமல், நாகப்பாம்பின் சீரலை யொத்த சுவாசத்தின் சத்தம், சீரணமின்மை, வயிற்றுப்பசம், நாசியில் அனலோடு வறட்சி, உடல்வற்றல், குரல்கம்மல், உண்ணாக்கில் வழவழப்பான நீரூறல் என்னும் இக்குணங்களைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

7. இரத்தகாசம்

குரல்கம்மல், இருமலில் உதிரம் கட்டிகட்டியாக விழுதல், விலாப்பக்கங்களில் வலி, வயிறுகடுத்து உளைச்சல், கைகாலோய்ச்சல், சிறுநீர் மஞ்சளாகவும் எரிச்சலாகவும் போதல், தேகம் வெளிறல் என்னும் இக்குணங்களைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

8 சிலேத்துமகாசம்

இருமல், இளைப்பு, ஈளை, மேல்மூச்சு, வயிற்றுமந்தம், தேகம் உருமாறல், சுரம், மயக்கம், தியக்கம், வாந்தி, சித்தம் கலங்கல், தேகக்கடுப்பு என்னும் இக்குணங்களைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

9. பீநிசகாசம்

இருமல், கோழைமிகுதல், இரைப்பு, வயிற்றுப்பசம், ஆகாரம் நித்திரையின்றி உடலுலறல், மலசலம் கறுத்த வர்ணமாகப்

போதல், கோழையில் மீன்கவிச்சு வீசுதல், வயிற்றை யிழுத்து வலித்தல் என்னும் இக்குணங்களைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

### 10. வாதபித்தகாசம்

காருதலில் இரத்தம்விழுதல், காதிலிரைச்சல், இருமல், அசதி, வாதாதிக்கம், முதுகந்தண்டு குடைச்சல், மேல்மூச்சு, மாரூட்டம், உடலூறுதல் என்னும் இக்குணங்களைத் தனக்கு உரிமையாகப்பெற்றிருக்கும்.

### 11. பித்தசிலேத்துமகாசம்

நெஞ்சியில்தினவு, தேகவலி, இருமல், குரல்கம்மல், சடமிளைத்தல், மயக்கம், பீர்க்கம்பூவைப்போல தேகம் மஞ்சளித்தல், மாதரிடத்திலன்பு என்னும் இக்குணங்களைத்தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

### 12. தோந்தகாசம்

குத்திகுத்தி யிருமல், இரத்தம் விழுதல், அனலோடு எரிச்சல் அருசி, பேதி, பாண்டு ரோகத்தைப்போல் தேகம்ஊதி படுக்கைக்கு இடங்கொடாமை, தேகக்கடுப்பு என்னும் இக்குணங்களைத் தனக்கு உரிமையாகப் பெற்றிருக்கும்.

### சாத்தியாசாத்தியம்

மந்தாரகாசம், பட்சமந்தார காசம், சுடர்காசம், பித்தகாசம், சுவாசகாசம், இரத்தகாசம், பீநிசகாசம் ஆகிய இவை ஏழும் சாத்தியம். வாதகாசம், சிலேத்துமகாசம், தொந்தகாசம் இவை மூன்றும் அசாத்தியம். வாதபித்தகாசம், பித்தசிலேத்துமகாசம் இவையிரண்டும் அசாத்திய வகுப்பில் எடுத்திருப்பினும் ஆரம்பத்தில் ஏற்ற சிகிச்சை செய்யின் சாத்தியமாகும் என்று கூறப்பட்டிருக்கின்றன.

இந்தரோகத்தை ஆங்கிலேயமருத்துவர்கள் ஆஸ்த்மா (Asthma) என்று கூறுவர். இதுமஜ்ஜதாது என்னும் ஸ்பரிச நரம்புகளில் காணும். அப்போது சுவாசக்குழற் கிளைகளிலுள்ள சிறிய கிளைகள் சுருக்கமடையும். இந்தரோகம் பெரும்பாலும் இராக்காலங்களில் 2-3மணிக்கு அயர்ந்த நித்திரையில் திடீரென்று மூச்சு அடைப்பாவது அல்லது மார்பில் பளுவாகக்கண்டாவது ரோகியை எழுப்பிவிடும். பின்னர் வரவரமூச்சு விடமுடியாமல் கஷ்டப்படுத்தும்.

நெஞ்சியில் குர்குர் என்ற இசிவு சத்தத்தையும் உண்டாக்கும். நாடிமெலிந்து நடக்கும். கண்கள் ஓரேநிலைபாக நிற்கும் சிலவேளை ஆயாசத்தினால் வியர்வைமிகும். முகம்வாடி கவலையுற்றிருக்க செய்யும் இன்னும் சொல்லப்புகின் மரண அவஸ்தையில் இருப்பவரைப் போல் தோற்றுவிக்கும் ஆனால் கெடுதிமாத்திரம் செய்யாது. இப்படியெல்லாம் காட்டி சிலநேரம் சென்றபின் இருமல் பிரபலமாகி இருமி இருமி கோழையை வெளியாக்கி சுகநிலைக்கு கொண்டுவரும். இந்தரோகத்தின் சுபாவம் இப்படி இருப்பினும் இத்தகைய கொடிய ஸ்திதியில் இருக்கவொட்டாமல் உடனே ஏற்றசிகிச்சை செய்து அக்காலத்தில் உண்டாகிய உபத்திரவங்களை ஒழித்து மீண்டும் வரவொட்டாமல் செய்வது பண்டிதன்கடமை. ஆகையால் அடியில் கூறப்பட்டுள்ள அவிழ்தங்களைக்கொண்டு நிவர்த்திசெய்யாராக.

சிகிச்சை

தாளகபற்பம், தாளகபதங்கம், ரஜிதபற்பம், மால்தேவிச்செந்தூரம், வீரபற்பம், படிகக்கற் செந்தூரம், காசகுலாந்தகன், தூதுளைக்கிருதம், ஆடாதோடைக்கிருதம், கண்டங்கத்திரிகிருதம், கலிங்காதி எண்ணெய் முதலிய அவிழ்தங்களைக்கொண்டு நிவர்த்திப்பதுடன் அரக்குத்தைலத்தால் ஸ்நானஞ் செய்விக்கவேண்டும்.

---

## உளமாந்தைரோக இலம்பகம்

### உளமாந்தைரோக பூர்வரூபம்

இது, க்ஷயரோகத்தில் ஓர் பிரிவு ஆதலால், அதற்குரிய சின்னங்களுடன் உட்புறத்தில் கட்டிகள் கண்டு பழுத்துடைந்து வாயின்வழி சீழ்வருவதை தனக்குப் பழைபரூபமாகப் பெற்றிருக்கும். இதனை நான்கு விதமாகப் பிரித்திருக்கின்றனர். அதன்விபரம் பின்வருமாறு.

### 1. வாதஉளமாந்தை

நெஞ்சியின் பழுவெலும்புகளின்பக்கம் விம்மல், நினைவழிதல் பெருத்ததொனியுடன் நொந்து இருமல், மிருதுவான சுரம், நெஞ்சியின்உட்புறத்தில் கட்டிகள் உண்டாகிப் பழுத்து உடைந்து வாயின் வழிசீழ்வருதல், சிலேத்மாதிக்கம், அன்னஞ்செரிக்காமல் வாந்தி, கைகால் அசதி என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 2. பித்தஉளமாந்தை

கீழ்வயிற்றில் திரண்டு கட்டியாகி விம்மிப் புண்போல் நோதல், தேகமெல்லாம் உளைச்சல், தலைவலி, சுரம், இருமலில் சீழ்வருதல், இரைப்பு, மிடறு புண்ணுகநோதல், மயக்கம், புரட்டல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 3. சிலேத்துமஉளமாந்தை

உடல் உருகித் தேகமெல்லாம் புண்போல் நோதல், வாயில் சீழ் வருதல், மனக்கிலேசம், வாந்தி, மயக்கம்,சிலேத்மாதிக்கம், நடுக்கல், பஞ்சுபோல் தேகம் வெளுத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 4. தோந்தஉளமாந்தை

தலைவலி, சுரம், இருமலுடன் கோழை,அன்னம் இறங்கவொட்டாமை,அசதி, உறக்கம், வாயில் துர்நாற்றத்துடன் சீழ்விழுதல், சர்வாங்கத்திலும் தினவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

#### சாத்தியாசாத்தியம்

சிலேத்தும உளமாந்தை வாத உளமாந்தை இவையிரண்டும் கனத்தமருந்துகளினுலுங்கூட வசப்படா. பித்தஉளமாந்தை பலவித சிகிச்சைகளினுல் வசப்படும். ஆனுல், தொந்த உளமாந்தையோ அசாத்தியா சாத்தியமெனக் கூறியிருக்கின்றனர்.

இந்தரோகம் க்ஷயரோகத்திலோர் பிரிவாதலால் அதற்குரிய சிகிச்சைகளை இதற்குப் பயன்படுமென் றறிக.

---

## பெரும்பாடுரோக இலம்பகம்
## (MENORRHAGIA)

### 1. வாதப்பெரும்பாடு

தலைவலி, முதுகு இடுப்பு இவைகளில் குடைச்சல், சரீரமெங்கும் வலித்தல், மாத விடாய் வந்தபோது கருப்பிணியைப்போல் வயிறுவிம்மல், உளைச்சல், மர்மஸ்தானத்தில் கருமைநிறமாகவும் துர்க்கந்தமாகவும் செந்நீர் சொரிதல் என்னும் இக்குறிகளை ஏற்றிருக்கும்.

### 2 பித்தப்பெரும்பாடு

அன்னஞ் செல்லவொட்டாது, மாத விடாய் வந்தபோது அழுகின்ற மஞ்சள் நிறமான நீர்பெருகல் சிலசமயம் தடைபட்டு

கட்டிகட்டியாக விழுதல், மர்மஸ்தானத்தில் அழலை, தேகம் வெளுத்தல், இளைத்தல், கால்கைகள் சோர்வடைதல், சரீரம் கடுத்தல் என்னும் இக்குறிகளை ஏற்றிருக்கும்.

3. சிலேத்துமபெரும்பாடு

மாத விடாய் வந்தபோது வெண்மை நிறமாகத்தோற்றல், அதனின்று துர்க்கந்தம் வீசுதல், தேகம் வெதுப்போடு காய்தல், சர்மம் வறட்சிகொண்டு சாம்பல் பூத்தல், இருமல், அடிக்கடிக்கு மபக்கம் என்னும் இக்குறிகளை ஏற்றிருக்கும்.

4 தோந்தப்பெரும்பாடு

மாத விடாய் வந்தபோது சிவப்பாகவும், கருப்பாகவும் உதிரம் வெளிகாணல், அதனில் தடைபட்டு உறைந்து கறுத்து கட்டி கட்டியாக வீழ்தல், துர்க்கந்தம் வீசல், வயிற்றுளைச்சல், தலைநடுக்கம், வாய்நீரூறல் என்னும் இக்குறிகளை ஏற்றிருக்கும்.

சாத்தியாசாத்தியம்

வாதப் பெரும்பாடு, பித்தப்பெரும்பாடு இவையிரண்டும் சாத்தியம். சிலேத்துமப்பெரும்பாடு தொந்தப்பெரும்பாடு இவைகளிரண்டும் அசாத்திய மென்று கூறப்படும்.

இந்தரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி ஸ்ரீகளின் கருப்பையிலிருந்து மாதமாதம் வெளிப்படுகிற இரத்தத்திற்கு பிளோ ஆப் மென்ஸஸ் (Flow of menses) என்பர். இது சரீரத்திலுள்ள இரத்தமானது கருப்பைக்கும் சினைப்பைக்கும் சென்று போஷித்து மாதத்திற்கு ஒருமுறை அளவுக்கு மேலுற்றதை வெளித்தள்ளுதலாம். இது கருப்பம் தரித்தபோது கருசம்ரக்ஷணைக்காகவும், பிரசவித்த பின்னர்க் குழந்தையின் சம்ரக்ஷணைக்காக பாலாக மாறுதல் அடையும். அக்காரணத்தை முன்னிட்டே அச்சமயங்களில் இந்த மாதவிலக்கம் காண்பதில்லை. அங்ஙனம் கருப்பமில்லாத ஸ்ரீகளுக்கு மாதாந்தரம் வருங்காலத்தில்வீரிய உஷ்ணமான அன்னபானாதிகள் உட்கொள்வதினாலும் இணைவிழைச்சு மிகுதியாகக் கொள்வதினாலும், மூத்திரக்குண்டிக்காய்வியாதிமண்ணீரல் வியாதி, வெட்டை முதலிய ரோகங்களினாலும் கருப்பைக்கு அழலைத்தாக்கி பெரும்பாடு என்னும் மிகுதியான ரத்தத்தை வெளியாக்கும். இதுவுமன்றி கிரமம் தப்பி நீடித்தும், அடுத்தடுத்தும் காண்பதுண்டு.

சிகிச்சை

இந்நூலில் கூறப்பட்டுள்ள பெரும்பாடு நிவாரணி என்னும் படியான அவிழ்தங்களி லொன்றைக் கொடுத்து நிவர்த்திக்கவேண்டும். இவைகளில் சாந்தப்படவில்லை என உணரின் || அயக்கருப்பு, ஷட்குணச் செந்தூரம் முதலியவற்றைக் கொடுக்க எவ்விதத்தினும் குணமாகும்.

---

## கல்லடைப்புரோக இலம்பகம்.
## (GRAVEL)

### 1. வாதகல்லடைப்பு

நாபியின் கீழ் சுருக்கெனக் குத்தல், மலசல சுருக்கம், ஆண் குறியில் வலி, படுக்கவிடாமல் அரட்டல் புரட்டல், வயிற்றுப்பசம், சிறுநீரில் மாமிசத்தைப்போல தோற்றல் என்னுங் குணங்களை யுண்டுபண்ணும்.

### 2. பித்தகல்லடைப்பு

சிறுநீரடைத்து அருகல், இரும்பு சிலாக்கைக் காய்ச்சிச்செருகியதைப் போல வருத்தமுறல், உதிரநிறமான கற்களுண்டாகி நீர் தாரையில் சிக்கல், அப்போது தாளக்கூடாதபடி கூக்குரலிடுதல் என்னுங் குணங்களை யுண்டுபண்ணும்.

### 3. சிலேத்துமகல்லடைப்பு

தொப்புளினடியில் வில்லைப்போ லிழுத்து வலித்தல், கைகால் சந்து இடுப்பு இவைகளில் குடைச்சலுடன் இசிவுகாணல். ஆண் குறியின் முனையில் கடுத்து வியர்த்தல், வெண்மை நிறமான சிறு கற்கள் நீரோடிறங்கல் என்னுங் குணங்களை யுண்டுபண்ணும்.

### 4. தொந்தக்கல்லடைப்பு

நீர்த்தாரையினடியில் அதிக வலியையும்வருத்தத்தையும் உண்டாக்குதல், அதிக கஷ்டத்துடன் நீரிறங்கல், அதில் சிறுமணல்களைப்போலத் தோன்றல், தினம் ஒன்றுக்கு சிரங்கையளவாக ஏற்படல் என்னுங் குணங்களை யுண்டுபண்ணும்.

சாத்தியாசாத்தியம்

வாதக்கல்லடைப்பு, பித்தக்கல்லடைப்பு, சிலேத்துமகல்லடைப்பு இம்மூன்றும் தங்க அவிழ்தங்களினால் நிவர்த்திசெய்யப்படும். தொந்தக் கல்லடைப்பு அசாத்தியமாம்.

இந்தரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி கிராவல் (Gravel) அணுதத்துவமான மணல்கள், கால்கிலஸ் (Calculus) கண்ணுக்குப் புலப்படும்படியான மணல்கள் ஸ்டோன் (Stone) பெரும்கற்கள் ஆகிய இவைகளாலுண்டான நீரடைப்பு ரோகமென்பர். சிறுநீரில் இவைகள் உண்டாகும்போது இடுப்பில் மிகுந்த வேதனையை உண்டாக்கும். இம்மணல்கள் அணுதத்துவமாக இருப்பின் மூத்திரக்குண்டிக்காயிலிருந்து அதன் குழலின்வழியாக கீழ் இறங்கி மூத்திரப்பையில் வந்து விழுந்துவிடும் அப்போது சகிக்கக்கூடாத வேதனையை உண்டாக்கும். அப்போது படும்பாட்டைச் சொல்லிமுடியாது. இடுப்பிலெடுத்தவலியானது அடிவயிறு மூத்திரப்பை இவைகளை கீழ்நோக்கி பீஜத்திற்கும் தொடைகளுக்கும் இறங்கும். அச்சமயம் பீஜங்கள்மேலுக்கிழுத்தல், மூத்திரத்தில் இரத்தம் கலந்திருத்தல், கைகால் சில்லிட்டு குளிர்தல் ஆகிய இக்குணங்களை உண்டாக்கும். இம்மணல்கள் மூத்திரப்பையில் இறங்கிவிட்டால் உடனே வேதனை தணியும். அது அணுதத்துவமாக இருப்பின் சிறுநீரோடு எளிதில் வெளிப்படும். பெரியதாக இருந்தால் மீண்டும் அடிவயிற்றின் பின்புறம் நோவு மூத்திரப்பையில் எரிச்சல் அடிக்கடி சிறுநீர் வருவதைப்போல காட்டி நீர் இறங்கும்போது அடைத்துக் கொள்ளல் என்னும் துர்க்குணங்களையெல்லாம் விளைவிக்கும்

சிகிச்சை

காரசூடசத்துபற்பம், || எஃநச் செந்தூரம் முதலியவற்றை கொண்டு நிவர்த்திக்கவும்.

---

## கிரிச்சரரோக இலம்பகம்.
## (RETENTION OF URINE)

### 1. வாதகிரிச்சரம்

மேகமானது பற்றியபோது கீழ்வயிற்றில் துர்மாமிசம் சிக்கி மறிப்பட்ட சுக்கிலத்தால் விருத்தியடைந்து ஸ்தம்பித்து ஆண்குறியில் நோவை யுண்டாக்கும். அடிக்கடி சிறுநீர் கொஞ்சங்கொஞ்சமாக இறங்கும்.

### 2. பித்தகிரிச்சரம்

கைகால்கள் அசதி, குதம் பீஜம் லிங்கம் இவைகள் கனத்தல், வாதாதிக்கத்தால் வயிற்றுப்பச முண்டாகி சிறுநீர் துவாரத்தில்

எரிச்சலையும் நோவையும் உண்டாக்கி மஞ்சள் சிவப்புவர்ணமாக நீரிறங்கச் செய்யும்.

### 3. சிலேத்துமகிரிச்சரம்

ஆண்குறி வலித்து வீங்கும், தேகம் வெளுக்கும், அலைச்சலுடன் அடிக்கடி வழுவழுத்து கட்டுண்டநீரை வெளிப்படச் செய்யும்.

### 4. மேககிரிச்சரம்

குதம் குய்யம் இவைகளில் அழலைக்கொண்டு அடிக்கடி துர்க்கந்தமுடைய வெள்ளைவிழும், நீரிறங்கிய பின் புருவெச்சத்தைப் போல சிறிது வெளிப்படும். அடிவயிற்றில் புழுக்கள் ஊர்வதைப் போல உணர்ச்சி யுண்டாகும். ஆண்குறி விம்மும்போது உடலாவிதத்தளிக்கும்.

### சாத்தியாசாத்தியம்

மேக கிரிச்சரம், பித்தகிரிச்சரம் இவையிரண்டும் சாத்தியம். வாதகிரிச்சரம் சிலேத்தும கிரிச்சரம் இவையிரண்டும் அசாத்தியமென்பர்.

இந்தரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி ரிடன்ஷன் ஆப் யூரின் (Retention of Urine) என்பர். இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு; அதாவது நீர்தாரையின் சவ்வுகள் சுருக்கமடைவதினாலும் நீர்தாரையில் துர்மாமிச வளர்ச்சியினாலும் உண்டாகின்றன. இந்தரோகம் பிரமேகம் கண்டவர்களுக்கே விசேஷமாகக் காண்கின்றன. அப்போது அடிக்கடி முக்கல், நீர் இறங்காமல் துடித்தல், மூத்திரப்பை கனத்தல், அடிவயிற்றில் உருண்டையாக கட்டிப்போல் தோற்றல், நீர்தாரையில் சுருக்கம். நீர் விடும்போது துளித்துளியாக இறங்கல், ஏக்கம், படபடத்த நாடி, தேககாங்கை முதலிய இக்குணங்களை உண்டாக்கும். இதற்கு உடனே கனத்த அவிழ்தங்களைக் கொடுத்து நீரைவெளிப்படுத்தவேண்டும். காலதாமசமாயின் மூத்திரப்பை பெருத்து வெடித்து வயிற்றுக்குள் நீர் இறங்கிவிடும்.

### சிகிச்சை

இதற்கு காரசூடசத்து பற்பம், கிலாசத்துபற்பம் * நீர்பேதிச்சூரணம் முதலியவைகள் தகுந்தபரிகாரம்.

---

# இருமல்ரோக இலம்பகம்.

## 1. மருந்தீடுஇருமல்

இது, மருந்தீட்டினால் சரீரம் இளைத்தல், இரைப்பு, அன்னத்துவேஷம், தேகமழலை, அடிக்கடி பயப்படுதல், பிரலாபித்தல், வறட்சியிருமல், மயக்கம், வாயானது புலால்நாற்றம் வீசல், நாவழவழத்தல், புத்தி யொன்றிலேயே செல்லல் ஆகிய இக்குணங்களை உண்டாக்கும்.

## 2. கஞ்சாஇருமல்

இது, கஞ்சா அபினி முதலிய பழக்கத்தால் உடல்வற்றல், சர்மத்தின் தேஜசு கெடல், அடிக்கடி இருமல், பிரமித்தல் ஆகிய இக்குணங்களை உண்டாக்கும்.

## 3. மதுஇருமல்

இது, மதுபானம் செய்வதால் நெஞ்சு உலர்தல், கண்டம் வற்றல், தேகத்தில் தினவு, அடிக்கடி இருமல், நாபியில் விரணம், ஈரல்கள் வீங்கிவெதும்பல், சிரசில் தாக்கிபிரமித்தல் ஆகிய இக்குணங்களை உண்டாக்கும்.

## 4. சுரஇருமல்

இது, சுரமானது தேகத்தில் தாக்கி நெடுநாளாகச் சுகப்படாமலிருப்பதினால் தேகமானது வற்றி கனத்த இருமல், அதிக சுவாசம், தேகம் வெளுத்தல், கண்களின் நரம்புகளில் பச்சைவர்ணந்தோற்றல், சர்மம் சுருக்கமடைதல் ஆகிய இக்குணங்களை உண்டாக்கும்

## 5. இரத்தஇருமல்

இது, போர்க்களத்தில் யுத்தம் செய்யும்போது அடிபட்டு உதிரம் சாய்வதை திருஷ்டித்தபோது மனதில் திகில்பட்டு சுவாசாசயம் இருதயம் செயல்களைத் தடுமாறச்செய்யும். அப்போது வறட்சியோடு இருமல், சடமெல்லாம் தீக்கொண்டெரித்தாற்போல இக்குணங்களை யுண்டாக்கும்.

### சாத்தியாசாத்தியம்

மருந்தீடு இருமல், மது இருமல், சுர இருமல் இவை மூன்றும் வசப்படும். கஞ்சா இருமல், இரத்த இருமல் இவையிரண்டும் அசாத்தியமென்று கூறியிருக்கின்றனர்.

இதற்குச் சிகிச்சை கபரோகத்திற்கு கூறப்பட்டதே யாகும்.

---

# விப்புருதிரோக இலம்பகம்.

# (ABSCESS)

## விப்புருதிரோக பூர்வரூபம்

விப்புருதி கட்டியானது முதல்முதல் தோல் ரத்தம் மாமிசம், மேதை, என்பு, சன்னநரம்பு, கபநரம்பு, இவைகளில் கொஞ்சங் கொஞ்சமாய் சேர்ந்து முடிவில் தடித்து நிலைபெற்று எழும்புகின்ற வீக்கத்தையே தனக்குப் பழைய ரூபமாகப் பெற்றிருக்கின்றன.

இது நாபிக்குமேல் உட்புறத்தில் காணும் கட்டியாக இருந்தால் பழுத்து உடைந்து அந்த சீழ் ரத்தம் சினைத்தண்ணீர் முதலியவைகள்வாயின் வழியாக வந்துவிழும்.

நாபிக்குகீழ் உட்புறத்தில் காணும் கட்டியாக இருந்துபழுத்து உடைந்து அந்த சீழ்ரத்தம் சினைத்தண்ணீர் முதலியவைகள் ஆசனத்தின வழியாக வெளியாகும். கீழ்நோக்குதலே சாத்திய லட்சணம். இந்தரோகத்தை ஏழுவிதமாகப் பிரித்திருக்கின்றனர். அதன் விபரம்.

### 1. கருப்பவிப்புருதி

வயிறு பொருமல், கீழ்வயிறு புண்ணாக நோதல், உடலுலரல், உதிரம் உறைந்து கீழ் வயிற்றில் புடைத்தல், கருப்பம்போல் வயிற்றிலுலாவுதல், மலம் தீய்ந்து ஆட்டுப்புழுக்கைப்போல் வெளியாதல், தலைவலி என்னும் இத்யாதி குணங்களைப் பெற்றிருக்கும்.

### 2. குவளைவிப்புருதி

இடுப்பு, முள்ளந்தண்டு, விலா, நெஞ்சு இவைகளை நடுக்கிச் சுரம் காய்தல், கோழையதிகரித்தலினால் இருமல், அடிவயிற்றில் நோயுண்டாகி கொடிகொடியாக உதிரம் சாய்தல், சரியாக நிமிரவொட்டாமல் செய்த லென்னும் இத்யாதி குணங்களைப் பெற்றிருக்கும்.

### 3. பித்தவிப்புருதி

தேகம் வெளுப்போடு சிவத்தல், தினவோடு வீங்கல், விரைவில் விருத்தியடைந்து உடைதல், அப்போது நடுக்கல், சித்தப்பிரமை, வயிற்றுப்பசம், ரத்தவாந்தி என்னும் இத்யாதி குணங்களைப் பெற்றிருக்கும்.

4. சந்துவிப்புருதி

வயிற்றின் பக்கத்தில் புத்தைப்போல் திரண்டெழும்புதல், உடைந்து சீழ் கசிதல், தேகமெங்கும் தோல் பொருக்களுண்டாகுதல், மாரடைப்பு, மயக்கம், உடல் தளர்ச்சி என்னும் இத்யாதி குணங்களைப் பெற்றிருக்கும்.

5. ஓடுவிப்புருதி

இரத்தம் ஓரிடத்திலேயே கட்டுதல், அவ்விடத்திய என்பிற் பற்றுதல், விரணமாகி வெளிகாணல், தேகமெல்லாம் நறுக்கித் துவைத்ததைப்போ லிருத்தல், தேகம் சிவந்து வெளுத்தல், தேகத்தில் எறும்பு ஊருவதைப்போன்ற வுணர்ச்சி என்னும் இத்யாதி குணங்களைப் பெற்றிருக்கும்.

6. வாதவிப்புருதி

ஈரலில் வீக்கம், வாய் கசத்தல், தேகவலி, பிரமை, குடலில் வேதனை, ரத்தக்கொதிப்பால் தேகக்கடுப்பு, வாய்நாற்றம், நாவுதடித்தல் என்னும் இத்யாதி குணங்களைப் பெற்றிருக்கும்.

7. சிலேத்துமவிப்புருதி

வாய் இனிப்போடு நீரூறல், உடல்வீக்கம், அரோசகம், சுரம், மலம்பச்சைவர்ணமாய்ப்போதல், உடல்வெளுத்துப் பின் கறுத்தல் என்னும் இத்யாதி குணங்களைப் பெற்றிருக்கும்.

சாத்தியாசாத்தியம்

கருப்பவிப்புருதி, குவளைவிப்புருதி, பித்தவிப்புருதி, ஓடுவிப்புருதி இவைநான்கும் கனத்த வழிநங்களால் வசப்படும். வாதவிப்புருதி சிலேத்துமவிப்புருதி இவையிரண்டும் அசாத்திய மெனக் கூறுவர்.

இந்த ரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி ஆப்ஸெஸ் (Abscess) என்பர். இதில் இரண்டுவிதமுண்டு அதாவது அக்கியூட் ஆப்ஸெஸ் (Acute Abscess) தீவிரவிப்புருதி இதுவிரைவில் சீழ்கொண்டுஉடையும். கிராணிக் ஆப்ஸெஸ்(Chronic Abscess) சாந்தவிப்புருதி இது நெடுநாளாக துர்நீர்கள் ஓரிடத்தில் சேர்ந்து உடைவதும், ஆறுவதும் சினைப்பதுமாக இருக்கும்.

தீவிர விப்புருதி காணும்போது சுரம் காணும். சீழ் கொண்ட பிறகு சாந்தப்படும். அப்போது அந்தவிடம் அதிகபளுவாகவும்

விரிந்து போவதைப்போலவும் தோற்றும். கட்டி மிருதுவாகி சிவந்த நிறமாக மாறுதலடையும். பின்னர் முகம்வைத்து உடையும். இந்தகட்டி தேகத்தின் உள் வெளி எல்லாப்பாகங்களிலும் காணக்கூடியதாயினும் ஸ்தனம், குதம், உள்ளங்கை, உள்ளங்கால் முதலிய ஸ்தானங்களில் காணுமேயாயின் புரைகொண்டு பரவும், முகம் காணாது வேதனையும் சுரமும் பிரபலமாகும். இக்கட்டிளினால் அவிடத்திலுள்ள என்புகளும் கெட்டு அசாத்தியமாக ஏற்படுவதுமுண்டு. இந்தரோகத்திற்கு முதலில் கட்டி உருவாவதற்கு முன்னரே தகுந்த அவிழ்தங்களைக் கொடுத்து வெளிக்கிளம்ப விடாமல் அடக்கி உடனே அதற்குக் காரணமாகிய இரத்தக்கெடுதலை நிவர்த்திக்கவேண்டும். ஒருகால் மீறிவந்து பழுத்துடையின் உள்ளுக்கு மருந்து கொடுத்து மேலுக்கு ரணசிகிச்சைசெய்து நிவர்த்திக்க வேண்டும். இதற்கு விப்புருதி எண்ணெய் அதிகச் சிறந்தது.

---

## கரப்பான்ரோக இலம்பகம்.

## (ERUPTION)

### 1. வாதக்கரப்பான்

தேகம் உஷ்ணமாதல், குடைச்சலோடு நோதல், விரல்களின் சந்துகளில் வெடித்துப் புண்ணாதல், தேகமுலரல் என்னும் இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 2 திமிர்வாதக்கரப்பான்

உட்கார்ந்தெழும்போது கைகால் இடுப்புசந்து இவைகளில் திமிருண்டாதல், ஆங்காங்கு வெடித்துப்புண்ணாதல், தேக உளைச்சல், ஊதல், தாகம் என்னும் இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 3. கண்டக்கரப்பான்

சிரசு கனத்தல், தலை காது மண்டை முதலியவை தடித்து நோதல், குளிரல், நாத்தடித்தல், தேகத்தில் சொரி, மயிர்க்கூச்சம், திடுக்கிடல், கண்கூசல், கண்டத்தில் முள்ளைச் செருகியதைப்போல கரகரத்தல் என்னும் இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 4. வறட்சிகரப்பான்

தேகம்வீங்கல், குத்தல், ஊதல், தினவெடுத்துசொரிந்து புண்ணாதல், அதில் புலால்நாற்றம் வீசல், வாய்பிதற்றல் என்னும் இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 5 கபாலகரப்பான்

தேகத்தில் தினவு, கண்களில் ஊறல், கண்டத்தில் கறகறப்பு, கண்களில் நீர் சொரிவதுடன் பீளைகட்டுதல், நாசியில் நீர்வடிதல் சிரசில் நமைச்சல், தும்மல், நெற்றிதுடிப்பு, அண்ணாக்கிலழற்சி என்னும் இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 6 பித்தக்கரப்பான்

தேகக்காங்கை, மயக்கம், சோர்தல், தேகத்தில் சொறியோடு மஞ்சளித்தல், அன்னதுவேஷம், பேனூருவதைப் போன்ற உணர்ச்சி என்னும் இக்குணங்களை உடைத்தாயிருக்கும்.

### 7. சிலேத்துமகரப்பான்

தேகம் வெளுத்தலுடன் விரணம், குரல்கம்மல், அதிகபேச்சு, ஈளை, இருமல், மேல்மூச்சு, காதிரைச்சல் என்னும் இக்குணங்களையுடைத்தாயிருக்கும்.

### சாத்தியாசாத்தியம்

வாதகரப்பான், பித்தகரப்பான், வறட்சிரப்பான், கபாலகரப்பான் இவைநான்கும் அவிழ்தங்களினல் வசப்படும்.

திமிர்வாதக் கரப்பான், கண்டக்கரப்பான், சிலேத்துமகரப்பான் இவைமூன்றும் அசாத்தியமெனக் கூறப்பட்டிருக்கின்றன.

இந்தரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி எரப்ஷன் ஆப்-தீ-ஸ்கின் (Eruption of the Skin) என்பர். இது இரத்தமானது கெட்டு கிருமிகளாக உற்பத்தியாகி சருமத்தில் பிறக்கும். அதனைப் பலவிதங்களாகக் கூறுவர். அதாவது.

ஸ்கால்ட் எட் (Scald-Head) கபால கரப்பான். இது மண்டையிலுண்டாகும் விரணம் அவ்விரணங்களிலுண்டாகும் சினைத்தண்ணீர் உறைந்து குவிந்த சிறு கிண்ணங்களாக பக்குகள் விழும். இதற்கு ஏற்றபரிகாரம் செய்யாவிடின் இந்தரோகம் சரீரத்திலும் பரவும்.

ஸ்கெபிஸ் (Scabies) சோரா (Psora) இட்ச் (Itch) என்னும்படியான சிரங்குகள் நமைச்சல் மிகுதியாகி வியர்க்குரு போல் கண்டு சொரியும்படி தூண்டும். அப்படிச் செய்யத்தலைப்பட்டால் தோலுரிந்து விரணமாகும் புரூரைகோ (Prurigo) கமட்டுச்சிரங்கு. இதுவும் வியர்க்குருகள்போல் காணப்படும் அதிக நமைச்சல் எடுக்கும். இரத்தம் பீறிடுகிறவரையில் சொரியும்படி

செய்யும். அப்படி இரத்தம் வெளிக்காணினும் ரோகிக்கு திருப்தியிராது.

ரிங்வொரம் (Ringworm) ஹெர்ப்பீஸ் (Herpes) என்னும்படியான படர்தாமரையானது தேகத்தில் பலரூபங்களாக சிவந்து நமைச்சல் எடுக்கும் நடுவில் வியர்க்குருகள்போலத் தோற்றித் தினவெடுக்கும். நாளுக்கு நாள் பரவும். இவைகட்கு அடியில் கூறப்பட்டுள்ள மேல்பூச்சு மருந்துகளினாலும் இரத்தசுத்திக்காகக்கூறப்பட்டுள்ள அவிழ்தங்களினாலும் நிவர்த்திக்கவேண்டும்.

### சிகிச்சை

கெந்தகசுடர்த்தைலம், மேகசஞ்சீவிவெண்ணெய், பிரமதண்டு எண்ணெய், பூவரசம்பட்டைஎண்ணெய், கரப்பான் எண்ணெய், கரப்பான்மேல்பூசும் தைலம், விரணத்தைலம் முதலியவைகளாம்

---

## சத்திரோக இலம்பகம்

## (VOMITTING)

### 1. அஜீர்ணசத்தி

இது, நாபிஸ்தானத்தில் சமானன் என்னும் வாயுவானது மீறி இடுப்பு, முதுகு முதலியவிடங்களில் பரவிநின்று கடினமான ஆகாரத்தை ஜீரணிக்கவொட்டாமல் மேல்நோக்கச் செய்யும்

### 2. வாதசத்தி

இது, இருதயஸ்தானத்தில் பிராணவாயுவானது நின்று தனக்குப் பொருத்தமில்லாத ஆகாரத்தை வெளித்தள்ளும். அது கறுப்பாகவும் வெளுப்பாகவும் தோன்றுதலுடன் தேகத்தில் துடிப்பு, தொண்டைகம்மல், இருமல், காசம், இளைப்பு ஆகிய இக்குறிகளையும் உண்டாக்கும்.

### 3 பித்தசத்தி

இது, மஞ்சள்நிறமாகவும், வேம்பின் நெய்வாசனையையொத்ததாகவும் வாந்திசெய்விக்கும். இன்னும் புகைச்சலோடு இருமல், கைகால் உஷ்ணம், எரிச்சல், நாவுப்புக்கரித்தல் என்னும் இக்குணங்களைஉண்டாக்கும்.

### 4. சிலேத்துமசத்தி

இது, இருமல், குளிர், இரைப்பு முதலியவற்றோடு வாந்தியையும் அதில் இனிப்புச்சுவையையும் அறிவிக்கும்.

5. தோந்தசத்தி

இது, வாந்தியில் மாமிசம் இரத்தம் முதலியவற்றின் கவிச்சு நாற்றத்தையும், தேகக்குடைச்சல், நாவறட்சி, சுரம், உடலிளைப்பு, முதலியவற்றைப் பெற்றிருக்கச்செய்யும்.

சாத்தியாசாத்தியம்

அஜீர்ணசத்தி, வாதசத்தி, பித்தசத்தி இவைமூன்றும் சாத்திய மாம். சிலேத்துமசத்தி, தொந்தசத்தி இவையிரண்டும் அசாத்திய மெனக் கூறப்பட்டிருக்கின்றன.

இந்தரோகத்தை ஆங்கிலேய மருத்துவர்கள் சித்தாந்தப்படி வாமிட்டிங் (Vomitting) வயனரோக மென்பர். இது தனிரோக மன்று; தீனிப்பையின் தொழில் மந்தப்பட்டதினாலாவது, சுரம், மூளை அதிர்ச்சி, அசதி, சந்நிமுதலிய ரோகங்களை முன்னிட்டாவது காணும். இன்னும் கருப்ப ஸ்ரீகளுக்கு ஆரம்பத்தில் சுபாவமாகக் காண்பதுண்டு. அக்காரணங்களை அறிந்து பரிகாரம்செய்து நிவர்த் திக்கவேண்டும்.

சிகிச்சை

இதற்குப்பரிகாரம் இந்நூலில் 42-43-வது பக்கங்களில் காண் பதுடன் மால்தேவிச்செந்தூரம் இஞ்சிலேகியம் வில்வாதிலேகியம் முதலியவைகள் சிறந்ததாம்.

---

## விக்கல்ரோக இலம்பகம்
## (HICCUP)

விக்கல்ரோக பேதம்

இதனை வாதவிக்கல், பித்தவிக்கல், சிலேத்துமவிக்கல், தொந்த விக்கல் என நான்குவிதமாகக் கூறுவர். இது நாகன் என்ற வாயு வானது அதிகரித்து செய்யும் தொழிலென்பர்.

1. வாதவிக்கல்

இது, வாயு அதிகரித்தலினால் நெஞ்சுகுழியினிடமிருந்து விக் கல் எழும்பும். அக்காலத்தில் கண்கள் துடித்தல், நாவில்துவர்ப்பான சுவை முதலியவைகளை உண்டாக்கும்.

2. பித்தவிக்கல்

இது, பித்தம் அதிகரித்தலினால் உண்டாகும் அப்போது கண் தேகம் இவைகளில் வெதுப்பு, கொட்டாவி, படபடத்த நாடி, அறிவு சிதறல், கோபம் முதலியவைகளை உண்டாக்கும்.

### 3. சிலேத்துமவிக்கல்

இது, சிலேத்துமம் அதிகரித்தலினால் உண்டாகும். அப்போது நெஞ்சியில்கோழைக்கட்டு, தேகம் வெளுத்தல், துடித்தல், சருமச் சுருக்கம் முதலியவைகளை உண்டாக்கும்.

### 4 தோந்தவிக்கல்

இது, முற்கூறப்பட்ட வாத பித்த சிலேத்தும விக்கல்களின் சின்னங்களுடன் அடிநாபியினின்று தேகமெல்லாம் அதிரும்படி அடுக்கடுக்காய் ஆழ்ந்தவிக்கல் உண்டாக்கும்.

### சாத்தியாசாத்தியம்

வாதவிக்கல், பித்தவிக்கல் இவையிரண்டும் சாத்தியப்படும் சிலேத்துமவிக்கல் ஆரம்பத்திலேயே தக்கசிகிச்சைசெய்யின் குணப்படும். தொந்தவிக்கல் அவிழ்தங்களுக்கு வசப்படாமல் உடனே மரணத்தை யுண்டாக்கும் என்று கூறுவர்.

இந்தரோகத்தை ஆங்கிலேயமருத்துவர்கள் இக்கப் (Hiccup) என்று கூறுவர். இது மார்புக்குள் விதானம் என்று சொல்லும்படியான ஈரல்தாங்கிக்கும் அன்னாசயத்திற்கும் காண்கிற இசிவு. இது அஜீர்ணத்தைமுன்னிட்டு காட்டும். இன்னும் விதானத்தில் வெப்பம் கண்டாலும் அல்லது விதானத்தை மேலுறுப்பாவது கீழ்உறுப்பாவது நெருக்கினாலும விக்கல்உண்டாகும். பிராணாந்தியகாலத்தில் உள்ளுறுப்புகள் விகல்பமடைந்து விக்கல்காணப்பெறின் அசாத்தியம். இந்த விக்கல் சில சந்தர்ப்பம் திடீலென்று அபக்குவ அன்னபானாதிகளினால் காணும். இது உடனே நிவர்த்தியாகும், பயமில்லை. ஏதேனும் ஒரு ரோகத்துடன் சம்பந்தப்பட்டுவரின் காலதாமதஞ் செய்யாமல் அடியில் கூறப்பட்டுள்ள சிகிச்சைகளைக் கொண்டு நிவர்த்திக்க வேண்டும்:—

### சிகிச்சை

இதற்குப்பரிகாரம் 42-43-வது பக்கத்தில் காண்பதுடன் மால் தேவிச்செந்தூரம், இஞ்சிலேகியம், வில்வாதிலேகியம் முதலியவைகள் சிறந்ததாகும்.

---

# பவுத்திரரோக இலம்பகம்

# (FISTULA)

## பவுத்திரரோக பேதம்

இது ஆசனப்பவுத்திரம், கொடிபவுத்திரம், மூலபவுத்திரம், பக்கபவுத்திரம், கிரந்திபவுத்திரம், மேகபவுத்திரம், ஆசனகண்டமாலை, சாகண்டமாலை என எட்டு விதப்படும்.

### 1. ஆசனப்பவுத்திரம்

முதலில் சுரம்கண்டு மாறுதல், தேகத்தில் தினவு, ஆசனத்தில் குத்தல், நடுவே கடுத்தல், கட்டியாகத்திரளல் பழுத்துடைந்து செந்நீரும் சீழ்ரத்தமும் ஒழுகச்செய்யும்.

### 2. கோடிப்பவுத்திரம்

முதலில் ஆசனத்தில் சடையைப்போல் கண்டுவீங்கி அடிகனக்கும், பழுத்து நண்நண்ணாக விட்டுடையும், புண்முகங்கள் பருத்திக் கொட்டைப்போல் தோற்றும், தேகம் வெளுக்கும், அதனின்று ஒழுகும் சீழும் மிகுந்த நாற்றத்தை வீசும்.

### 3. மூலப்பவுத்திரம்

ஆசனம் விருவிருத்து குதம் குய்யம் கடுக்கும், அவ்விடத்தி லுள்ள நரம்புகள் புடைத்து வீங்கும். அது கரணைக்கிழங்கு முளை யைப்போலத் தோற்றி பழுத்துடையும். அதினின்று புளித்த நீர் சதா ஒழுகும்.

### 4. பக்கபவுத்திரம்

பீஜ நடுவிலுள்ள நரம்புகளைப்பற்றி வலப்பக்கமாவது, இடப் பக்கமாவது வீங்கி துடிதுடிக்க பழுத்துடையும், அதில் செந்நீர் பாயும், நீர்தாரையில் வருத்தமுண்டாக்கும்.

### 5. கிரந்திபவுத்திரம்

ஆசனத்தில் கட்டிகண்டு பழுத்து நொந்து உடைந்து புண் ணாகும், இன்னும் ஆண்குறியில் விரணம், நீர்துளிதுளியாக இறங் கல், தேகத்தில் நாற்றம் வீசுதல் ஆகிய இக்குணங்களை உண்டாக் கும்.

### 6. மேகப்பவுத்திரம்

பீஜத்தில் நீர்கட்டும், பழுத்துடைந்து சீழ்காணும், பனிச்சலம் போல் நீர் கசியும், இன்னும் சுரம் குளிர் பேய் மயக்கம், அன்ன துவேஷம், கைகால்கள் எரிச்சல் முதலியவற்றை யுண்டாக்கும்.

### 7. ஆசனகண்டமாலை

ஆசனத்தைச்சுற்றி திட்டுதிட்டாகவீங்கி அம்புபோல் குத்தல், தினவெடுத்தல், சொறிந்தவுடன் எரிச்சல், சுரம் காய்தல், பழுத்துடைந்து சல்லடைக் கண்களைப்போலாகி மலசலம் ஒழுகல் ஆகிய இக்குணங்களை உண்டாக்கும்.

### 8. சரகண்டமாலை

கரணைக்கிழங்கு முளையைப்போல் தோற்றி ஆசனவழியை அடைத்துக்கொள்ளும். அவ்விடத்தில் நீர்சுரந்து வீங்கும். இது உடைந்து இரத்தம் சீழ் ஒழுகும். ஆசனத்தில் சரம்தொடுத்தாற் போலும் புத்துக்கண்களைப்போல வீங்கும். அதினின்று சீழ் அழுகல்நாற்றத்துடன் ஒழுகும்.

### சாத்தியாசாத்தியம்

ஆசனப்பவுத்திரம், பக்கப்பவுத்திரம், மூலப்பவுத்திரம், கிரந்திப்பவுத்திரம், மேகப்பவுத்திரம் ஆகிய இவ்வைந்தும் சாத்தியமாகும். சரகண்டமாலை, கொடிப்பவுத்திரம், ஆசனக்கண்டமாலை இம்மூன்றும் அசாத்தியமாகும்.

இந்த ரோகத்தை ஆங்கிலேயமருத்துவர்கள் சித்தாந்தப்படி ஆசனத்திலுண்டாகிறதை பிஸ்டியுலா-இன்-அனெ(Fistula in ano) என்று கூறுவர். ஆண்குறி பீஜம் முதலியவிடங்களில் உண்டாகிறதை பிஸ்டியுலா-இன்-பெரினியோ (Fistula in perineo)என்று கூறுவர். முதலில் ஆசனத்திலுண்டாகும் பவுத்திரத்தைப்பற்றி பேசும்போது அதனைமூன்று விதமாகப் பிரித்திருக்கின்றனர். அதாவது பர்பெக்ட (Perfect) எக்ஸ்டர்னல் பிளைண்டு (External Blind) இன்டர்னல் பிளைண்டு(Internal Blind) என்று பேதப்படும்.

1. பர்பெக்ட் பிஸ்டியுலா (Perfect Fistula) என்பது ஆசனத்தின் ஓரத்தில் கட்டியாகப்பிறந்து முகம்விட்டுடைந்து ஆசனக் குழலிற்குள் ஊடுருவப் புரையோடியிற்கும். அப்போது காற்றுப் பரிந்தாலும் மலங்கழிந்தாலும் இப்புரையோடிய விரணத்தின் வழியே சிறிது வெளியாகும்.

எக்ஸ்டர்னல் பிளைண்டு பிஸ்டியுலா (External Blind Fistula) என்பது ஆசனத்தில் ஓரத்தில் கட்டியாகப் பிறந்து முகம்விட்டுடையாமல் ஆசனக்குழலினுட்புறம்வரையில் ஊடுருவிப் புரையோடும்.

இன்டர்னல் பிளைண்டு பிஸ்டியுலா (Internal Blind Fistula) என்பது ஆனத்தின் ஓரத்தில் கட்டியாகப் பிறந்து ஆசனக்குழல் வரையிலும் ஊடுருவப் புரையோடி முகம்விட்டு உடைந்து கலக்காமல் இருக்கும். இனி ஆண்குறியிலுண்டாகும் பவுத்திரத்தைப்பற்றிக் கூறுவோம். இது நீர்தாரையில் விரணமாகி சீழ்கொண்டு அடைத்து நீரிறங்க விடாமற்செய்யும் அல்லது அவ்விரணம்; புரையோடி அடிப்புறத்தில் முகம்விட்டு உடைந்து விரணமாகும். அப்போது சிறுநீர் விடுங்காலத்தில் இத்துவாரத்தின் வழியாகவும் துளித்துளியாகச்சொட்டும். இதுவுமல்லாமல் இந்தரோகம் பிரபலமாய்விட்டால் 4-5 துவாரங்களும் உண்டாகும். இத்தகையே பீஜங்களிலும் உண்டாகும். இதற்கு அடியிற்கண்டவாறு சிகிச்சைசெய்து நிவர்த்திக்கவேண்டும்.

சிகிச்சை

பஞ்சபாஷாணச்செந்தூரம், சண்டமாருதச்செந்தூரம், நாக பற்பம், சூதபற்பம், முதலியவைகள் சிறந்ததாம்.

---

# கியாழ இலம்பகம்

## 1. வாதசுரக்கியாழம்

சரக்கு:—பற்பாடகம் மலைதாங்கிவேர்
சீந்தில்கொடி கண்டங்கத்தரிவேர்
முத்தக்காசு செம்முள்ளிவேர்
முன்னைவேர் சுக்கு

செய்பாகம்:—இக் கூறப்பட்ட எட்டு சரக்குகளையும் வகைக்குக் கழஞ்சு இரண்டாக நிறுத்திடித்து ஒரு மட்கடத்தில் போட்டு அதனுடன் அரைப்படி தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இருவேளை 3 நாள் கொடுக்க வாதசுரம் நிவர்த்தியாகும்.

## 2 வேறு

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—சிற்றரத்தை வராகனெடை | | ... | 2 |
| சதகுப்பை | ... | ... | 2 |
| சுக்கு | ... | ... | 2 |
| ஒருபிடி நொச்சியிலை | | ... | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட நான்கு சரக்குகளில் நொச்சியிலையை பொடியாக அரிந்தும் மற்றவைகளை நைய நறுக்கியும் ஓர் மட்கடத்தில்போட்டு அதனுடன் அரைப்படித்தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக் காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்குவீசம்படியாகத் தினம் இருவேளை 3 நாள் கொடுக்க வாதசுரம் நிவர்த்தியாகும்.

## 3. பித்தசுரக்கியாழம்

சரக்கு:—தூதுளைவேர் அதிமதுரம்
சிந்தில் கொடி சடாமாஞ்சி
சுக்கு சிற்றுமுட்டி
பாசிப்பயறு

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஏழுசரக்குகளையும் வகைக்கு கழஞ்சு இரண்டாக நிறுத்திடித்து ஒருமட்கடத்தில் போட்டு அதனில் அரைப்படித் தண்ணீர்விட்டுஅடுப்பிலேற்றி சிறுதீயாகஎரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இருவேளை 3 நாள் கொடுக்க பித்தசுரம் நிவர்த்தியாகும்.

4 வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—பாவட்டைவேர் | பலம் | $\frac{1}{4}$ |
| சிற்றாமுட்டிவேர் | ,, | $\frac{1}{4}$ |
| ஓமம் | ,, | $\frac{1}{4}$ |
| வேலிப்பருத்திவேர் | ,, | $\frac{1}{4}$ |
| மிளகு | ,, | $\frac{1}{4}$ |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் இடித்து ஒரு மட்கடத்தில் போட்டு அதனில் $\frac{1}{2}$படித் தண்ணீர்விட்டு அடு ப்பிலேற்றிச் சிறுதீபாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இருவேளை 3-நாள் கொடுக்க பித்தசுரம் நிவர்த்தியாகும்.

5. சிலேத்துமசுரக்கியாழம்

சரக்கு:—தூதுளைவேர் கண்டங்கத்தரிவேர்
செம்முள்ளிவேர் சுண்டைவேர் சுக்கு

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் வகைக்கு இருகழஞ்சாக நிறுத்திடித்து ஒருமட்கடத்தில் போட்டு அத னில் $\frac{1}{2}$-படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீபாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளை க்கு வீசம்படியாக தினம் இருவேளை 3-நாள் கொடுக்க சிலேத்தும சுரம் நிவர்த்தியாகும்.

6. வேறு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—திப்பிலி | கழஞ்சு | 2 | ஓமம் | கழஞ்சு | 2 |
| சுக்கு | ,, | 2 | கண்டங்கத்திரிவேர் | ,, | 2 |
| சிற்றரத்தை | ,, | 2 | ஆடாதோடையிலை ஒருபிடி | | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஆறுசரக்குகளில் ஆடாதோடை யிலையை பொடியாகஅரிந்து ஒருமட்கடத்தில் போட்டுஅதனுடே மற்றச்சரக்குகளையும் ஒன்றிரண்டாய் இடித்துச் சேர்த்து அரைப் படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி சிறுதீபாக எரித்து அரைக் காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இருவேளை 3-நாள் கொடுக்க சிலேத்துமசுரம் நிவர்த்தியாகும்.

### 7. தொந்தசுரக்கியாழம்

| | |
|---|---|
| சரக்கு:—விலாமிச்சம்வேர் | பற்பாடகம் |
| சீந்தில்கொடி | சிற்றாமுட்டி |
| பூனைக்காய்ஞ்சொறிவேர் | நிலவேம்பு |
| முத்தக்காசு | கோஷ்டம் |
| கண்டங்கத்தரிவேர் | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஒன்பது சரக்குகளையும் வகைக்கு ஒருகழஞ்சு எடையாக நிறுத்திடித்து ஒரு புதுமட்கடத்தில் போட்டு ½-படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி வடித்து வேளைக்கு வீசம் படியாக தினம் இருவேளை 3-நாள் கொடுக்க தொந்தசுரங்கள் நிவர்த்தியாகும்.

### 8 வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—நிலவேம்பு | தோலா | ½ |
| பற்பாடகம் | ,, | ½ |
| கோரைக்கிழங்கு | ,, | ½ |
| சீந்தில்கொடி | ,, | ½ |
| கடகரோகணி | ,, | ½ |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் ஒன்றிரண்டாய்இடித்து ஒருமட்கடத்தில் போட்டு அதனில் அரைப்படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இருவேளை 3-நாள் கொடுக்க எத்தகைய சுரமாயினும் தீரும்.

குறிப்பு:—அதிக சுரமிருப்பின் நிலவேம்பு ஒருதோலா மற்றச் சரக்குகள் ½-தோலாவாகவும்; வியர்வைவிடாமல் ஒரேசுரமாகக் காயுமாயின் பற்பாடகம் ஒருதோலா மற்றச் சரக்குகள் ½-தோலாவாகவும்; கிறுகிறுப்பு, வாந்தி, ஒக்காளம் மிகுந்திருப்பின் கோரைக் கிழங்கு ஒரு தோலா மற்றச் சரக்குகள் ½-தோலாவாகவும்; மேகத்தை யனுசரித்த சுரமாயின் சீந்தில்கொடி ஒரு தோலா மற்றச் சரக்குகள் ½-தோலாவாகவும்; பலத்தீச்சலினால் உண்டான சுரமாயின் கடகரோகணி ஒரு தோலா மற்றச்சரக்குகள் ½-தோலாவாகவும்கூட்டிக்கியாழமிட்டுக் கொடுத்துவரவேண்டும். சுரத்துடன்

வயிற்றுப்போக்கு இருப்பின்முற்கூறப்பட்டுள்ள கியாழத்தில்சொல்லப்பட்ட கடகரோகணியைத் தள்ளி அதற்குப் பதிலாக சுக்கைச் சேர்த்துக்கொள்ளல் வேண்டும். இந்தக்கியாழம் தொந்தசுரங்களுக்குப் பயன்படுவதுமன்றி முறைசுரங்களுக்கும் உபயோகப்படும்.

## 9. வேறு

சரக்கு:—சிறுதேக்கு
கோரைக்கிழங்கு
பற்பாடகம்
சிறுகாய்ஞ்சொறி
நிலவேம்பு
சீந்தில்கொடி
கண்டங்கத்தரிவேர்
கோஷ்டம்
அரிசிதிப்பிலி
சுக்கு

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பத்துசரக்குகளையும் வகைக்குக் காற்பலமாக ஒன்றிரண்டாய் இடித்து ஒரு மட்கடத்தில் போட்டு அரைப்படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இருவேளை 3-நாள் கொடுக்க பலதொந்த சுரங்களையும் நிவர்த்தி செய்வதுடன் முறைசுரத்தையும் பரிகரிக்கும்.

## 10. வேறு

சரக்கு:—சுக்கு
மிளகு
திப்பிலி
மோடி
சிற்றரத்தை
கோஷ்டம்
செவ்வியம்
சிறுதேக்கு
வாய்விளங்கம்
பேய்ப்புடல்
தணியா
நிலவேம்பு
பற்பாடகம்
விஷ்ணுகாந்தி

செய்பாகம்:— இக்கூறப்பட்ட பதினான்கு சரக்குகளையும்வகைக்கு ஒருகழஞ்சு வீதம் ஒன்றிண்டாய் இடித்து ஒரு மட்கடத்தில் போட்டு $\frac{1}{2}$-படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாகத் தினம் இருவேளை 3-நாள் கொடுக்க சர்வ தொந்தசுரங்களும் நிவர்த்தியாகும்.

## 11. நிலவேம்பு கியாழம்

| | |
|---|---|
| சரக்கு:—நிலவேம்பு | நிலக்குமிழிவேர் |
| கோஷ்டம் | சுக்கு |
| திப்பிலி | சிறுகாய்ஞ்சொறி |
| கண்டங்கத்தரிவேர் | முத்தக்காசு |
| சிறுதேக்கு | சீந்தில்கொடி |
| | பற்பாடகம் |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பதினொரு சரக்குகளையும் வகைக்கு காற்பலமாக இடித்து ஒரு மட்கடத்தில் போட்டு அதனில் அரைப்படித்தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டுவடித்து வேளைக்கு வீசம்படி தினம் இருவேளை 3-நாள் கொடுக்க குளிர்சம்பந்தமான சுரங்களை நிவர்த்திசெய்யும்.

## 12 வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—நிலவேம்பு | கண்டங்கத்தரிவேர் | |
| ஆடாதோடை | பேய்ப்புடல் | |
| சீந்தில்கொடி | சிறுகாய்ஞ்சொறி | |
| பற்பாடகம் | சிறுதேக்கு | சுக்கு |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஒன்பது சரக்குகளையும் வகைக்குப்பலம் காலாக இடித்து ஒரு மட்கடத்தில் போட்டு அரைப்படித்தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டுவடித்துவேளைக்கு வீசம்படியாக தினம்இருவேளை 3-நாள் கொடுக்க எத்தனைய முறைசுரமாயினும் குணமாகும்.

## 13. வேப்பிலை கருக்குக்கியாழம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—வேப்பிலை | பிடி | 1 |
| கறிவேப்பிலை | „ | 1 |
| வாழைச்சருகு | „ | 1 |
| வெற்றிலை | „ | 1 |
| சிற்றரத்தை | வராகனெடை | 1 |
| சீரகம் | „ | 1 |
| எலுமிச்சம்பழத்தோல் | „ | 1 |
| அதிமதுரம் | „ | 1 |
| ஏலம் | „ | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஒன்பது சரக்குகளில் முதல் நான்கை சிறுத்துண்டுகளாக அரிந்து ஒரு வாயகன்ற மட்கடத்தில் போட்டு அடுப்பிலேற்றி எரித்து சாம்பலான பதத்தில் அரைப் படித் தண்ணீர்விட்டு சுண்டக்காய்ச்சி கொதித்துக்கொண்டிருக்கும் போது மற்றச்சரக்குகளின் சூரணத்தைப்போட்டு இறக்கி ஆற வைத்து வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இருவேளை 3-நாள் கொடுக்க வாந்தி, ஓக்காளம் நிவர்த்தியாகும்.

### 14. நாயுருவி கருக்குக் கியாழம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—நாயுருவிசமூலம் | பிடி | 1 |
| வாழைச்சருகு | ,, | 1 |
| பூநாகம் | ,, | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட மூன்று சரக்குகளையும் ஒரு மட்கடத்தில் போட்டு அடுப்பிலேற்றி எரித்துச் சாம்பலாக்கி அதனில் $\frac{1}{2}$-படித் தண்ணீர்விட்டு காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆற விட்டு வடித்து வேளைக்கு வீசம்படியாக தினம் இரண்டு மூன்று வேளை கொடுத்துவர எத்தகைய நாவறட்சியாயினும் குணமாகும்

### 15. அதிமதுரக் கியாழம்

| | |
|---|---|
| சரக்கு:—வில்வம்வேர் | முத்தக்காசு |
| விலாமிச்சம்வேர் | நெற்பொரி |
| நெரிஞ்சிவேர் | திராட்சை |
| நன்னாரிவேர் | நெல்லிவற்றல் |
| சோம்பு | இலுப்பைப்பூ |
| விளாவரிசி | சுக்கு |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் வகைக்கு மூன்று வராகனெடையாக இடித்து ஒரு மட்கடத்தில் போட்டு அதனில் $\frac{1}{2}$-படித் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி சிறு தீயாக எரித்து அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு வடித்து மூன்றுமணி நேரத்திற்கு ஒருமுறை ஒரு அவுன்ஸ் வீதம் கொடுத்துவர நாவறட்சி தீரும்.

### 16 ஆவாரைக்கியாழம்

| | |
|---|---|
| சரக்கு:—நாவல்பட்டை | கடுக்காய் |
| மருதம்பட்டை | நெல்லிவற்றல் |
| கோவைக்கிழங்கு | தான்றிக்காய் |

| | |
|---|---|
| கட்டுகொடி | ஆவாரைப்புஷ்பம் |
| போஸ்தக்காய் | ,, ,, பட்டை |
| கடலழிஞ்சிப்பட்டை | ,, ,, வேர் |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் வகைக்குப் பலம் ஒன்றாக இடித்துச் சூரணம்செய்து வைத்துக் கொண்டு வேண்டும்போது ஒரு தோலா சூரணத்தை காற்படித் தண்ணீரில் போட்டு அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி ஆற விட்டு வடித்துச் சாப்பிடவும். இப்படி தினம் இருவேளை பத்து நாள் சாப்பிட மதுமேகம் அதனாலுண்டான அதிகதாகம், நீர்போக்கு, அழலை நீங்கும். இத்துடன் இந்நூலில் கூறப்பட்டுள்ள அப்ரேகச்செந்தூரத்தையும் உட்கொள்ளல் சாலச்சிறந்தது.

---

## சூரண இலம்பகம்.

### 17. ஜாதிபலாதி சூரணம்

| | |
|---|---|
| சரக்கு:—ஜாதிக்காய் | கிரந்திதகரம் |
| கிராம்பு | நெல்லிப்பருப்பு |
| ஏலக்காய்அரிசி | தாளிசப்பத்திரி |
| லவுங்கப்பத்திரி | திப்பிலி |
| லவுங்கப்பட்டை | கடுக்காய் |
| நாகேசுரம் | சோம்பு |
| கற்பூரம் | சித்திரமூலம்வேர் |
| சந்தனம் | சுக்கு |
| எள் | வாய்விளங்கம் |
| மூங்கிலுப்பு | மிளகு |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட இருபது சரக்குகளையும் வகைக்கு காற்பலமாக சுத்தமாக ஆராய்ந்து பொன்மேனியாக வாசனைக் கிளம்ப வறுத்து அதனுடன் காற்பலம் சுத்திசெய்த கஞ்சாவைச் சிறிது பொன்மேனியாக வறுத்துக் கூட்டி பிடித்து வஸ்திரகாயம் செய்து புதுகலயத்தில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப் பிரமாணம் சமன் வெள்ளைச்சர்க்கரைக்கூட்டித் தேனில் மத்தித்து சாப்பிடவும்.

இது கிராணி, சீதபேதி, இரத்தபேதி, காசம், சுவாசம், வாதரோகம், கபரோகம், அரோசகம் முதலிய பலரோகங்களை பரிகரிக்கும்.

பத்தியம்:—காரசார மில்லாததாகவும் எளிதில் ஜீரணிக்கக்கூடிய ஆகாரமாக சிறிது நாள் சாப்பிட்டு பின்னர் இஷ்டம் போல் சாப்பிடலாம்

### 18. அஷ்டதீபாக்கினி சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—சுக்கு | தோலா | 1 | இந்துப்பு | தோலா | 1 |
| மிளகு | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 | பெருங்காயம் | ,, | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட எட்டு சரக்குகளில் காயம் இந்துப்பு நீங்கலாகமற்றவற்றைச் சிறிதுபொன்மேனியாக வறுத்து அதனுடன் பெருங்காயத்தைப் பொரித்தும் இந்துப்பை பொடித்தும் ஒருங்கு சேர்த்து கல்லுரலிலிட்டு நன்றாய் இடித்து சன்னமாக வஸ்திரகாயம் செய்து ஒரு மட்குடுவையில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குத் திரிகடிப்பிரமாணம் போஜன சமயத்தில் அன்னத்தில் முதல்சேர்த்து நெய்விட்டுப் பிசரி முதல் உண்டு பின்னர் வழக்கம்போல் எளிதில் சீரணிக்கக்கூடிய பதார்த்தக்குழம்பினங்களுடன் சாப்பிட சீரணமாகும். வயிற்றிலுண்டான வாயுகளைப் பரிகரிக்கும். குன்மரோகத்திற்கு முதற்குறியாகிய அஜீரணத்தைப் போக்கும்.

### 19. பெருகாயச் சூரணம்

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—பெருங்காயம் | பலம் ½ | எவச்சாரம் | பலம் ½ |
| வசம்பு | ,, | சர்ஜ்ஜசாரம் | ,, |
| கடுக்காய் | ,, | சுக்கு | ,, |
| காட்டுச்சீரகம் | ,, | மிளகு | ,, |
| மாதளம்விதை | ,, | திப்பலி | ,, |
| சீரகம் | ,, | சைந்தலவணம் | ,, |
| தணியா | ,, | கறியுப்பு | ,, |
| வட்டத்திருப்பி | ,, | சவர்ச்சலவணம் | ,, |
| தாமரைக்கிழங்கு | ,, | ஓமம் | ,, |

| | | | |
|---|---|---|---|
| கிச்சிலிக்கிழங்கு பலம் | ½ | செவ்வியம் பலம் | ½ |
| கொட்டைக்கரந்தை | ,, | உலர்ந்தபுளி | ,, |
| சித்திரமூலம் | ,, | புளியாரைசமூலம் | ,, |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட இருபத்துநான்கு சரக்குகளில் பெருங்காயத்தை சிறிது பொரித்தும், உப்புசாரமுதலியவற்றைப் பொடித்தும், மற்றவற்றை பொன்மேனியாக வறுத்தும் ஒருங்கு கூட்டி கல்லுரலிலிட்டு கலக்க இடித்து சன்னமாக வஸ்திரகாயம் செய்து (சீலையில் அரித்து) புது மட்கடத்திலிட்டு வைத்துக் கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப் பிரமாணம் தினம்இருவேளை அந்திசந்தி கொடுத்துவர சிறிதுநாளில் குன்மரோகத்தைப் பரிகரிப்பதுடன் அபானவாயு, மலம், மூத்திரம் முதலியவைகள் தடைப்பட்டு உண்டாகும் கஷ்டங்களையும் நிவர்த்திசெய்யும். தவிர தொண்டைகட்டு, மாரடைப்பு, யோனிசூலை, குதசூலை, இருதயச்சூலை, அண்டவாதம், வயிற்றுபொருமல் முதலியவற்றிற்கும் சிறந்தது.

## 20. இந்துப்புச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—இந்துப்பு | பலம் | 1 | ஓமம் | பலம் | 2 |
| சீரகம் | ,, | 3 | திப்பிலி | ,, | 4 |
| சுக்கு | ,, | 5 | கடுக்காய் | ,, | 15 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஆறுசரக்குகளில் இந்துப்பு தவிர மற்றவற்றை பொன்மேனியாக வறுத்து இந்துப்புடன் சேர்த்துக் கல்லுரலிலிட்டு நன்றாய் இடித்துச் சன்னமாக வஸ்திரகாயம் செய்து.ஒரு புதுமட்கடத்தி லிட்டு வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப்பிரமாணம் தினம் இருவேளை அந்திசந்தி கொடுத்துவர சடாராக்கினியை விருத்திசெய்து உண்ட ஆகாரம் எளிதில் செரிப்பித்து மலச்சிக்கலையும் போக்கித் தேகத்தைப்பாதுகாக்கும்.

## 21. கரிசலாங்கண்ணிச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—நிழலிலுலர்த்தியகரிசலாங் கண்ணி | தோலா | 4 | நிழலிலுலர்த்திய மூக்கரட்டைச்சமூலம் | தோலா | 1 |
| சுக்கு | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | தாளிசப்பத்திரி | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலி | தோலா | 1 | ஏலம் | தோலா | 1 |
| கடுக்காய் | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 1 | அதிமதுரம் | ,, | 1 |
| மரமஞ்சள் | ,, | 1 | தான்றிக்காய் | ,, | 1 |
| தனியா | ,, | 1 | | | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பதினைந்து சரக்குகளையும் கல்லுரலில் போட்டு நன்றாய் இடித்து வஸ்திரகாயம் செய்து புது மட்கலயத்திலிட்டு பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குத் திரிகடிப்பிரமாணம் சமன் வெள்ளைச்சர்க்கரையுடன் கலந்து தினம் இருவேளை கொடுத்துவர காமாலை பாண்டு சோபை முதலிய ரோகங்கள் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—புளித்தள்ளிஇச்சாபத்தியமாக இருத்தல்வேண்டும்

## 22. வேறு

சரக்கு:—நூறுண்டின் வேப்பம்பட்டை பலம் 4
நிழலிலுலர்த்திய கரிசலாங்கண்ணி ,, 4

செய்பாகம்:—இவையிரண்டையும் கல்லுரலிலிட்டு நன்றாய் இடித்து வஸ்திரகாயம் செய்து ஒருபுது மட்கலயத்தில் பத்திரப் படுதுக.

பிரயோகம்:—வேண்டும்போது வேளைக்கு திரிகடிப்பிரமாணம் தேனில் மத்தித்து தினம் இருவேளை கொடுத்துவர சோபை தீரும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 23. கட்டுவாதிச் சூரணம்

சரக்கு:—

| | | |
|---|---|---|
| சுக்கு | அதிவிடயம் | கோஷ்டம் |
| மிளகு | ஓமம் | கிராம்பு |
| திப்பிலி | குரோசாணிஓமம் | காய்ச்சுகட்டி |
| கடுக்காய் | நற்சீரகம் | வெள்ளுள்ளி |
| நெல்லிவற்றல் | கருஞ்சீரகம் | சாரணைவேர்பட்டை |
| தான்றிக்காய் | இந்துப்பு | ஜாதிக்காய் |
| வாய்விளங்கம் | ஏலம் | ஜாதிப்பத்திரி |
| கடுகரோகணி | செங்கழுநீர்கிழங்கு | வசம்பு |
| | அதிமதுரம் | |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட இருபத்தைந்து சரக்குகளையும் வகைக்கு 2-வராகனெடையாக நிறுத்து பொன்மேனியாக வறுத்து அதனுடன் ½-பலம் பொரித்த பெருங்காயத்தையும் கூட்டியிடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப்பிரமாணம் தேனில்மத்தித்து தினம் இருவேளை ஏழுநாள் கொடுக்க பலவிதமான பேதி கிராணிகளையும் பரிகரிக்கும்.

பத்தியம்:—எளிதில் ஜீரணிக்கக்கூடிய ஆகாரத்தைக் கொடுத்தல்வேண்டும்.

## 24. சந்தனாதிச் சூரணம்

சரக்கு:—சந்தனத்தூள், அகில்கட்டை, ஏலம், இலவங்கப்பட்டை, கிராம்பு, சோம்பு, அதிமதுரம், கார்போகஅரிசி, வெப்பாலையரிசி, தேற்றான்வித்து, அறுகம்வேர், சிற்றாமுட்டி

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளையும் வகைக்குபலம் ½-பாகக் கல்லுரலில் போட்டு நன்றாய் இடித்து வஸ்திரகாயம்செய்து பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப் பிரமாணம் சீனாகற்கண்டு சூரணம்கூட்டி தினம் இருவேளை பசுவின்வெண்ணெயில் கூட்டிக் கொடுக்க வெள்ளைவிழுதல், நீரெரிச்சல் முதலியவை நீங்கும்.

பத்தியம்:—காரசாரமற்ற ஆகாரமாக இருத்தல் நன்று.

## 25. பச்சைகற்பூரச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—அக்ரகாரம் | வராகனெடை | 2 | சுக்கு | பலம் | 1 |
| பச்சைக்கற்பூரம் | ,, | 2 | ஏலக்காய் அரிசி | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 | ரோஜாப்பூ | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | கூகைநீர் | ,, | 1 |
| சிறுநாகப்பூ | ,, | 4 | இலவங்கப்பட்டை | ,, | 1 |
| தாளிசப்பத்திரி | ,, | 4 | குங்குமப்பூ | வ-டை | 1 |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளில் வறுக்கவேண்டியவைகளை பொன்மேனியாக வறுத்து இடித்தும், மற்றவைகளைத் தனித்தனி யரைத்தும் ஒருங்குச்சேர்த்துக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு வராகனெடை சூரணத்துடன் சமன் கற்கண்டுசூரணம் கூட்டி தினம் 2-வேளை சாப்பிட கபசம்பந்தமான இருமல், பித்தம், மயக்கம், கைகாலெரிச்சல், தேககாங்கை முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—ரோகத்திற் கேற்றவாறு சமயோசிதமாக ஆகாரம் கூட்டவும்.

26. சர்வாங்கவாத சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—கொண்ணைப்பட்டை | பலம் | 1 | தூதுளைசமூலம் | பலம் | 1 |
| மாவிலங்கம்பட்டை | ,, | 1 | வெள்ளறுகு | ,, | 1 |
| சித்திரமூலம்பட்டை | ,, | 1 | காயம் | ,, | 1 |
| கண்டங்கத்தரிவேர் | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| சங்கம்வேர் | ,, | 1 | வளையலுப்பு | ,, | 1 |
| வாதமடக்கிவேர் | ,, | 1 | வெடியுப்பு | ,, | 1 |
| பூதகரப்பான்பட்டை | ,, | 1 | கல்லுப்பு | ,, | 1 |
| இந்துப்பு | ,, | 1 | | | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட 15-சரக்குகளையும் கல்லுரலில் போட்டு இடித்துச் சூரணம்செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப் பிரமாணம் தினம் இருவேளை சாப்பிட்டுவர சூலை, கெற்பச்சூலை, குடல்வாதம், வாதச்சூலை, ரத்தப்பித்த சூலை சர்வாங்கவாதம் எல்லாம் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

27. பற்பொடிச்சூரணம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—உலர்ந்தவேலங்காய் | பலம் | $2\frac{1}{2}$ |
| படிகாரம் | ,, | 2 |
| காய்ச்சுகட்டி | ,, | 2 |
| பிஞ்சுகடுக்காய் | ,, | 2 |
| மாசிக்காய் | ,, | 1 |
| வேலம்பட்டை | ,, | 1 |

செய்பாகம்:—இக்கூறிய ஆறுசரக்குகளையும் நன்றாய் இடித்து சூரணம்செய்து மட்குடுவையிலேனும் தகர டப்பியிலேனும் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இச்சூரணத்தில் ஒருகாசு எடை எடுத்துக்கொண்டு தினந்தோறும் காலையில் தந்தசுத்தி செய்துகொண்டுவா

பல்வலி, பல்நோய், பல்லீறின் வீக்கம், இரத்தம் சொரிதல், வாய் நாற்றம், பல்கூச்சம் முதலிய பல கஷ்டங்கள் நிவர்த்தி செய்வதுடன் ஆடுகின்ற பற்களையும் உறுதியாக நிலைக்கச்செய்யும்.

தாங்கக்கூடிய வெந்நீரில் வாய்கொப்புளித்தல் சாலச்சிறந்தது.

28. வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—ஜாதிக்காய் | பலம் | $\frac{1}{2}$ |
| படிகாரம் | ,, | ,, |
| கற்பூரம் | ,, | ,, |
| உப்பு | ,, | 1 |
| வேலம்பட்டைச்சுட்டகரி | ,, | 5 |
| வாதுமைக்கொட்டைசுட்டகரி | ,, | $2\frac{1}{2}$ |
| மகிழம்பட்டை | ,, | 5 |
| வறுத்தநாட்டுக்கல்நார் | ,, | 5 |

செய்பாகம்:—இவைகளைத் தனித்தனியே ஒவ்வொன்றையும் சூரணித்து எடைபோல் நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு கலந்துற வாகும்படி நன்றாய் அரைத்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—தினந்தோறும் இப்பொடியைக் கொண்டு தந்த சுத்திசெய்து கொண்டுவர பல்வலி, பல்நோய், பல்லீறின் வீக்கம், இரத்தம்சொரிதல், வாய்நாற்றம், பல்கூச்சம் முதலிய பல தந்த ரோகங்களை நிவர்த்திசெய்வதுடன் பற்களையும் உறுதியாக நிலைக்கச்செய்யும்.

29. வேறு

ஐந்துபலம் சோற்றுப்புடன் சமனெடை வெள்ளெருக்கம்பூவைக்கூட்டிக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து வில்லைத்தட்டிக் காயவைத்து 10-வறட்டிகளின்மத்தியில் வைத்துப் புடம்போடவும். பின்னர் ஷை உப்புவில்லையை எடுத்துக் கல்வத்திலிட்டு அதனுடன் 10-பலம் கருவேலம்பட்டைச் சூரணத்தைக்கூட்டி அரைத்து பத்திரப்படுத்துக.

இச்சூரணத்தைக் கொண்டு தினம் தந்தசுத்தி செய்து கொண்டுவர தந்தசூலை, தந்தவாயு, பல்லரணை முதலிய பலத்தந்த ரோகங்களைத் தீர்ப்பதுடன் தந்தங்களும் உறுதிப்படும்.

### 30. ஆவாரைச்சூரணம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—ஆவாரம்பட்டை | பலம் | 2 |
| ஓரிலைத்தாமரை | ,, | 2 |
| கீழ்வாய்நெல்லி | ,, | 2 |
| குமிழம்வேர் | ,, | 2 |
| கடுக்காய் | ,, | ½ |
| ஏலம் | ,, | ,, |
| சடாமாஞ்சி | ,, | ,, |
| சந்தனத்தூள் | ,, | ,, |
| தேவதாருத்தூள் | ,, | ,, |
| சீரகம் | ,, | 10 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பத்து சரக்குகளையும் கல்லுரலில் போட்டு நன்றாய் இடித்துச்சூரணித்து வைத்துக் கொண்டு நான்கிலொருபங்கு சீனிசேர்த்து ஒரு புதுக்கலயத்தில் போட்டு வைத்துக் கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப் பிரமாணம் தினம்இருவேளையாகச் சாப்பிட்டுவர பித்தஎரிவு, கண்புகைச்சல்,வாய் நீரூறல் வாந்தி, அரோசகம், தேக காங்கை முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

### 31. சீரகச் சூரணம்

ஐந்துபலம் சீரகத்தை ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு மூழ்கவிட்டு ரவியில் உலர்த்தவும். இப்படி 3-முறைவிட்டு உலர்த்தியபின் கரிசாலை, முசுமுசுக்கை, நெல்லிக்காய், தூதுளை, வேப்பம்பட்டை, தும்பை ஆக ஒவ்வொரு சாற்றையும் முன்போல் மூழ்கவிட்டு உலர்த்தி முடிவில் நன்றாய் இடித்துச் சூரணித்து நான்கிலொரு எடை சீனிசேர்த்து ஒரு புதுக்கலயத்தில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப்பிரமாணம் தினம் இருவேளை கொடுக்க கிறுகிறுப்பு, வாந்தி, அரோசகம், அக்கினிமந்தம், தேக காங்கை முதலியவைகள் நீங்கும்.

### 32. அதிமதுரச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—அதிமதுரம் | பலம் | 1 | திப்பிலி | பலம் | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | மோடி | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மஞ்சிஷ்டி | பலம் | 1 | பச்சைகற்பூரம் | பலம் | 1 |
| ஏலம் | ,, | 1 | செஞ்சந்தனம் | ,, | 1 |
| நெல்லிவற்றல் | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| சடாமாஞ்சில் | ,, | 1 | தாளிசப்பத்திரி | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | சிறுநாகப்பூ | ,, | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பதினாறு சரக்குகளையும் கல்லுரலில்போட்டு இடித்துச் சூரணித்து சமனெடைச் சர்க்கரை சேர்த்து பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப்பிரமாணம் தினம் இருவேளை கொடுக்க சித்தப்பிரமை, பித்தகிறுகிறுப்பு, வாய்நீரூறல் அரோசகம், வாந்தி முதலியவை நிவர்த்தியாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## 33. கபாங்குசச்சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—சுக்கு | பலம் | 1 | கடுக்காய்தோல் | பலம் | 1 |
| மிளகு | ,, | 1 | அக்ரகாரம் | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | தேசாவரம் | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 | சிற்றாத்தை | ,, | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட எட்டு சரக்குகளையும் பொன்மேனியாக வறுத்து கல்லுரலில் போட்டிடித்துச் சூரணித்து சமனெடை சீனிகூட்டிக் கலந்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு திரிகடிப்பிரமாணம் தினம் 2-3 வேளை கொடுக்க கபரோகங்களை நிவர்த்திசெய்யும். கபத்தின் மிகுதியால் உண்டாகிய இருமல் ரோகங்களுக்கு கூறப்பட்டுள்ள பற்பச்செந்தூரங்களுக்கு இதனை அனுபானமாகச் சேர்த்து கொடுத்துவரின் விசேஷநன்மை யுண்டாக்கும். இந்த சூரணத்திற்கு இரண்டெடை சர்க்கரை கூட்டி லேகியம்செய்து உபயோகப்படுத்துவது முண்டு.

பத்தியம்:—ரோகத்திற்கு தக்கவாறு பத்தியம் வைத்தல் வேண்டும்.

குறிப்பு:—இந்தச்சூரணம் சீதளத்தினால் உண்டான கபரோகங்களுக்கே சிறந்ததாகும். உஷ்ணத்தினால் வறட்சி கொண்டுவரும் இருமலுக்கு சிகிச்சாரத்நதீபம் முதல்பாகத்தில் கூறப்பட்ட கபாங்குசச்சூரணம் நன்று.

## 34. அருதா சூரணம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—வெந்தயம் | வராகனெடை | 8 |
| சதாப்பு இலை (உலர்ந்தது) | ,, | 8 |
| சீரகம் | ,, | 8 |
| கருஞ்சீரகம் | ,, | 8 |
| சன்னலவுங்கப்பட்டை | ,, | 8 |
| அதிமதுரம் | ,, | 8 |
| சோம்பு | ,, | 8 |
| தனியா | ,, | 50 |
| சீனாகற்கண்டு | ,, | 25 |

செய்பாகம்:—இக்கூறிய ஒன்பது சரக்குகளில் சீனாகற்கண்டு நீங்கலாக மற்றவைகளை இரவியில் உலர்த்தி இடித்துச் சூரணம் செய்து அதனுடன் சீனாகற்கண்டை நன்றாய் பொடித்துக் கலந்து வாயகண்ட சீசாவில் போட்டு வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு கால்ரூபாய் எடை தினம் இருவேளை சாப்பிட்டு ஒருமுணல் தண்ணீர் பருகிவர ஈரல்குலையில் உண்டான உபத்திரவம், நெஞ்சி கறகறப்பு, பசிமந்தம், நித்திரையின்மை, முக வாதம், மூர்ச்சாரோகம், நோஞ்சைக்கட்டு, பார்வைமந்தம், காதிரைச் சல், இந்திரியநஷ்டம் முதலிய பலரோகங்களை குணப்படுத்தும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## 35. சந்திரகாந்தி சூரணம்

சரக்கு:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நிலப்பனங்கிழங்கு | பலம் | 1 | கோரைக்கிழங்கு | பலம் | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | முருங்கைவித்து | ,, | 1 |
| சிறுநெருஞ்சிமுள் | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| பேரிச்சங்காய் | ,, | 1 | சிலாசத்துபற்பம் | ,, | 1 |
| சீரகம் | ,, | 1 | இலவங்கப்பட்டை | ,, | 1 |
| திராட்சை | ,, | 1 | இலவங்கப்பத்திரி | ,, | 1 |
| மூங்கிலுப்பு | ,, | 1 | ஜாதிக்காய் | ,, | 1 |
| பூனைக்காலிவித்து | ,, | 1 | ஆடாதோடைவித்து | ,, | 1 |
| தக்கோலம் | ,, | 1 | முள்அழுவணம்வித்து | ,, | 1 |
| இலவம்பிசின் | ,, | 1 | பொன்னாங்காணி வித்து | | 1 |
| சிறுநாகப்பூ | ,, | 1 | பூமிசக்கர கிழங்கு | ,, | 1 |
| இலுப்பைபூ | ,, | 1 | மரமஞ்சள் பலம் | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | | | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட இருபத்தைந்து சரக்குகளை நன்றாய் இடித்துச்சூரணம்செய்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு 1-தோலா வீதம் பசுவின்பால், தேன், பச்சரிசிகழுவியெடுத்தசலம், நெல்லிக்காய்ச்சாறு முதலியவற்றிலொன்றில்சாப்பிட அளவுகடந்து போகும்படியான மகாமூத்திர ரோகங்கள், இந்திரியநஷ்டம், யோனி தோஷம், இரத்தப்பிரமேகம் சர்வ பித்தரோகம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## 36. கற்பூராதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—பொரித்த வெங்காரம் | பலம் | ½ |
| நற்சீரகம் | ,, | ½ |
| ஆலாத்திகற்பூரம் | ,, | ½ |

செய்பாகம்:—சீரகத்தை நன்றாய் இடித்துச் சூரணித்து அத்துடன் ஆலாத்தி கற்பூரத்தை சேர்த்து அரைத்து ஒரு புதுமண்ணோட்டை அடுப்பில்வைத்து கைபொருக்க சூடேற்றி கீழ் இறக்கி இந்த சூரணத்தைப் போட்டு புகையாவண்ணம் புரட்டிபுரட்டி வறுத்து ஒரு பீங்கான்தட்டில் கொட்டி அதனுடன் பொரித்த வெங்காரத்தைப் போட்டுக்கலந்து கல்வத்திலிட்டு மிருதுவாக அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு அரைக்கால் ரூபாய்எடை வீதம் தினம் இருவேளை ஆனைநெருஞ்சி கியாழத்தில் பத்துநாள் கொடுக்கவும். இதனால் வெள்ளை, நீர்கட்டு, துர்மாமிசவளர்ச்சியினா லுண்டான நீரடைப்பு முதலியவைகள் தீரும்

குறிப்பு:—ஆனைநெருஞ்சி கியாழம் செய்யும் முறை: ஒரு புதுமட்குடுவையில் ஒருபிடி ஆனைநெருஞ்சி சமூலம் கொண்டுவந்து சிறுதுண்டுகளாக நறுக்கிப்போட்டு காற்படி சலம்விட்டு அரைக்காற்படியாகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டி எடுத்துக்கொள்க.

பத்தியம்:—காரசாரமில்லாத ஆகாரஞ் சேர்த்தல் நன்று.

---

# மாத்திரை இலம்பகம்

## 37. ஆனந்தபைரவ மாத்திரை

சரக்கு:—கருநாபி — மனோசிலை
இலிங்கம் — சூதம்
கெந்தகம் — பொரித்தவெங்காரம்

செய்பாகம்:—இக்கூறப்பட்ட சரக்கு ஆறினையும் வகைக்கு வராகனெடை இரண்டாக கல்வத்திலேபோட்டு, எலுமிச்சம்பழச் சாற்றால் நான்குசாமம் அரைத்துப் பயரளவு மாத்திரைகளாகத் திரட்டி நிழலில் உலர்த்தி சீசாவிலிடவும்.

பிரயோகம்:—சுரம் ஜன்னி தோஷங்களின் வன்மை மென்மைக் கேற்றவாறு வேளைக்கு இரண்டுமுதல் மூன்றுமாத்திரைவரையில் முலைப்பாலில் கொடுக்க நிவர்த்தியாகும். குளிர்சுரத்திற்கு இஞ்சிசுரசத்திலிட நிவர்த்தியாகும்.

பத்தியம்:—கோதுமை நொய், புழுங்கலரிசி நொய், பார்லி முதலியவற்றின் கஞ்சி தவிர மற்றவை யாகாது.

## 38. சங்கரபைரவ மாத்திரை

சரக்கு:—இலிங்கம் — பொரித்தவெங்காரம்
நாபி — சாரம்
கெந்தகம் — வீரம்

செய்பாகம்:—இக்கூறப்பட்ட சரக்கு ஆறினையும் வகைக்கு வராகனெடையாகக் கல்வத்திலிட்டு முலைப்பால், இலவங்கக்கியாழம், கையாந்தகரைச் சாறு முதலிய ஒவ்வொன்றிலும் இரண்டு சாமம் அரைத்துப் பயறளவு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி சீசாவிலிடவும்.

பிரயோகம்:—ஜன்னி சுரங்களின் வன்மை மென்மைக் கேற்றவாறு வேளைக்கு இரண்டு மாத்திரைவீதம் தேன் இஞ்சிசுரசம் முதலிய அனுபானங்களில் கொடுக்க நிவர்த்தியாகும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 39. சித்தானந்தபைரவ மாத்திரை

சரக்கு:—சுக்கு — இலிங்கம்
மிளகு — நாபி
திப்பிலி — பெருங்காயம்
பொரித்தவெங்காரம்

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஏழு சரக்கினையும் வகைக்கு ஒரு வராகனெடையாகக் கல்வத்திலிட்டு பழச்சாற்றால் 3-சாமம் அரைத்துக் குன்றியளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி சீசாவிலிடவும்.

பிரயோகம்:—ஜன்னிசுரத்திற்கு ஏற்றபடி வேளைக்கு 1-2 மாத்திரை இஞ்சிசுரசம், முலைப்பால், தேன் முதலிய அனுபானங்களில் கொடுக்க நிவர்த்தியாகும். இம்மாத்திரையை கலிக்கமாகத் தீட்டுவது முண்டு.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 40. கோடாசூழி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—சூதம் | வராகனெடை | 1 | திப்பிலி | வராகனெடை | 1 |
| கெந்தகம் | ,, | 1 | கடுக்காய் | ,, | 1 |
| நாபி | ,, | 1 | நெல்லிவத்தல் | ,, | 1 |
| தாளகம் | ,, | 1 | தான்றிக்காய் | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | பொரித்தவெங்காரம் | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | வாளம் | ,, | 11 |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளில் சுத்தி செய்யவேண்டியவைகளை சுத்திசெய்தும் மற்றவற்றைச் சூரணித்தும் ஒருங்குச்சேர்த்துக் கல்வத்திலிட்டு கரிசாலைச்சாற்றால் நான்கு சாமம் அரைத்து மிளகுப்பிரமாணம் மத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

பிரயோகம்:—தேகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு மாத்திரை இரண்டு அல்லது ஒன்று இஞ்சிசுரசம், தேன் முதலியவைகளில் கொடுக்க சுரம், சன்னி முதலியவற்றுடன் குத்தல்,குடைச்சல், பக்கநோய்,மாரடைப்பு முதலியவைகள் தீரும். இம்மருந் துண்ணும் காலத்தில் கைப்போடு புளிப்பு நீக்கி இச்சாபத்தியமாக இருத்தல் சாலச்சிறந்தது.

## 41. காலகோடி ரசம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—சூதம் | வராகனெடை | 1 | மிளகு | வராகனெடை | 3 |
| கெந்தகம் | ,, | 1 | கடுக்காய் | ,, | 3 |
| தாளகம் | ,, | 1 | தான்றிக்காய் | ,, | 3 |

| | | | | |
|---|---|---|---|---|
| இலிங்கம் | வராகனெடை 1 | நெல்லிவற்றல் | வ-டை | 3 |
| நாபி | ,, 2 | சிகப்பு அல்லிக்கிழங்கு | ,, | 1 |
| சுக்கு | ,, 3 | நெருஞ்சிவேர் | ,, | 1 |
| அரிசிதிப்பிலி | ,, 3 | நேர்வாளம் (சுத்தி) | ,, | 7 |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட பதினான்கு சரக்குகளையும் கல்வத்திலிட்டு சிகப்பு அல்லிக்கிழங்குச் சாறுவிட்டு 3-சாமம் நன்றாய் அரைத்து குன்றியளவு மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி சீசாவில் பத்திரப்படுத்தவும்.

பிரயோகம்.—இம்மாத்திரையை தினம் இருவேளை கொள்ள இரண்டொருதடவை மலசோதனையாகும். அதிகமாக இருப்பின் மருந்தினளவை குறைத்துக் கொள்ளல்வேண்டும் இதனை தகுந்த அனுபானங்களில் கொடுக்க பலபிணிகள் நீங்கும்.

ரோகங்களுக்கேற்ற அனுபானம்

தலைநோய்:—திரிபலாதி சூரணத்தில் கொடுக்கவும்.

மூர்ச்சை:—இம்மாத்திரையை நல்லெண்ணெயில் உரைத்து கன்னத்தில்போட்டு வேறுமாத்திரையைப் பொடித்துநசியமிடவும்.

மயக்கம்:—தாளிசபத்திரி சூரணத்தில்சிறிது சர்க்கரைக்கூட்டி கொடுக்கவும்.

சலுப்பு:—சுக்கு சூரணத்தில் கொடுக்கவும்.

கண்ணோய் } நெல்லிக்காய் சாற்றில் உரைத்து உபாய
கண்சிவப்பு } மாக கண்ணைச்சுற்றிப் போடவும்.

பீனிசம்:—மிளகு சூரணத்துடன் சேர்த்து நசியமிடவும்.

வாய்நாற்றம்:—பழயவெல்லம் இஞ்சிச்சாறு இவைகளில் கொடுக்கவும்.

பல்நோய் } கண்டங்கத்தரி செடியின் பட்டையை
சொத்தைப்பல் } ஒரு கொட்டைபாக்களவு ஆகும்படியான அளவில் $\frac{1}{2}$-மாத்திரை இட்டரைத்து பல்விளக்க குணமாகும்.

அஜீர்ணம் } இவைகட்கு இஞ்சிரசம் அல்லது இஞ்சி,
குன்மம் } ஓமம் இவையிரண்டையும் அரைத்துப் பிழிந்
சூலை } தெடுத்தச் சாற்றில் கொடுக்கவும்.

சீதபேதிக்கு:—சுக்கு சூரணத்தில் கொடுக்கவும்.

நடுமுதுகுநோய்:—இலவங்கக் கியாழத்தில் கொடுக்கவும்.

மூத்திரகிரிச்சரம்:—வெற்றிலைப்பாக்கு ரசத்தில் கொடுக்கவும்.

பதுமூத்திரம்:—½-ரூபாய் எடை மூங்கிலுப்பு பன்னீர்விட்டரைத்த சூரணத்தில் கொடுக்கவும்.

வெள்ளைக்கு:—கருப்புநிறமுள்ள வெள்ளாட்டுப்பாலில் கொடுக்கவும்.

கீல்வாயு:—முடக்கத்தான்சாற்றில் கொடுக்கவும்.

பழையசுரம்:—சீந்தில் சர்க்கரையில் கொடுக்கவும்.

முறைசுரம்:—சீரகம் தணியா இவையிரண்டும் சேர்ந்த கியாழத்தில் கொடுக்கவும்.

குளிர்சுரம்:—இலவுங்ககியாழத்தில் கொடுக்கவும்.

சர்வசுரம்:—நிலவேம்பு சிற்றரத்தைகியாழத்தில் கொடுக்கவும்.

நெருப்புபட்டவிரணத்துக்கு:—நெல்லிக்காய் சாற்றிலுறைத்து உபாயமாக தடவிவரவும்

வங்குக்கு:—இரச செந்தூரத்துடன் இம்மாத்திரையைக் கூட்டி நல்லெண்ணெய் விட்டரைத்துப் பூசிவரவும்.

கிரந்தி:—வேப்பமரத்திலைக் கொழுந்தை அரைத்த விழுதுடன் சாப்பிடவும்.

மர்மஸ்தான தளர்ச்சி:—கோழிமுட்டை வெண்கருவிலுறைத்துபூசிவரவும்.

மார்புநோய்:—தணியா கியாழத்தில் கொள்ளவும்.

இருமலுக்கு:—திரிபலாதி சூரணத்தில் கொள்ளவும்.

இப்படியே அந்தந்த ரோகங்களுக் கேற்றவாறு பண்டிதர்கள் சமயோசிதமாக அனுபானங்களில் கொடுக்க பல ரோகங்களும் தீரும்.

## 42. சந்தனாதி வடி

| | | |
|---|---|---|
| சரக்கு:—அதிமதுரம் | தோலா | $1\frac{1}{2}$ |
| வால்மிளகு | ,, | $1\frac{1}{2}$ |
| கருவேலம்பிசின் | ,, | $1\frac{1}{2}$ |
| சவாச்சாரம் | ,, | $\frac{1}{2}$ |
| உயர்ந்தசந்தனதைலம் (அத்தர்) | ,, | $\frac{1}{2}$ |
| வெள்ளைகுங்கிலியம் | ,, | $\frac{1}{2}$ |
| ருமஸ்தகி | ,, | $\frac{1}{2}$ |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஏழுசரக்குகளில் முதலில் கருவேலம்பிசினைக் கல்வத்தில்போட்டு சிறிது சலம்விட்டு அரைத்து அதனுடன் ரூடீஸ்தகியையும் குங்கிலியத்தையும் கூட்டி அரைக்கவும். அதன்பின் சந்தனஅத்தர் அதிமதுரச்சூரணம், வால்மிளகுச்சூரணம் ஏவாச்சாரம் இவற்றை முறைமேய ஒன்றன்பின் ஞென்றாய் கூட்டி அரைப்பதற்கு திரவம் குறைவுபட்டிருப்பின் சிறிதுசலம் தெளித்தரைத்து சிறுகடலைப் பிரமாணமுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு இரண்டு மாத்திரைவீதம் தினம் இருவேளை கொடுத்துவரநீரெரிச்சல், வெள்ளை முதலியவைகள் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—காரசாரமற்ற ஆகாரங்களைக் கொடுத்தல்வேண்டும்.

## 43. சலோதாரி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—பொரித்த வெங்காரம் வராகனெடை | | 1 | கடல்நுரைவராகனெடை | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 | இந்துப்பு | ,, | 1 |
| மிளகு | ,, | 1 | சுரை விரை | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | சாரம் | ,, | 1 |
| படிகாரம் | ,, | 1 | சுத்திவாளம் பலம் | | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்டப் பத்துச்சரக்குகளையும்கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்துத் துகளாக்கி கொம்புக்கள்ளிப் பாலால் சிறிது அரைத்து மிளகுப் பிரமாணமுள்ள மாத்திரைகளாகச் செய்துநிழலிலுர்லத்தி சீசாவில் பத்திரப்படுத்துக

பிரயோகம்:—தேகத்தின்வன்மை மென்மைக் கேற்றவாறு2-அல்லது 1-மாத்திரை காலைநேரத்தில் கொடுக்க பேதியாகும். இப்படி 3-5 நாள் கொடுக்கவும். இதனால் மகோதரம், வெப்புபாவை, சூலை முட்டி, கீழ்கவிசை, நமூவை வாதமகோதரம் முதலியவைகள் யாவும் தீரும்.

ஒருகால் பேதி அதிகமானால் மோரிட்டுக்கரைத்த அன்னம் எலுமிச்சம்பழச்சாறு, காடி இவைகளைக் கொடுக்க பேதி நின்றுவிடும்.

பத்தியம்.—பேதியானபின் இலகு போஜனம் கொடுத்தல் வேண்டும்.

## 44. நாபி மாத்திரை

| | | |
|---|---|---|
| சரக்கு:—சுத்திசெய்தநாபி | வராகனெடை | 2 |
| வெண்மிளகு | ,, | 10 |
| பொரித்தவெங்காரம் | ,, | 10 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட மூன்று சரக்குகளையும் கல்வத்திலிட்டு இஞ்சிச்சாற்றால் நாலைந்து மணிநேரம் ஒரே அரைப்பாக அரைதது மிளகுப்பிரமாணம் மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்திப்பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ஒருமாத்திரைவீதம் தினம்இருவேளை சாப்பிட்டுவர சுரம், தலைவலி,மண்டைக்குடைச்சல், தலைபாரம் முதலியவைகள் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாகப் புளித்தள்ளி இருத்தல் நன்று.

## 45. நாவல்கோட்டை மாத்திரை

வேண்டிய அளவு நாவல்கொட்டையை கொண்டுவந்து இடித்துச் சூரணம் செய்துக் கல்வத்திலிட்டு ஆடுதிண்ணாப்பாளை இலைச்சாற்றால் 10-நாள் அரைத்து குண்டுமணி அளவுமாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி சீசாவில் பத்திரப்படுத்துக.

இதனை தினம் இருவேளை 2-3 மாத்திரை வீதம் சாப்பிட்டுவர சிறுநீரிலுள்ள இனிப்பை 10-15 நாளில் குணமாக்கும். அப்படி கொள்ளுங்காலத்தில் தங்கச்செந்தூரத்தையாவது அப்ரேக்செந்தூரத்தையாவது உட்கொள்ளவேண்டும். சிறுநீரில் இனிப்பு அதிகப்படின் கட்டிகள் வருமாதலால் பண்டிதர் சர்வஜாக்கிரதையாக நீரை காய்ச்சி பார்த்து உடனே இம்மாத்திரையை கொடுத்தல்வேண்டும்.

# இலேகிய இலம்பகம்.

## 46. சீரணசஞ்சீவி லேகியம் X

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—சுக்கு | தோலா | 1 | சீரகம் | தோலா | $\frac{1}{2}$ |
| வாய்விளங்கம் | ,, | $\frac{1}{2}$ | ஓமம் | ,, | $\frac{1}{2}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{2}$ | பனைவெல்லம் | பலம் | 5 |
| நிலாவாரை | ,, | $2\frac{1}{2}$ | பசுவின் நெய் | தோலா | 4 |
| மிளகு | ,, | 1 | பசுவின் பால் | படி | $\frac{1}{2}$ |
| சீந்தில்சர்க்கரை | ,, | $\frac{1}{2}$ | தேன் | தோலா | 4 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளில் முதலில் ஓர் இருப்புவாணலில் பசுவின் பாலைவிட்டு அடுப்பிலேற்றி குழம்புபதமாகக் காய்ச்சி அதனில் பனைவெல்லத்தை தூகள் செய்துப்போட்டுத் துழவி பின்னர் மற்றச்சரக்குகளின் சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிளரி இறக்குந்தருவாயில் நெய் தேன் விட்டுக் கலந்துப் பீங்கான் பாத்திரத்தில் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—இரவுகாலத்தில் படுத்துக்கொள்வதற்கு $\frac{1}{2}$-நாழிகைக்கு முன் இந்த லேகியத்தில் சிறு நெல்லிக்காய்ப் பிரமாணம் சாப்பிட்டு இரண்டொரு மிடறு சலம் சாப்பிட்டு நித்திரைசெய்து காலையில் எழுந்தவுடன் மலம் ஒரு தடவை தாராளமாகப் போகும். இதுவுமல்லாமல் உண்ட உணவை சரிவர ஜீரணிக்கச் செய்யும். இது ஜீரணசக்தி யில்லாதவர்களுக்கும், மலபந்த முடையவர்களுக்கும் சிறந்த அமிழ்தமாகும்.

பத்தியம்:—இதற்கு பத்தியமில்லையாயினும் எளிதில் ஜீரணிக்க கூடிய ஆகாரம் உட்கொள்ளல் நன்று.

## 47. வேறு

| | |
|---|---|
| சரக்கு:—சூரத்துக்கடுக்காய் | சூரத்துநிலாவாரை |
| பிஞ்சுக்கடுக்காய் | சோம்பு |
| நெல்லிவற்றல் | கருப்புஉப்பு |
| சுக்கு | தணியா |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட எட்டு சரக்குகளையும் வகைக்கு ஒருபலமாகச் சூரணித்து அதனுடன் இரண்டுபலம் வாதுமைக் கொட்டை எண்ணெய்விட்டுப் பிசரி வைத்துக்கொள்க.

பின்னர் ஒரு இரும்பு கடாயை அடுப்பிலேற்றி 10-பலம் தேனுடன் ஒருபலம் எலுமிச்சம்பழச் சாறுவிட்டுக் காய்ச்சி முன் சித்தப்

படுத்திய சூரணத்தைக் கொஞ்சங்கொஞ்சமாகப் போட்டுக் கிளரி வைத்துக்கொள்க.

பிரயோகம்:—இதனையும் இரவுகாலத்தில் சிறு நெல்லிக்காய்ப் பிரமாணம் உட்கொண்டு நித்திரைசெய்யக் காலையில் மலசோதனை உண்டாகும். இன்னும் வாதபித்த கபமென்னும் திரிதோஷங்களா லுண்டான பற்பல ரோகங்களையும் தீவரமாகக் குணப்படுத்தும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

### 48. நாரங்காதி லேகியம்

சரக்கு:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| புளிப்புநார்த்தம்பழச்சாறு | பலம் | 20 | கடுக்காய் | பலம் | 2 |
| இஞ்சிரசம் | ,, | 10 | நெல்லிவற்றல் | ,, | 2 |
| சுக்கு | ,, | 2 | தான்றிக்காய் | ,, | 2 |
| மிளகு | ,, | 2 | இலவங்கப்பத்திரி | ,, | 2 |
| திப்பிலி | ,, | 2 | இலவங்கப்பட்டை | ,, | 2 |
| நாகேசுரம் | ,, | 2 | சீரகம் | ,, | 6 |
| சயிந்தலவணம் | ,, | 1 | சர்க்கரை | வீசை | $\frac{1}{2}$ |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பதினைந்து சரக்குகளில் சர்க்கரையுடன் புளிப்பு நார்த்தம்பழச் சாற்றையும் இஞ்சி ரசத்தையும் விட்டுக்கரைத்து அடுப்பிலேற்றி சிறுதீயாக மிருதுவாக எரித்து தந்துபதம் வருந்தருவாயில் மற்றச்சரக்குகளின் சூரணத்தை கொஞ்சங் கொஞ்சமாக போட்டு கிளரி போதிய அளவு தேன்விட்டுப் பிசைந்து பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு சுண்டக்காய் பிரமாணம் தினம் இரு வேளைக்கொடுத்துவர அரோசகம், வாந்தி, அக்கினிமந்தம், பித்த வாயு முதலியரோகங்கள் தீரும்.

பத்தியம்:—ரோகத்திற் கேற்றவாறு ஆகாத பண்டங்களைத் தள்ளி வைப்பதே உத்தமம்.

### 49. வில்வாதி லேகியம்

சரக்கு:—மேல்தோல்சீவிய

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வில்வவேர் | பலம் | 30 | சீரகம் | பலம் | 2 |
| வெல்லம் | ,, | 30 | செவ்வியம் | ,, | 1 |
| மிளகு | ,, | 4 | தாளிசபத்திரி | ,, | 1 |
| சுக்கு | ,, | 3 | நாகேசுரம் | ,, | $\frac{1}{2}$ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலி | பலம் | 2 | இலவங்கப்பத்திரி | பலம் | ¼ |
| திப்பலிமூலம் | ,, | 2 | இலவங்கப்பட்டை | ,, | ¼ |
| சித்திரமூலம் | ,, | 2 | ஏலக்காய்வித்து | ,, | ¼ |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பதினான்கு சரக்குகளில் வில்வ வேரைப் பஞ்சுபோல் இடித்து ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு ஒருமரக்கால் சலம்விட்டு அடுப்பிலேற்றி எட்டிலொன்றாய்க் காய்ச்சி வடித்து மறுபாண்டத்திலிட்டு மீண்டும் அடுப்பிலேற்றி வெல்லத்தை துகள் செய்துப்போட்டுக் கரைத்து பாகுபதம் வருஞ் சமயத்தில் மற்றச் சரக்குகளின் சூரணத்தைக் கொஞ்சங்கொஞ்ச மாகத் தூவி போதிய நெய் தேன் விட்டுக் கிளரி பீங்கான்பாத்திரத் தில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு சிறிய கொட்டைப்பாக்குப் பிரமாணம் தினம் இருவேளை கொடுத்துவரின் வாந்தி, காமாலை, குன்மம், வயிற்றெரிவு, கைகாலெரிவு, குலையெரிவு, மார்புநோய், சோகை, பாண்டு முதலிய பித்தசம்பந்தமான ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

### 50. மஹாவில்வாதி லேகியம்

சரக்கு:—

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) | வில்வம்வேர் (தோல் நீக்கியது) | பலம் | 100 | நன்னாரிவேர் | பலம் | 3 |
| | விலாமிச்சுவேர் | ,, | 3 | பெரும்விளாவேர் | ,, | 3 |
| | வாகைவேர் | ,, | 3 | சிற்றாமுட்டிவேர் | ,, | 3 |
| | பாதிரிவேர் | ,, | 3 | பேராமுட்டிவேர் | ,, | 3 |
| | நிலவாகைவேர் | ,, | 3 | சிறுவிளாவேர் | ,, | 3 |
| | முன்னைவேர் | ,, | 3 | சித்திரமூலம்வேர் | ,, | 3 |
| | முசுமுசுக்கைவேர் | | 3 | தேற்றாம்வேர் | ,, | 3 |
| (2) | குமட்டிமாதுளம் பழச்சாறு | படி | 1 | ஆவின்பால் | படி | 2 |
| | இஞ்சிச்சாறு | ,, | 1 | சர்க்கரை | சேர் | 4 |
| (3) | திரிகடுகு | பலம் | 1 | தனியா | பலம் | 1 |
| | திரிபலாதி | ,, | | விளாவரிசி | ,, | |
| | கிராம்பு | ,, | | சிறுதேக்கு | ,, | |
| | ஏலக்காய்வித்து | ,, | | திராட்சைபழம் | , | |
| | கோஷ்டம் | ,, | | பேரிச்சங்காய் | ,, | |

| | | | |
|---|---|---|---|
| அதிமதுரம் | பலம் 1 | வில்வப்பூ | பலம் 1 |
| சந்தனத்தூள் | ,, | வாலுளுவையரிசி | ,, |
| சீரகம் | ,, | சடாமாஞ்சில் | ,, |
| கருஞ்சீரகம் | ,, | சிறுநாகப்பூ | ,, |
| வாய்விளங்கம் | ,, | நாகணம் | ,, |
| சாஸ்திரபேதி | ,, | பருத்திப்பருப்பு | ,, |
| தாளிசபத்திரி | ,, | வேப்பம்வித்து | ,, |
| சண்பகப்பூ | ,, | இலுப்பைப்பூ | ,, |
| அக்கிராகாரம் | ,, | | |

செய்பாகம்:—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள பதினொன்குவேர் இனங்களைக் கல்லுரலில் போட்டு பஞ்சுபோல் நறுக்கி ஒரு பெரிய மட்பாண்டத்தில் போட்டு 16-படி சலம்விட்டு அடுப்பிலேற்றி இரண்டுபடியாகச் சுண்டக்காய்ச்சி பிசைந்து வடித்த கியாழத்துடன் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள நான்குத் திரவங்களைச் சேர்த்து பாகுபதம்வரக்காய்ச்சி அதனில் மூன்ருவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள கற்கங்களைப் பொன்மேனியாக வறுத்து இடித்து வஸ்திரகாயம் செய்து கொஞ்சங்கொஞ்சமாகத் தூவி அதனுடன் ½-வீசை தேனையும் ½-வீசை நெய்யையும் விட்டுக் கிளரி பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர அரோசகம், வீக்கம், சத்தி, பாண்டு, விஷப்பாண்டு, வயிற்றெரிவு வயிற்றுப்பசம், கிராணி, கைகாலெரிவு, காந்தல், அன்னதுவேஷம், அதிசாரம், பித்தம் 42, சயகாசம் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

### 51· இஞ்சிலேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்து:—இஞ்சி | பலம் | 5 | சீரகம் | பலம் | 1 |
| தாளிசப்பத்திரி | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| எலுமிச்சம்பழம் | | 10 | தேன் | ,, | 5 |
| நெல்லிக்காய் | படி | ½ | நாட்டுசர்க்கரை | ,, | 5 |

செய்பாகம்:—இந்தபாகத்தை செய்வதற்கு சில தினத்திற்கு முன்னதாக ஒரு கோப்பையில் முற்கூறப்பட்ட எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு அதனில் சீரகத்தைப்போட்டு ரவியில் தினந்தோறும் வைத்துக்கொண்டு வந்து நீர் சுண்டியபின் இடித்து வைத்துக்

கொள்க. அப்பால் நெல்லிக்காயை கல்லுரலில் போட்டு இடித்து கொட்டைகளை யெல்லாம் நீக்கிச் சுத்தப்படுத்தி வைத்துக்கொள்க. இதற்குமேல் இஞ்சியின் மேல்தோலைச் சுத்தமாகச்சீவிச் சிறுதுண்டு களாக நறுக்கி எல்லாவற்றையும் கல்வத்தில்போட்டு, மிகுதியுள்ள தாளிசப்பத்திரி, கிராம்பு இவைகளிரண்டின் சூரணத்தையும்கூட்டி ஒருமிக்கக் கலந்து தேனையும் சர்க்கரையும் கொஞ்சங்கொஞ்சமாய் விட்டரைத்து இரவியில்வைத்து பதமாக்கவும்.

பிரயோகம்:—வேளைக்கு சிறுசுண்டைக்காய் பிரமாணம் அன்னம்புசிப்பதற்கு முன் சாப்பிட்டுவர ஜீரணசக்தியை யுண்டாக்குவதுடன் பித்தசம்பந்தமான ஒக்காளம், வாந்தி, செறியாமை, வயிற்றுவலி, மார்பு எரிச்சல் முதலியவைகளை நிவர்த்திசெய்யும்.

இந்தபாகத்தில் தேன் சர்க்கரை சேர்ப்பதற்கு முன்னதாக $1\frac{1}{2}$-அவுன்ஸ் சல்பியுரிக் ஆசிட் (கந்தகதிராவகம்) கூட்டி அரைத்து நன்முய் உறவானபின் சர்க்கரை தேன்கூட்டி அரைத்து வைத்துக் கொள்வதுண்டு. அப்படிசெய்யின்கடலைப்பிரமாணந் தான்கொடுக்க வேண்டும். இது அதிக புளிப்பாகவும் இருக்கும். இதனைபோஜனக் குறடா என்று சொல்வதும் உண்டு.

## 52. இஞ்சிலேகியம் (வேறு)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—இஞ்சிசூரணம் | பலம் | 10 | பிரண்டைசூரணம் | பலம் | 1 |
| கரிசாலை சமூலசூரணம் | | 1 | பூவரசம்பட்டைசூரணம் | ,, | 1 |
| வாலுளுவையரிசி | ,, | $\frac{1}{2}$ | தாளிசப்பத்திரி | ,, | $\frac{1}{2}$ |
| கடுகு | ,, | $\frac{1}{2}$ | தணியா | ,, | $\frac{1}{2}$ |
| சித்திரமூலம் | ,, | $\frac{1}{2}$ | கற்கடகசிங்கி | ,, | $\frac{1}{2}$ |
| குரோசாணிஓமம் | ,, | $\frac{1}{2}$ | மிளகு | ,, | $\frac{1}{2}$ |
| சீரகம் | ,, | $\frac{1}{2}$ | ஏலம் | ,, | $\frac{1}{2}$ |
| திப்பிலி | ,, | $\frac{1}{2}$ | அதிமதுரம் | ,, | $\frac{1}{2}$ |
| கோஷ்டம் | ,, | $\frac{1}{2}$ | மோடி | ,, | $\frac{1}{2}$ |
| சர்க்கரை | ,, | 30 | ஆவின் நெய் | ,, | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட இருபது சரக்குகளிலே முதலில் ஒரு இரும்புகடாயில் நெய்யைவிட்டு அதில் சர்க்கரையைப்போட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து கரைந்தபின்னர் இஞ்சியாதியாக மோடி ஈருக உள்ள பதினெட்டு சரக்குகளை இடித்தெடுத்தசூரணத்தை தூவிக்கிண்டி பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணம் தினம் இருவேளை சாப்பிட பித்தவாயு, உஷ்ணம், சத்தி குன்மம், அரோசகம், விக்கல், அஸ்திசுரம், அஜீரணம், வயிற்றுப்பசம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

குறிப்பு:—இம்முறையில் இஞ்சியின் மேல்தோலைச் சீவி எலுமிச்சம்பழச் சாற்றால் அரைத்து உலர்த்தி இடித்து வஸ்திரகாயம் செய்துக்கொள்ளவேண்டும். பிரண்டையைச் சிறுதுண்டாக நறுக்கி உப்பிட்ட மோருடன் கலந்து 7-8 நாள் ரவியில் வைத்து உலர்த்தி இடித்து வஸ்திரகாயம் செய்துக்கொள்ள வேண்டும்.

### X 53. சௌபாக்கிய சுண்டி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—ஆவின்பால் | படி | 2 | திப்பிலி | பலம் | 1 |
| சர்க்கரை | வீசை | ½ | மிளகு | ,, | 1 |
| சுக்கு | பலம் | 8 | ஏலம் | ,, | 1 |
| வாலுளுவையரிசி | ,, | 1 | கரிசாலை | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 | சதகுப்பை | ,, | 1 |
| வாய்விளங்கம் | ,, | 1 | தணியா | ,, | 1 |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட பன்னிரண்டு சரக்குகளிலே முதலில் ஒரு இரும்பு கடாயில் ஆவின்பாலை விட்டு அடுப்பிலேற்றி சுத்தப்படுத்திய வெள்ளைச்சர்க்கரையைப் போட்டுச் சிறுதீயாகஎரித்து பாகுபதம் வரும்போது மற்றச்சரக்குகளை இடித்தெடுத்த சூரணத்தை தூவிக்கிண்டி லேகியபதத்திற்குப்போதிய நெய் தேன்விட்டுப் பிசைந்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு சுண்டைக்காய் பிரமாணம் தினம் இருவேளை சாப்பிட குன்மம், வலி, சூதகவாயு, வயிற்றுப்பசம், அஜீரணம் முதலியவை நிவர்த்தியாகும்

பத்தியம்:—ரோகத்திற் கேற்றவாறு எளிதில் ஜீரணிக்கக்கூடிய ஆகாரம் கொடுத்தல்வேண்டும்.

### 54. குடஜாவ லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—வெப்பாலை மரப்பட்டை (பச்சையானது) | பலம் | 100 | வட்டத்திருப்பி | பலம் | 1 |
| | | | காட்டாத்திப்பூ | ,, | 1 |
| நறுவிலிப்பட்டை | ,, | 1 | இலவம் பிசின் | ,, | 1 |
| வில்வம்வேர் | ,, | 1 | அதிவிடயம் | ,, | 1 |
| கோரைக்கிழங்கு | ,, | 1 | சர்க்கரை | ,, | 30 |

செய்பாகம்:—வெப்பாலைமரப்பட்டையை இடித்து ஒரு பெரிய மட்பாண்டத்தில்போட்டு 32-படி சலம்விட்டு அடுப்பிலேற்றி எட்டிலொன்றாய்க் காய்ச்சிப் பிசைந்து வடிகட்டி மீண்டும் வேறு அகண்ட பாத்திரத்தில் விட்டு அதனுடன் சர்க்கரையைக் கூட்டி அடுப்பிலிட்டு மிருதுவாக எரித்து பாகுபதம் வருஞ்சமயம் மற்றைய சரக்குகளை இடித்துச் சூரணமாக்கித் தூவிக் கிண்டி அடுப்பிலிருந்திறக்கி, போதிய அளவு நெய் தேன்விட்டுப் பிசைந்து பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு சுண்டக்காய்ப் பிரமாணம் தினம் இருவேளை சாப்பிட பலநிறங்களுடன் பேதியாகும் கொடிய அதிசாரம், கிராணி, சீதரத்தபேதி, மூலரத்தம் முதலியவைகள் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—ஜீரணசக்திக் கேற்றவாறு ஆகாரத்தைக் கொடுத்தல்வேண்டும்.

### 55. மூலநிவாரண லேகியம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சரக்கு:— | தென்னம்பூச்சாறு | படி | $\frac{1}{4}$ | செங்கத்தாரிப்பட்டை | ப-ம் | 1 |
| (1) | மாதுளம்பழத்தோல் | பலம் | 1 | ஆவாரம்பட்டை | ,, | 1 |
| | மருள்கிழங்கு | ,, | 1 | புளியங்கொட்டைத்தோல் | | 1 |
| | காட்டுகருணை | ,, | 1 | ஆவாரைவித்து | ,, | 1 |
| | கறிகருணை | ,, | 1 | களிப்பாக்கு | ,, | 1 |
| (2) | ஏலம் | வராகனெடை | 1 | கிராம்பு | வராகனெடை | 2 |
| | இலவங்கப்பட்டை | பலம் | 1 | ஜாதிக்காய் | ,, | 2 |
| | ஜாப்பத்திரி | வராகனெடை | 1 | | | |
| (3) | மிளகு | பலம் | $\frac{1}{2}$ | சீரகம் | பலம் | $\frac{1}{2}$ |
| | அதிமதுரம் | ,, | | விளாம்பிசின் | ,, | |
| | கோஷ்டம் | ,, | | காய்ச்சுகட்டி | ,, | |
| | வசம்பு | ,, | | வால்மிளகு | ,, | |

செய்பாகம்:—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை தென்னம்பூச் சாற்றால் அரைத்து வைத்துக் கொள்க.

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை பசுவின்பால் விட்டு அரைத்து வைத்துக்கொள்க.

மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை இடித்துச் சூரணித்து வைத்துக்கொள்க.

இதற்குமேல் ஒரு பெரிய இரும்பு கடாயை அடுப்பிலேற்றி அரைப்படி பசுவின்பாலை விட்டு $\frac{3}{4}$-வீசை சர்க்கரையை யிட்டுக் கரைத்து பாகுபதம்வர மிருதுவாக எரித்து முதலிரண்டாவது அங்கத்தில் சித்தப்படுத்தியுள்ள கற்கத்தைப்போட்டுக் கரைத்து கிளறி லேகியபதம் வரும்போது மூன்றாவது அங்கத்தில் சித்தப்படுத்திய சூரணத்தைத் தூவிக்கிண்டி லேகியத்திற்கு போதிய நெய் தேன் விட்டுப் பிசைந்து பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு கொட்டைப்பாக்கு அளவு தினம் இருவேளை 7-நாள் சாப்பிட இரத்தமூலம், சீழ்மூலம், ஆசனக்கடுப்பு, மூலக்கிராணி இவைகள் தீரும்.

## 56. காராமை லேகியம்

சரக்கு:—கருப்பு ஓட்டை போர்வையாக உடைய ஓர் ஆமையைக் கொண்டுவந்து இரத்தம் போக்காமல் வெந்நீரிலிட்டு அவித்து ஓடு நீக்கி எடுத்த மாம்சம் பலம் 5, வெங்காயம் பலம் 5, ஏலம், இலவங்கப்பட்டை, கிராம்பு, சோம்பு, தனியா, ஜாதிக்காய், ஜாப்பத்திரி, மஞ்சள் வகைக்கு பலம் $\frac{1}{4}$.

செய்பாகம்:—முதலில் காராமை மாமிசத்தையும் வெங்காயத்தையும் ஒருமிக்க அம்மியிலிட்டு வெண்ணெய்போ லரைத்து ஒரு கடாயில் போட்டு அடுப்பிலேற்றி வெந்து குழைவதற்குப் போதிய அளவு நெய்விட்டுக் கிண்டி லேகியபதம் வருஞ்சமயம் மற்றையச் சரக்குகளை இடித்துச் சூரணம் செய்துப்போட்டுக் கிண்டி பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு நெல்லிக்காய் பிரமாணம் தினம் இருவேளையாக சாப்பிட்டுவர இரத்தமூலம், மூலக்கிராணி முதலியவைகள் தீரும்.

குறிப்பு:—இத்தகையே காராமைக்குப் பதில் நத்தை மாமிசத்தை கூட்டிச்செய்வது முண்டு. இதுவும் முற்கூறப்பட்ட ரோகத்தை நிவர்த்திசெய்யும்.

## 57. சிந்தாதி லேகியம்

| | | | | |
|---|---|---|---|---|
| சரக்கு:—ஆறுமாதக்காடி | படி 5 | இடித்தபுளியம்இலை | பலம் | 40 |
| (1) புளித்தமோர் | படி 5 | இரும்புத்துப்பு | ,, | $2\frac{1}{2}$ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2) கரிசலாங்கண்ணிச்சாறு | படி | 1 | சிறுகீரைச்சாறு | படி | ½ |
| இஞ்சிச்சாறு | ,, | ½ | செருப்படைச்சாறு | ,, | |
| பழச்சாறு | ,, | | தென்னம்பூச்சாறு | ,, | |
| நெருஞ்சிச்சாறு | ,, | | கீழ்வாய்நெல்லிச்சாறு | ,, | |
| ஆவின்பால் | படி | 2 | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| (3) சுக்கு | பலம் ½ | சடாமாஞ்சில் | பலம் ½ |
| மிளகு | ,, | சீரகம் | ,, |
| திப்பிலி | ,, | வால்மிளகு | ,, |
| ஓமம் | ,, | ஏலம் | ,, |
| கடுக்காய் | ,, | கிராம்பு | ,, |
| நெல்லிக்காய்வற்றல் | ,, | தாளிசபத்திரி | ,, |
| தான்றிக்காய் | ,, | இலவங்கப்பட்டை | ,, |
| கோஷ்டம் | ,, | ஆனைத்திப்பிலி | ,, |

செய்பாகம்:—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள நான்கு சரக்குகளையும் ஒருபெரிய மட்கடத்தில் விட்டு அடுப்பிலேற்றி ஒரு படியாகச் சுண்டக்காய்ச்சி வடித்து மற்றோர் பொருத்தமான மட் பாண்டத்தில்விட்டு அரைவீசை பனைவெல்லமும், இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள 9-திரவங்களையும் விட்டுக் கரைத்து மீண்டும் அடுப்பிலேற்றி மிருதுவாக எரித்துக் குழம்புபதமாக வருஞ்சமயத்தில் மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள 16-சரக்கு களை பொன்மேனியாக வறுத்து இடித்துச் சூரணித்துத் தூவிக் கிண்டி லேகியப்பதமாக இறக்கி போதிய அளவு நெய் தேன் இவை யிரண்டையும் கூட்டிப் பிசைந்து பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் தினம் இருவேளை சாப்பிட்டுவர மகோதரம், பீலிகை, சோகை, பாண்டு, கிராணி, அக்கினிமந்தம், வயிற்றுப்பொருமல் எல்லாம் குணமாகும்.

பத்தியம்:—இச்சாபத்திய விதிப்படி அன்னம் கொடுத்தல் வேண்டும். சிலசமயம் வியாதி பிரபலப்பட்டிருந்தால் புளித்தள்ளி கொடுக்க தீவரத்தில் குணமுண்டாக்கும்.

58 துன்மதுடார லேகியம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—பனவெல்லம் | பலம் | 10 | வெங்காரம் | பலம் | 1 |
| நவாச்சாரம் | ,, | 1 | வளையலுப்பு | ,, | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெடியுப்பு | பலம் | 1 | சுத்திப்பூநீர் | பலம் | 1 |
| இந்துப்பு | ,, | 1 | சூடம் | ,, | 1 |
| சோற்றுப்பு | ,, | 1 | வெள்ளாட்டுஅமுரி படி | | ½ |

செய்பாகம்:—ஒரு பழகின மட்பாண்டத்தில் பனவெல்லத்தையும் வடிகட்டின வெள்ளாட்டு அமுரியையும் விட்டுக் கரைத்து அடுப்பிலேற்றி மிருதுவாக எரித்து பாகுபதம் வருஞ்சமயத்தில் மற்றையச் சரக்குகளை இடித்துச் சூரணித்து தூவிக் கிண்டி லேகியபதமாக இறக்கி ஆறவைத்து சுரண்டி எடுத்துக்கல்வத்திலிட்டு தேன் விட்டு இடித்து மெழுகுபதமாக்கி வாயகண்டபீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குச் சிறு சுண்டக்காய்ப் பிரமாணம் தினம் இருவேளை தனியாகவேனும் அல்லது சூதப்பற்பத்துடன் சேர்த்தேனும் கொடுத்துவர வலிகுன்மம், சத்திகுன்மம், அஜீரணம், வயிற்றுப்பசம் முதலியவைகள் நீங்கும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

---

## தைல இலம்பகம்.

### 59. கலிங்காதி எண்ணெய்

வரித்தும்மட்டிக் காயின்சாறு, வெங்காயச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, சிற்றாமணக்கெண்ணெய் வகைக்குப் படி 1, இஞ்சிரசம் படி-¼ இவைகளை ஒருபழகினமட்பாத்திரத்திலிட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து கொதிக்கும்போது சீரகம்,தனியா, சதகுப்பை, லவங்கம், லவங்கப்பட்டை, மஞ்சள், ஏலம் இவைகளின் சூரணம் வகைக்குப்பலம் ½-யாக ஒருமிக்கக் கலந்து தூவி பதமுறக் காய்ச்சி வடித்து சீசாவில் பத்திரப்படுத்துக.

ஸ்ரீகளுக்கு மாதாந்தர விலக்கமுள்ள காலத்தில் காலைநேரத்தில் தினம் ஒருவேளையாக ½-பலம்எண்ணெய் வெந்நீரிலிட்டு கொடுக்க பேதியாகும். இந்த அளவானது தேகத்தின் வன்மை மென்மைக்கேற்றதாயிருத்தல் வேண்டும்பேதி அதிகமாயின் குறைத்துகொள்க. பேதிசரிவர இல்லையாயின் சிறிது அதிகப்படுத்திக்கொள்க. எங்ஙனமெனினும் 4-5-தடவைக்கு குறையாமல் ஆவதே உத்தமம். இப்படி 3-நாள் அல்லது 5-நாள் கொடுத்துவரின் வயிற்றுநோவு, உப்பசம், பீலிகரோகம் மகோதரம், சூதகவாயு முதலியவைகள் நீங்கும்.

### 60 வேறு

தும்மட்டிக்காய் சாறு தோலா 6, வெங்காயச்சாறு தோலா 4, இஞ்சிச்சாறு தோலா 4, பச்சை தும்பராஷ்டச் சாறு தோலா 4, புங்கம்பால் தோலா 4, சிற்றாமணக் கெண்ணெய் தோலா 9 இவைகளை ஒருமிக்கக் கலந்து ஒரு பழகின மட்பாண்டத்திலிட்டு அடுப்பிலேற்றிப் பதமுறக் காய்ச்சி வடித்துச்சீசாவிலிடவும்.

தினம் ஒருவேளை காலைநேரத்தில் $\frac{1}{2}$-பலம் வீதம் வெந்நீரில் கலந்து கொடுக்க பேதியாகும். இப்படி 3-நாள் கொடுக்கவும்; இன்னும் தாங்கக்கூடிய தேகமாக இருந்தால் 5-நாள் வரையிலும் கொடுக்கலாம். இப்படி மாதம் மாதம் விலக்ககாலத்தில் கொடுக்க பூர்ணமாக சூதகவாயு, வயிற்றுநோய், மகோதரம், கபசம்பந்தமான இருமல், சுவாச காசம் முதலிய வியாதிகள் நீங்கும்.

குறிப்பு:—தும்பராஷ்டம் இதுவே பேராத்தை. இதுபச்சையாகக் கிடைப்பதரிதானால் உலர்ந்ததைக் கியாழமிட்டுச் சேர்த்துக் கொள்க.

### 61 மேகத்தெண்ணெய்

சரக்கு:—வெங்காயச்சாறு — கரிசாலைச்சாறு
எலுமிச்சம்பழச்சாறு — கற்பூரவள்ளியிலைச்சாறு
செப்புநெரிஞ்சிச்சாறு — பூவரசங்காய்ச்சாறு
சங்கன்குப்பியிலைச்சாறு வகைக்குபடி அரைக்கால்

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஏழுமூலிகைகள் சாற்றை ஒருங்கு சேர்த்து வடிகட்டி ஒருபழகின மட்பாண்டத்தில்விட்டு அதனுடன் ஒருபடி சிற்றாமணக்கெண்ணெயைவிட்டு வண்டல் மெழுகு பதம் திரளக்காய்ச்சி வடிகட்டி சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—தினந்தோறும் காலையில் தேகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு $\frac{3}{4}$ அல்லது அரை பலம்வீதம் கொடுக்கநாலைந்து முறைபேதியாகும். இப்படி 3-5 நாள் கொடுக்க கிரந்தி, அரையாப்பு, கொறுக்கு, வெடிசூலை, புண்புரைகள் எல்லாம் குணமாகும்.

பத்தியம்:—உப்பில்லாத கடும்பத்தியமாக வைத்தல் நன்று.

குறிப்பு:—உள்ளுக்குக் கொடுக்கும்படியாகக் கூறப்பட்டுள்ள எண்ணெய்களெல்லாம் பேதிபாகும் சுபாவமுடையதாதலால், ஆங்காங்குக் கூறப்பட்டுள்ள அளவில் பேதி சரிவர ஆகாவிட்டால் மறுநாள் சிறிது அதிகப்படுத்தியும், பேதி அதிகமாயின் மறுநாள்சிறிது

குறைத்தும் அவரவர் தேகதிடத்திற் கேற்றவாறு சரிப்படுத்திக் கொள்ளல் பண்டிதரின் கடமையாகும். இன்னும் பத்தியத்துடன் எத்தனைநாள் எண்ணெய் கொடுக்கப்படுகின்றதோ அத்தனைநாள் அவ்விதப் பத்தியமே யிருந்து பச்சை எண்ணெய் கூட்டி ஸ்நானம் செய்விக்காமல் முக்கூட்டு எண்ணெயைக் காய்ச்சி ஸ்நானம் செய்வித்து மறுநாள் எல்லாப் பதார்த்தங்களையும் கூட்டலாம்.

### 62. மேகசஞ்சீவி எண்ணெய்

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—(1) | கோவையிலைச்சாறு | படி | $\frac{1}{2}$ |
| | பொன்னாங்காணிச்சாறு | ,, | |
| | வல்லாரைச்சாறு | ,, | |
| | செருப்படைச்சாறு | ,, | |
| | ஆனைநெருஞ்சிச்சாறு | ,, | |
| | சீந்தில்தண்டுச்சாறு | ,, | |
| | அரசம்பட்டைச்சாறு | ,, | |

(2) ஆமணக்கெண்ணெய் படி $\frac{3}{4}$ எள்ளெண்ணெய் படி $\frac{3}{4}$

கல்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| (3) சாதிக்காய் | கழஞ்சு 2 | காட்டாத்திப்பூ | கழஞ்சு | 2 |
| சாதிபத்திரி | ,, | சிறுநாகப்பூ | ,, | |
| மாசிக்காய் | ,, | ஏலம் | ,, | |
| கற்கடகசிங்கி | ,, | குரோசாணி ஓமம் | பலம் | 1 |
| சண்பகப்பூ | ,, | | | |

செய்பாகம்:—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள ஏழு மூலிகைச்சாற்றையும் ஒருங்கு சேர்த்து வடிகட்டி ஒரு அகண்ட பெரிய மட்பாண்டத்தில் விட்டு அடுப்பிலேற்றி இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட இரு எண்ணெய்களையும் விட்டு கொதிவரச் சிறு தீயாக எரித்து மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்ட 9-கல்கங்களையும் இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லிலிட்டு போதிய பசுவின் பால்விட்டு மைபோலரைத்து, முன் எண்ணெயில் கொஞ்சங்கொஞ் சமாக விட்டுக் கலக்கி மெழுகுபதம் காண எரித்து வடிகட்டி சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—தினம் காலைநேரத்தில் உச்சிக்கறண்டி வீதம் சீனாகற்கண்டுதூள் போட்டு சாப்பிட்டுவர மேகவிரணம், கிரந்தி, லிங்கப்புத்து, யோனிப்புத்து, வெடிசூலை, மேகஊறல், சொறி, சிரங்கு, சீழ், இரத்தம், பிரமேகங்கள் எல்லாம் தீரும்.

## 63. பிரமதண்டு எண்ணெய்

| | | |
|---|---|---|
| சரக்கு:—பிரமதண்டுசமூலசாறு | படி | ¼ |
| வெள்ளறுகுசாறு | ,, | |
| புங்கம்பால் | ,, | |
| வல்லாரையிலைச்சாறு | ,, | |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட நான்கு சாற்றையும் ஒரு மட்பாண்டத்தில் விட்டு அதனில் 1-படி சிற்றாமணக்கெண்ணெய் விட்டுக் கலக்கி அடுப்பிலேற்றி மெழுகுபதம் வர சிறுக எரித்து வடிகட்டிப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—தினம் ஒருவேளை காலை நேரத்தில் ½-பலம்தேகத்தின் மென்மை வன்மைக் கேற்றவாறு கொடுக்க நாலைந்துமுறை பேதியாகும். இப்படி 3-5-நாள் கொடுக்க அரையாப்பு, கிரந்தி, கொறுக்கு, மேகசூலை, சொறி, சிரங்கு, பிரமியம் எல்லாம்தீரும்.

குறிப்பு:—இந்தப்பிரமதண்டு எண்ணெயுடன் சிறிது பூரஞ்சேர்த்துக்கொடுத்துவரின் தீவரத்தில் முற்கூறப்பட்ட ரோகங்கள் நிவர்த்தியாகும். அங்ஙனம் கருதின் ஐந்துபலம் படிகாரத்தைப் பொடித்து ஒருபுதுமண்ணோட்டில்போட்டு அடுப்பிலேற்றி எரித்து உருகி வரும்போது ஒருபலம் பூரக்கட்டியைப் போட்டு புறட்டிப்புரட்டிக் கொடுத்துவரவும். இவ்விதமாகப் படிகாரமெல்லாம் நீர்சுண்டி பூக்கும்போது பூரத்தை அப்புறப்படுத்தி கல்வத்தில்போட்டு அரைத்து பத்திரப்படுத்துக. இதனில் குன்றி எடை ஷை எண்ணெயில் கலந்து கொடுத்தல்வேண்டும்:—

## 64. கரிசாலை எண்ணெய்

கரிசலாங்கண்ணி இலைச்சாறு, சிற்றாமணக் கெண்ணெய் வகைக்கு பலம் 5-ஆக ஒரு பழகின மட்பாண்டத்திலிட்டு அதில் ஒரு பலம் வெள்ளைப்பூண்டை சிறு துண்டுகளாக நறுக்கிப்போட்டு அடுப்பிலேற்றி பதமுறக்காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு தினம் காலைநேரத்தில் ½-¾ பலம் தேகத்தின் மென்மை வன்மைக் கேற்றவாறு சாப்பிட இரண்டு மூன்றுமுறை பேதியாகும் இப்படி 3-5 நாள் கொடுத்து புளிதள்ளி இச்சாபத்தியமாக வைக்க காமாலை தீரும்.

## 65. காலருத்திராங்க எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—சிற்றாமணக்கெண்ணெய் | படி | 1 | மிளகரணைச்சாறு | படி | 1 |
| கண்டங்கத்திரிசமூலச்சாறு | ,, | 1 | வாகைச்சாறு | ,, | 1 |
| மாவிலங்கபட்டைச்சாறு | ,, | 1 | வெள்ளாட்டுப்பால் | ,, | 1 |
| கொண்ணையிலைச்சாறு | ,, | 1 | வாதமடக்கியிலைச்சாறு | | 1 |

கல்கம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முருங்கைவேர் | பலம் | 1 | சங்கம்வேர் | பலம் | 1 |
| சித்திரமூலம்வேர் | ,, | 1 | வெள்ளறுகு | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 | சுக்கு | ,, | 1 |
| ஓமம் | ,, | 1 | கிராம்பு | ,, | 1 |
| காயம் | ,, | 1 | கருஞ்சீரகம் | ,, | 1 |
| லவங்கப்பத்திரி | ,, | 1 | | | |

செய்பாகம்:—முற்கூறப்பட்டுள்ள எட்டுத்திரவங்களில் வெள்ளாட்டுப்பால் நீங்கலாக எல்லாவற்றையும் ஒருபெரிய மட்பாண்டத்தில்விட்டு அதனில் கல்கவகை பதினொன்றை வெள்ளாட்டுப்பால் விட்டு நெகிழவரைத்து மிகுதியுள்ள பாலில் கரைத்துச் சேர்த்து ரவிபுடமாக மூன்றுநாள் வைத்து அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து மெழுகுபதம் வரக்காய்ச்சி வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ½-¼-பலம் வீதம் தேகதிடத்திற்கேற்றவாறு தினம் 1-வேளைக் கொடுத்துவர நாலைந்து முறை பேதியாகும். இப்படி 3-5-நாள் கொடுக்க மண்டைவலி, குத்தல், சுழல் வாதம், இசிவுவாதம், அண்டவாதம், நடுக்கல்வாதம், இடுப்பு இசிவுவாதம், திமிர்வாதம், முடக்குவாதம் எல்லாம் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—கடும்பத்தியமாயின் நன்று அல்லது புளி தள்ளி இச்சாபத்தியமாகவாவது வைத்தல்வேண்டும்.

## 66. பூவரசம்பட்டை எண்ணெய்

| | | |
|---|---|---|
| சரக்கு:—பூவரசம்பட்டை | பலம் | 10 |
| செங்கத்தாரிப்பட்டை | ,, | |
| பூதகரப்பான்பட்டை | ,, | |
| கண்டங்கத்திரிசமூலம் | ,, | |
| நிலவாகைசமூலம் | ,, | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட 5-சரக்குகளையும் ஒன்றிரண்டாய் நறுக்கி ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு 8-படி சலம் விட்டு 1-படியாகக் காய்ச்சி பிசைந்து வடிகட்டி அதனை மற்றோர் பொருத்தமான பாண்டத்தில் விட்டு அதனுடன் ஒருபடி சிற்றாமணக்கெண்ணெய் விட்டுக் கலக்கி வைத்துக்கொள்க.

பின்னர் மிளகு, கருஞ்சீரகம், கார்போக அரிசி, வெள்ளைப் பூண்டு, வசம்பு, சதகுப்பை, வலம்புரிக்காய், பறங்கிப்பட்டை வகைக்கு கழஞ்சு வீதம் பொடித்து அம்மியிலிட்டு ஒருபடி வெள்ளாட்டுப்பால் சிறிது விட்டரைத்து மெழுகுபதமான பின்பு மிகுதியான வெள்ளாட்டுப்பாலில் கலக்கி முன் சுத்தப்படுத்திய எண்ணெயில் சேர்த்து மெழுகுபதம் வர மிருதுவாக எரித்துவடிகட்டிப்பத்திரப் படுத்துக

பிரயோகம்:—தேகத்தின் வன்மை மென்மைக் கேற்றபடி ¾-½ பலம் வீதம் காலையில் கொடுக்கப் பேதியாகும். இப்படி 3-5 நாள் கொடுத்துவரின் பலவிதமான கரப்பான் சொறி சிரங்கு இவைகள் இருந்த இடம் தெரியாமல் நீங்கும்.

பத்தியம்:—எவ்வளவுக் கெவ்வளவு பத்தியமாக வைக்கப்படுகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு சீக்கிரத்தில் குணங்காணும்.

### 67. கரப்பான் எண்ணெய்

சரக்கு:—சிறுகுருஞ்சான்வேர் கொடிப்பாலைவேர்
மிளகாரணைவேர் நிலவிளாவேர்
காட்டுமல்லிவேர் வசம்பு
ஆகாசகருடன்கிழங்கு

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் வகைக்கு பலம் இரண்டாக நிறுத்தெடுத்து ஒன்றிரண்டாய் நறுக்கி ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு 4-படி சலம்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து அரைபடியாகச் சுண்டக்காய்ச்சி அதனை பிசைந்து பிசைந்து வடிகட்டி வேறுபாண்டத்திலிட்டு ½-படி சிற்றாமணக்கெண்ணெய்விட்டுப் பதமுறக்காய்ச்சி வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—தினம் காலை நேரத்தில் 4-5 முறை பேதியாகும் படியாகத் தேகத்தின் மென்மை வன்மைக் கேற்றவாறு ½-¾ பலம் கொடுக்கவும் 3-5நாள் கொடுக்க சகலவிதமான கரப்பான் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று; கடும்பத்தியமாயின்வெகு தீவரத்தில் குணமாகும்.

68 வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—மூக்காட்டைவேர் | பலம் | 10 |
| பூதகரப்பான்பட்டை | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 |

செய்பாகம்:—இவைகளை இடித்து ஒருபழகின மட்பாண்டத்தில் போட்டு ஒருபடி விழுதியிலைச் சாறும் ஒருபடி சிற்றாமணக் கெண்ணெயும் விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து மெழுகு பதம்வர எரித்து வடிகட்டிப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—தினம் காலையில் தேகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு $\frac{3}{4}$-$\frac{1}{2}$-பலம் வீதம் கொடுக்க 4-5-முறை பேதியாகும் இப்படி 3-5-நாள் கொடுக்க சகலவிதமான கரப்பான் ரோகங்களும் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியம் வைத்தல் வேண்டும். கடும்பத்தியமாக இருப்பின் ரோகம் விரைவில் குணப்படும் என்பது உண்மை.

69. விப்புருதி எண்ணெய்

சரக்கு:—சிற்றாமணக்கெண்ணெய் படி 1 திப்பிலி பலம் $\frac{1}{2}$

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | நிலாவாரைச்சாறு படி அரைக்கால் | | | கருஞ்சீரகம் ,, | $\frac{1}{2}$ |
| | பிரமியிலை | ,, | | கஸ்தூரிமஞ்சள் ,, | $\frac{1}{2}$ |
| | பொடுதலை | ,, | | கடகரோகணி ,, | $\frac{1}{2}$ |
| | கோழியவரை | ,, | | வசம்பு ,, | $\frac{1}{2}$ |
| (1) | சின்னி | ,, | (2) | நீர்வெட்டிமுத்து ,, | $\frac{1}{2}$ |
| | வெள்ளறுகு | ,, | | நேர்வாளம் ,, | $\frac{1}{2}$ |
| | மலைவேம்பு | ,, | | காட்டுச்சீரகம் ,, | $\frac{1}{2}$ |
| | சங்கங்குப்பி | ,, | | வெள்ளைப்பூண்டு ,, | 1 |
| | கழற்சி | ,, | | கடுக்காய் ,, | 1 |
| | காட்டாமணக்கு | ,, | | | |

செய்பாகம்:—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள பதினொரு திராவகங்களை ஒன்றாகக் கலந்து ஒரு பாத்திரத்தில் விட்டு அதனுடன் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்ட கற்கங்களை இடித்துச்

சூரணம்செய்து அரைத்துப்போட்டு பதமுறக் காய்ச்சி வடித்து பத்திரப்படுத்தவும்.

பிரயோகம்:—காலையில் ஒருகரண்டி வீதம் கொள்ள 4-5-தரம் பேதிபாகும். இப்படி 5-7-நாள்கொள்ளவும். பேதியானபின்பு உப்பு புளிதள்ளி பத்தியம் செய்க. இதனால், பலவிதமாய் ஓடிஓடி கட்டு கிற விப்புருதி கட்டியும், அதனாலுண்டாகும் புண்ணும், அரை யாப்பும், பவுத்திரமும் குணமாகும்.

70. மேகநாதி எண்ணெய்

சரக்கு:—புங்கம்பட்டை, பிராயன்பட்டை, மாம்பட்டை, இலுப்பை, அழிஞ்சல்பட்டை, எட்டிப்பட்டை, ஓதிபம்பட்டை, சங்கம் பட்டை, குவளைபட்டை, புரசம்பட்டை, ஊழலாற்றிபட்டை, வேப் பம்பட்டை, பூவரசம்பட்டை, நிலவிளாப்பட்டை, சிவனார் வேம்பு ஆக விப்பதினைந்து பட்டைகளையும் வகைக்கு பலம் 10-ஆக இடி த்து ஒரு பெரிய மட்கடத்தில் போட்டு 16-படிக் தண்ணீர்விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து 2-படித் தண்ணீராக இருக்கும் சமயத்தில்பிசைந்து வடிகட்டி மறுபாண்டத்தில் வைத்துக்கொள்க.

இரண்டாவது ஆடுதின்னாப்பாளை, வெள்ளறுகு, கழற்சிஇலை, சங்கங்குப்பியிலை, செருப்படை, கொட்டைக்கரந்தையிலை, பொடுதலை யிலை ஆகிய இவற்றின் சாற்றை வகைக்குப் படி $\frac{1}{4}$-ஆகப் பிழிந்தெடு த்து வடிகட்டி முன் சித்தப்படுத்திய பாண்டத்தில் விட்டு அடுப்பி லேற்றி எரித்து குழம்புபதமானவுடன் இரண்டுபடி நல்லெண் ணெய் கூட்டி எரிக்கவும். அத்தருணம் பறங்கிச்சக்கை பலம் 2, குகிழ்போக்கிய சேங்கொட்டை பலம் 1, இடித்துத் தெள்ளி ஓடு போக்கித் தூவி எண்ணெய் பதம் கண்டவுடன் இறக்கி ஆறவிட்டு சீசாவில் அடைத்து நெற்புடத்தில் 3-மாதம் வைத்து உபயோகப் படுத்தவும்

பிரயோகம்:—வேளைக்கு உச்சிக்கரண்டி வீதம் தினம் இரு வேளை சாப்பிடவும். இதனால் கைகால் முடக்கு, தடிப்பு, குஷ்டம், விரணம், மதுமேகம், சொறி, சிரங்கு, படை, தேமல், பவுத்திரம், புத்துகள், கிரந்தி, அரையாப்பு, கண்டமாலை, கற்றாழைநாற்றம், மலடு முதலிய பல ரோகங்களும் தீரும். இதன் பெருமையைச் சொல்லவேண்டியதென்றால் சகலரோகங்களும் இவ்வெண்ணெயை க்கண்டவுடன் சரணம்புகு மென்பதாம்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல்வேண்டும்.

குறிப்பு:—இந்தப்பாகத்தில் பசுவின்நீர், வெள்ளாட்டுநீர், கேசரிநீர் வகைக்கு படி $\frac{1}{2}$, கேசரி சாணி பலம் 10, போட்டுக் கரைத்து வடிகட்டி முன் எண்ணெய்எரிக்கும்போது சேர்த்துக்காய்ச்சுவதும் உண்டு.

## 71. அரக்குத் தைலம்

சரக்கு:—கொம்பரக்கு நடுவிலிருக்கும் குச்சிகளைத் தள்ளி சுத்தமாக எடுத்த 8-பலம் அரக்கைப் பொடிசெய்து கிழிகட்டி 8-படி ஆற்று நீரிலாழ்ந்திருக்கும்படி தொங்கக்கட்டி அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து ஒருபடியாகச் சுண்டக்காய்ச்சி வடித்துக்கொள்க.

(2) நல்லெண்ணெய், பசுவின்பால் வகைக்குப் படி-1, அன்னக்காடி; ததிமஸ்து வகைக்குப் படி-$\frac{1}{4}$.

(3) சந்தனத்தூள், அகில்கட்டை, வெட்டிவேர், குருவிவேர், கஸ்தூரிமஞ்சள், இலவங்கப்பட்டை, கோஷ்டம், இலவங்கப்பத்திரி, பச்சிலை, அதிமதுரம், சடாமாஞ்சில், மிளகு, சோம்பு, சுக்கு, சாதிபத்திரி, பச்சைகிச்சலி கிழங்கு, கடகரோகணி, ஏலம், சதகுப்பை, கிளியூரம்பட்டை, சீரகம் வகைக்குப் பலம்-$\frac{1}{4}$

செய்பாகம்:—மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள கடைச்சரக்குகளை நன்றாய்ச் சூரணித்து பால்விட்டரைத்து முதலிரு அங்கங்களில் கூறப்பட்டுள்ள திரவத்துடன் ஒருங்கு சேர்த்துக் கரைத்து அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதமாக வரும் பதத்தைக்கண்டு வடித்து ஆறவிட்டு சீசாவில் அடைத்து வாய்க்கு அடைப்பிட்டு தானிய புடம்வைத்து எடுக்கவும்.

பிரயோகம்:—இத்தைலத்தால் வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்துவரின் புராதனசுரங்கள், நளிர் சுரம், தேகக்கடுப்பு, தலைவலி, பிடரிவலி, சுவாசகாசம், பாண்டு முதலிய பலரோகங்கள் தீரும்.

பத்தியம்:—அன்று புளிதள்ளி பத்திய மிருப்பதுடன் பகல் நித்திரையாகாது.

## 72. அஸ்வகந்திபலாலாக்ஷாதி தைலம்

சரக்கும், செய்பாகமும்:—10 பலம் அமுக்கிராக்கிழங்கு, 10-பலம் சிற்றாமுட்டிவேர், இவையிரண்டையும் சிறுதுண்டுகளாக

நறுங்கிச் சிதைத்து ஒரு மட்பாண்டத்தில் போட்டு 8-படி ஆற்றுசலம் விட்டு அதனில் 10-பலம் கொம்பரக்குத் தூளைக் கிழி கட்டித்தொங்கவிட்டு அடுப்பேற்றி எரித்து இரண்டுபடியாகச் சுண்டக்காய்ச்சிவடித்து அதனுடன் 1½-படி நல்லெண்ணெயும் 6-படி ததிமஸ்துவையும் கூட்டிய பின்னர் விலாமிச்சம்வேர், அரத்தை, அதிமதுரம், மஞ்சிஷ்டி, சதகுப்பை, கோஷ்டம், கப்புமஞ்சள், சந்தனத்தூள், மோடி, காட்டுமிளகு, கடகரோகணி, தேவதாரம், கோரைக்கிழங்கு, நன்னாரி வகைக்குப் பலம்-¼ ஆகச் சூரணித்து பால்விட்டரைத்து எடுத்தகல்கத்தைக்கலந்து அடுப்பேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதம் வருந்தறுவாயில் வடித்து ஆறவிட்டு சீசாவிலடைத்து தானியபுடம் வைத்து உபயோகப்படுத்தவும்.

பிரயோகம்:—இத்தைலத்தால் வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்துவரின் சர்வ பழையசுரங்கள் நிவர்த்தியாகும்.

குறிப்பு:—ததிமஸ்து என்பது தயிரை ஒரு சீலையில் முடிச்சு கட்டி தொங்கவைத்து அடியில் பாத்திரம் வைத்து சொட்டும் சலத்தைச் சேகரிப்பதாம்.

### 73. அரக்துசந்தனுதி தைலம்

சரக்கு:—(1)

| | |
|---|---|
| கொம்பரக்கு | பலம் 10 |
| சந்தனத்தூள் | ,, |
| சிற்றாமுட்டிவேர் | ,, |
| விலாமிச்சம்வேர் | ,, |

கல்கம்

(2)

| | | | |
|---|---|---|---|
| சந்தனத்தூள் | கழஞ்சு 2 | சண்பகப்பூ | கழஞ்சு 2 |
| விலாமிச்சம்வேர் | ,, | கிச்சிலிக்கிழங்கு | ,, |
| அதிமதுரம் | ,, | கோஷ்டம் | ,, |
| சதகுப்பை | ,, | அகில் | ,, |
| கடகரோகணி | ,, | மரமஞ்சள் | ,, |
| தேவதாரு | ,, | கோரைக்கிழங்கு | ,, |
| மஞ்சள் | ,, | ஏலரிசி | ,, |
| மஞ்சிஷ்டி | ,, | லவுங்கப்பட்டை | ,, |
| சிற்றாமுட்டி | ,, | சிற்றரத்தை | ,, |
| மெருகன்கிழங்கு | ,, | செஞ்சந்தனம் | ,, |
| சிறுநாகப்பூ | ,, | நன்னாரி | ,, |
| கொம்பரக்கு | ,, | அல்லிக்கிழங்கு | ,, |
| வெட்டிவேர் | ,, | | |

செய்பாகம்:—முதல் அங்கத்தில் கூறப்பட்டுள்ள நான்கு சரக்குகளில் கொம்பரக்கு நீங்கலாக மற்றவற்றைக் கல்லுரலில்போட்டு நன்றாய்இடித்து ஒருபழகினபெரிய மட்கடத்தில்போட்டு, அதனில் 8-படி சலம் விடுவதுடன் கொம்பரக்கைத் தூள்செய்து, தளர்ச்சியாக ஒருசீலையில் முடிச்சுகட்டி ஷை சலத்தினுள் அமர்ந்திருக்க தொலாந்தரமாகக்கட்டி அடுப்பிலேற்றி சிறுதீயாகஎரித்து ஒருபடியாகச் சுண்டக்காய்ச்சி நன்றாய்ப் பிசைந்து வடிகட்டி வைத்துக்கொள்க.

இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள கல்கம் இருபத்தைந்தைக்கல்லுரலி லிட்டு நன்றாய் இடித்து வஸ்திரகாயம் செய்து அம்மியிலிட்டு இரண்டுபடி. பசுவின்பாலில் கொஞ்சங்கொஞ்சமாக விட்டரைத்து மிகுதியுள்ள பாலில் கலக்கி வைத்துக்கொள்க.

இங்ஙனம் சித்தப்படுத்திய இரண்டு அங்கங்களிலுள்ள திரவங்களை ஒருபொருத்தமான பழகின மட்பாண்டத்தில் விட்டு அதனுடன் ஒருபடி நல்லெண்ணெய் விட்டு அடுப்பிலேற்றி பதமுறக் காய்ச்சிப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதனை யுடனே உபயோகப்படுத்தாமல் குறைந்தது $\frac{1}{2}$-மண்டலம் நெற்புடமாக வைத்தெடுத்து வாரம் ஒருமுறை ஸ்நானஞ் செய்துவர சுரம், சுவாசகாசம், க்ஷயம், பீநசம், சொறி, சிரங்கு, தலைவலி முதலியவைகள் நிவர்த்தியாகும். இன்னும் சுரரோகத்திலிருந்து குணப்பட்டவர்களுக்கும் சுவாசகாசமுதலிய ரோகத்தில் தேகம் இளைத்தவர்களுக்கும் ஸ்நானம் செய்ய உத்தமமான தைலமென்றறிக.

பத்தியம்:—ஸ்நானம் செய்ததினம் புளிதள்ளிப் பத்தியமாக இருத்தல்வேண்டும்.

### 74. நாகராதி தைலம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—மேல்தோலைச்சீவிய சுக்கு | பலம் | 40 |
| நல்லெண்ணெய் | படி | 1 |
| பசுவின்பால் | ,, | 1 |

கல்கம்

| | |
|---|---|
| சிற்றரத்தை | கடுகரோகணி |
| சுக்கு | கோஷ்டம் |
| மிளகு | சித்திரமூலம்வேர் |
| திப்பிலி | தேவதாரு |

கோரைக்கிழங்கு
மஞ்சிஷ்டி
கடுக்காய்
நெல்லிவற்றல்
தான்றிக்காய்
அகில்
தண்ணீர்விட்டான்கிழங்கு
எருக்கம்வேர்பட்டை
சந்தனக்கட்டை
வெள்ளைகுங்கிலியம்
செவ்வியம்
ஆமணக்கின்வேர்
பேரீச்சங்காய்
திராட்சைபழம்
இந்துப்பு

செய்பாகம்:—சுக்கைச் சிறுதுண்டுகளாக நறுக்கி ஒரு பழகின பெரிய மட்கடத்தில் போட்டு 16-படி சலம்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்துச் சுமார் இரண்டுபடியாகச் சுண்டிவருஞ் சமயத்தில் கீழ் இறக்கி ஆறவிட்டுப் பிசைந்து பிசைந்து வடிகட்டி மீண்டும் தைலம் காய்ச்சுவதற்காகச் சித்தப்படுத்தியுள்ள ஒரு மட்பாண்டத்தில் விட்டு அதனில் கல்கங்களை யிடித்துச் சூரணித்து அம்மிக்கல்லி லிட்டு பசுவின்பாலா லரைத்துக் கூட்டி மற்றுமுள்ள பசுவின் பாலையும் நல்லெண்ணெயையும் விட்டுக்கலக்கி அடுப்பிலேற்றி எரித்து வண்டல் மெழுகுபதமாகத் திரளும்சமயம் வடித்து கஸ்தூரி குங்குமப்பூ வகைக்கு எட்டு குன்றியெடைத் தூள்செய்து போட்டு குப்பியிலிட்டு வாய்மூடி நெற்புடம் வைக்கவும்.

பிரயோகம்:—இதனை வாரத்திற்கு ஒருமுறை ஸ்நானம்செய்ய தலைபாரம், தலைவலி, சுரம், கோழைக்கட்டு முதலியவை நிவர்த்தியாகும் இதனை நாசியில்விட பீநசரோகம், தலைவலி நிவர்த்தியாகும். இதனை வாயிலிட்டுக் கொப்பளிக்க பல்லரணை, பற்களின் வேரைப்பற்றிய வாதரோகங்கள் நிவர்த்தியாகும். இதனைக் காதில் விட கர்ணசூலை முதலிய வியாதிகள் தீரும்.

## 75. இஞ்சிமுலைப்பால் தைலம்

இஞ்சியை சுத்தமாக அலம்பி அம்மிக்கல்லிலிட்டு அரைத்துப் பிழிந்து சுண்ணும்பு நீக்கிய சாறு படி-½, முலைப்பால் படி ½ இவையிரண்டையும் ஒருமிக்க ஒரு இரும்புவாணலிலாவது பழகின மட்பாண்டத்திலாவது விட்டு அடுப்பிலேற்றி சிறுக எரித்து வண்டல் மெழுகுபதம் திரளும்போது வடித்துப்பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வாரம் இருமுறை இந்த தைலத்தில் ஸ்நானம் செய்துவர சந்திராவர்த்தம், சூரியாவர்த்தம், இன்னும் சிரசில் உண்டான நீர்கோவை, தலைபாரம், குடைச்சல் வலி முதலியயாவற்றையும் பரிகரிக்கும்.

### 76. பிருங்காமலகத் தைலம்

| | | |
|---|---|---|
| சரக்கு:— நரிசாலைச்சாறு | படி | 1 |
| நெல்லிக்காய்ச்சாறு | ,, | 1 |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | 1 |
| பசுவின்பால் | ,, | 1 |
| நல்லெண்ணெய் | ,, | 1 |

கற்கம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சந்தனம் | பலம் | 1 | வெட்டிவேர் | பலம் | 1 |
| கோஷ்டம் | ,, | 1 | விலாமிச்சம்வேர் | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | 1 | கடகரோகணி | ,, | 1 |
| அரத்தை | பலம் | 1 | | | |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட ஐந்து திரவங்களையும் ஒரு பழகின மட்பாண்டத்திலிட்டு அதனில் பின் கூறப்பட்டுள்ள ஏழுகற்கங்களையும் இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லி லிட்டு பால்விட்டு அரைத்துக் கலக்கி மூன்றுநாள் ரவிமுகத்தில் வைத்து நான்காவது நாள் அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதம் வருஞ்சமயம் உடனே வடித்து ஆறவிட்டு குப்பியில்விட்டு வாயடைத்து தானியபுடம் வைத்தெடுக்கவும்.

பிரயோகம்:—இந்தத் தைலத்தால் வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்துவர பித்தரோகம், சிரோரோகம், நேத்திரரோகம் முதலியவற்றை நிவர்த்திசெய்யும், கண்களுக்குக் குளிர்ச்சியைத் தரும்.

பத்தியம்:—அன்றுபகல் நித்திரையும் அலைச்சல் திரிச்சல் முதலியவற்றையும் தடுப்பதுடன் புளிதள்ளிப்பத்தியமாக ஆகாரம் செய்க.

### 77. கீழ்வாய்நெல்லித் தைலம்

இருபத்தைந்து பலம் நிழலிலுலர்தி எடுத்த கீழ்வாய்நெல்லி சமூலத்தை சிறுதுண்டுகளாக நறுக்கி ஒரு பழகின பாண்டத்தில் போட்டு 16-படி சலம்விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து 2-படியாகச் சுண்டின சமயம் வடித்து மற்றோர் பொருத்தமான

பாண்டத்தில் விட்டு அதனுடன் இரண்டுபடி நல்லெண்ணெயும் கடுக்காய் வேப்பம்பிசின் வகைக்கு ஒருபலமாக பாலில் அரைத்தெடுத்த கலவையையும் போட்டுக் கலக்கி மீண்டும் அடுப்பிலேற்றி ஒரே விதமாக சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதம் காணுஞ்சமயம் நாட்டுசர்க்கரைபலம் 5போட்டு வடித்து ஆறவிட்டு புட்டியில் பத்திரப்படுத்தி தானியபுடம் வைத்துஎடுத்துக்கொள்க.

பிரயோகம்:—இத்தைலத்தால் வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்துகொண்டுவர பித்தகிருகிருப்பு, வாய்நீரூறல், இரத்தபித்தம், எரிபித்தம் கைகால் காந்தல் மற்றும் பித்தத்தா லெடுத்த சகலரோகமும் தீரும்

### 78 டிக்காமல்லித் தைலம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—டிக்காமல்லி | தோலா | 1 |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | |
| கொம்பரக்கு | ,, | |
| பளிங்குசாம்பிராணி | ,, | |
| கார்போகஅரிசி | ,, | |
| சந்தனத்தூள் | ,, | |
| சடாமாஞ்சில் | ,, | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஏழு சரக்குகளையும் இடித்துச் சூரணித்து முலைப்பால் விட்டரைத்து அரைவீசை நல்லெண்ணெயில் கலக்கித் தைலப்பாண்டத்தில் விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதமாக வருஞ்சமயத்தில் வடித்து ஆறவிட்டுச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இத்தைலத்தால் வாரம் ஒருமுறை தலைமுழுகிவர சிரசில் உண்டான நீரேற்றம், தலைபாரம், சளுப்பு, சயித்தியத்தினுலுண்டாகும் தாள்கன்னமுதலிய வீக்கங்கள், அளவுகடந்த தும்மல் முதலிய ரோகங்களைப் பரிகரிக்கும்.

பத்தியம்:—அன்று போசனத்தில் புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

### 79 சம்பீரத் தைலம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—எலுமிச்சம்பழச்சாறு | படி | 4 |
| நல்லெண்ணெய் | படி | 1 |

கற்கம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நெய்தல்கிழங்கு | பலம் | ¼ | குங்குமப்பூ | பலம் | ¼ |
| சாதிக்காய் | ,, | | தக்கோலம் | ,, | |
| சந்தனம் | ,, | | சீரகம் | ,, | |
| மரமஞ்சள் | ,, | | கருஞ்சீரகம் | ,, | |
| கோஷ்டம் | ,, | | சுக்கு | ,, | |
| ஆனைத்திப்பிலி | ,, | | மிளகு | ,, | |
| வெட்டிவேர் | ,, | | திப்பிலி | ,, | |
| கிரந்திநாயகம் | ,, | | இந்துப்பு | ,, | |
| பச்சைகற்பூரம் | ,, | | பெருங்காயம் | ,, | |
| புளியங்கொட்டைத்தோல் | ,, | | ஓமம் | ,, | |

செய்பாகம்—முற்கூறப்பட்ட கற்கம் இருபதைச் சூரணித்துப் பால் விட்டரைத்து ஒரு பழகின தைலப்பாண்டத்தில்போட்டுளவு மிச்சம்பழச்சாற்றையும் நல்லெண்ணெயும் விட்டுக் கலக்கி அடுப்பி லேற்றி சிறுதீயாக எரித்து மெழுகுபதம் வருந்தறுவாயில் வடித்து ஆறவிட்டு சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இத்தைலத்தால் வாரம் ஒருமுறை ஸ்நானம் செய்துகொண்டுவர பித்தசம்பந்தமான பலரோகங்களேயும் மூளை யின் கொதிப்பையும் குணப்படுத்தும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 80. கோமூத்திரத் தைலம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—கோமூத்திரம் | படி | 1 |
| ஆவின்பால் | ,, | |
| கரிசாலேச்சாறு | ,, | |
| முசுமுசுக்கைச்சாறு | ,, | |
| நல்லெண்ணெய் | ,, | |

செய்பாகம்:—இக்கூறப்பட்ட ஐந்து திரவங்களேயும் ஒரு தைலப்பாத்திரத்தில் விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்துவண் டல் மெழுகுபதமாக வருஞ்சமத்தில் வடித்து ஆறவிட்டு குப்பி லடைத்து தானியப்புடம் வைத்து உபயோகப்படுத்தவும்.

பிரயோகம்:—இந்தத் தைலத்தைக்கொண்டு வாரம் ஒருமுறை தலை முழுகிவர சித்தப்பிரமை, பயித்தியம் முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல்வேண்டும்.

## 81. மஹாசந்தனாதித் தைலம்

சரக்கு:—உயர்ந்த சந்தனத்தூள் வீசை 2
(1) ஆவின்பால் படி 2
நல்லெண்ணெய் படி 2

கற்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| (2) | சந்தனத்தூள் | பலம் 1 | சீமைகிச்சலிக்கிழங்கு | பலம் 1 |
| | தேவதாரு | ,, | விலாமிச்சம்வேர் | ,, |
| | சடாமாஞ்சில் | ,, | வெட்டிவேர் | ,, |
| | கோஷ்டம் | ,, | செங்கழுநீர்க்கிழங்கு | ,, |
| | நெல்லிவற்றல் | ,, | தனியா | ,, |
| | மஞ்சள் | ,, | கோரைக்கிழங்கு | ,, |
| | அதிமதுரம் | ,, | இலுப்பைப்பூ | ,, |
| | திராட்சை | ,, | மகிழம்பூ | ,, |
| | மரமஞ்சள் | ,, | சண்பகப்பூ | ,, |
| | கஸ்தூரிமஞ்சள் | ,, | இலவங்கப்பத்திரி | ,, |
| | பெரும்நாகப்பூ | ,, | இலவங்கப்பட்டை | ,, |
| | வாய்விளங்கம் | ,, | சிறுநாகப்பூ | ,, |
| | ஏலம் பலம் | ,, | | |

(3) குங்குமப்பூ வராகனெடை 1
பச்சைகற்பூரம் ,, 1

செய்பாகம்:—ஒன்றாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சந்தனத்தூளை ஒரு வாயகன்றமட்பாண்டத்தில் போட்டு 16-படி சலம் விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து இரண்டுபடியாக சுண்டக் காய்ச்சி ஆறவிட்டு பிசைந்து வடிகட்டி பொருத்தமான தைலப் பாண்டத்தில்விட்டு அதனுடன் ஆவின்பாலையும், நல்லெண்ணெயும், இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள 25-கற்கங்களையும் இடித்துச் சூரணித்து பால்விட்டரைத்துச் சித்தப்படுத்தியதையும் ஒரு மிக்கக் கலந்து அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகு பதம் திரளும்போது வடித்து சூடாறுவதற்கு முன்னதாக மூன்றாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள வாசனை திரவியங்களைப் பொடி செய்துபோட்டு ஆறியபின் குப்பியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இத்தைலத்தைக்கொண்டு வாரம் ஒருமுறை தலை முழுகிவர கண்ணெரிச்சல், கண்புகைச்சல், கைகாலெரிவு, மூளைக்

கொதிப்பு, மயக்கம், அஸ்திவெட்டை, மேககாங்கை முதலியவைகள் தீரும்

பத்தியம்:—முற்கூறியவாறே.

### 82. இலகுசந்தனுதி தைலம்

நல்லெண்ணெய் ஆவின்பால் வகைக்கு படி ஒன்றாக ஒரு தைலப்பாண்டத்தில் விட்டு அதனுடன் சந்தனத்தூள் பலம்-5, மஞ்சள், மரமஞ்சள், கஸ்தூரிமஞ்சள் வகைக்கு பலம்-¼ ஆக இடித்துச்சூரணித்து பால்விட் டரைத்துக் கலக்கி அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதம் வரும்போது வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இத்தைலத்தைக்கொண்டுவாரம் ஒருமுறை தலைமுழுகிவர பித்தமேகம், தேக எரிவு, கண்கைகாலெரிவு, தேக காங்தல் இவைகள் தீரும்.

பத்தியம்:—அலைச்சல் திரிச்சல் முதலியவற்றை நீக்கி புளிதள்ளி பத்தியமாக ஆகாரம் கொள்ளல் நன்று.

### 83. வாதகேசரித் தைலம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:— | சதுரக்கள்ளிச்சாறு | படி ¼ | | கடுக்காய் | கழஞ்சு 1 |
| | நொச்சிசாறு | ,, | | மிளகு | ,, |
| | தழுதாழைச்சாறு | ,, | | வெள்ளைப்பூண்டு | ,, |
| (1) | வெள்ளாட்டுப்பால் | ,, | (2) | பெருங்காயம் | ,, |
| | எருக்கம்பால் | ,, | | கெந்தகம் | ,, |
| | ஆமணக்கெண்ணெய் | ,, | | கோஷ்டம் | ,, |
| | நல்லெண்ணெய் | ,, | | சுக்கு | ,, |
| | | | | கடுகு | ,, |
| | | | | திப்பிலி | ,, |

செய்பாகம்:—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள ஏழு திரவங்களை ஒன்றாகக்கலந்து ஒருபாத்திரத்தில் விட்டு அதனுடன் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள ஒன்பது கற்கங்களையும் அரைத்துப்போட்டு பதமுறக் காய்ச்சி வடித்து வைத்துக் கொள்க.

பிரயோகம்:—இந்த தைலத்தை பக்கவாதம், வாதக்கடுப்பு முதலியவைகளுக்குமேல் தேய்த்துப்பிடித்துக்கொண்டுவர குணமாகும்.

## 84. அர்க்கக்ஷீராதி தைலம்

சரக்கு:—எருக்கம்பால் படி ¼
வெள்ளாட்டுப்பால் ,,
கருநொச்சிச்சாறு ,,
புளியமிலைச்சாறு ,,
நல்லெண்ணெய் ,, 1

கற்கம்

| | | |
|---|---|---|
| மிளகு | பலம் | 1 |
| கடுகு | ,, | |
| மஞ்சள் | ,, | |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட திரவங்கள் ஐந்தில் வெள்ளாட்டுப்பால் நீங்கலாக மற்றவைகளை ஒருங்குகலந்து ஒரு தைலப்பாண்டத்தில் விட்டு அதனில் கற்கம் மூன்றையும் வெள்ளாட்டுப்பால் விட்டு அரைத்து மிகுதியுள்ள பாலில் கலக்கிச்சேர்த்து அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்துவண்டல் மெழுகுபதம் வரும்போது வடித்து ஆறவிட்டு குப்பியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தத்தைலத்தை வாதநோய் உள்ள இடங்களில்சூடுபிறக்க தேய்த்துப்பிடிக்க நிவர்த்தியாகும்.

## 85. மாஷ தைலம்

சரக்கு:—உளுந்து வீசை 2
சிற்றாமுட்டிவேர் ,, 2

கற்கம்

| | | |
|---|---|---|
| உளுந்து | பலம் | 3 |
| அதிவிடயம் | ,, | 3 |
| சிறுகாஞ்சொறிவேர் | ,, | 3 |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | ,, | 3 |
| ஆமணக்குவேர் | ,, | 3 |
| சிற்றரத்தை | ,, | 3 |
| இந்துப்பு | ,, | 3 |

செய்பாகம்:—உளுந்தையும் சிற்றாமுட்டிவேரையும் தனித்தனி இடித்து ஒரு பெரிய மட்கடத்தில் போட்டு 16-படி சலம் விட்டு அடுப்பிலேற்றி இரண்டுபடி பாகச் சுண்டக்காய்ச்சி வடித்து மற்றோர் பொருத்தமான தைலப்பாண்டத்தில் விட்டு அதனில்

நான்கு படி நல்லெண்ணெயும், சிறிதுசலம் விட்டரைத்த ஏழு கற்கங்களையும் போட்டுக்கலக்கி அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதமாகத் திரளும் சமயம் வடித்து ஆறவிட்டு குப்பியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இத்தைலத்தை தேகத்தில் பூசிப்பிடிக்க பாரிசவாயு, நரித்தலைவாதம், தனுஸ்தம்பவாதம், கம்பவாதம், நடுக்கல்வாதம் ஆகிய பல வாதரோகங்களையும் பரிகரிக்கும்.

## 86. மெழுகு தைலம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—மஞ்சள் மெழுகு | பலம் | 10 | கப்புமஞ்சள் | பலம் | $2\frac{1}{2}$ |
| சக்கிக்கல் | ,, | 10 | சடாமாஞ்சில் | ,, | $1\frac{1}{4}$ |
| சோற்றுப்பு | ,, | 10 | ஆற்றுமணல் | ,, | 5 |
| ஓமம் | ,, | $2\frac{1}{2}$ | | | |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட ஏழுசரக்குகளில் மஞ்சள் மெழுகைச் சிறுதுண்டுகளாக அரிந்தும், சக்கிக்கல்லை பொடியாக நறுக்கியும், சடாமாஞ்சியை ஒன்றிரண்டாய் இடித்தும் மற்றச் சரக்குகளுடன் கலந்து ஒரு கழுத்துநீண்ட மட்குடத்தைப் படுக்கவாட்டத்தில் வைத்து அதனுட்போட்டு மற்றொரு சிறு மண்தோண்டியை இதன்வாய்க்குப் பொருந்தும்படி வைத்து சந்துக்கு மண்பூசி நூல்கயிற்றால் இரண்டு மட்கடங்கள் ஒன்றைவிட்டொன்று விலகாதபடி வரிந்துகட்டி அதன்மேல் ஏழுசீலைசெய்து, இவ்விரண்டு குடத்தின் நடுமையங்களில், பெரிய குடத்திற்கு மேற்புறம் பெரிதாகவும், சிறிய தோண்டியின் கீழ்புறம் சிறியதாகவும் இரண்டு துவாரங்களிட்டு மேல்துவாரத்தின் வழி புகை வெளிப்படாமலிருக்க ஒரு சிறிய ஓட்டினால் மூடி. அதன்மேல் பசுவின் சாணத்தை அப்பி இக்குடத்தை ஒஞ்சரித்தவண்ணம் அடுப்பிலேற்றி, கீழ்துவாரத்தின் வழியில் ஒரு பீங்கான் பாத்திரத்தை வைத்து மூன்று சாமம் காடாக்கினியாக எரிக்கப் புகையுடன் தைலம்சொட்டும். இன்னும் இதன்விபரத்தைக் கோரின் "சிகிச்சாரத்நதீபம்" என்னும் முதல்பாகத்தில் சித்திர விளக்கத்துடன் காட்டப்பட்டிருக்கின்றதைக்கொண்டறிக.

பிரயோகம்:—இந்தத் தைலத்தை தேகத்தின்மேல் தேய்ப்பதினால் சூடுபிறக்கும். இன்னும் சர்வாங்கவலி, குழந்தைகட்கு காண்கிற இசிவு, வீக்கங்கள், வெட்டுகாயம், பீஜவீக்கம், நரித்தலை

வாதம், சந்நிபாதம், ஆண்குறிதளர்ச்சி, ஸ்தனதளர்ச்சி, கீல் எலும்பு மாமிசம் நரம்பு முதலியவைகளைப்பற்றிய வாயு முதலிய யாவும் தீரும்.

## 87. அண்டத் தைலம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—வேப்பெண்ணெய் | படி | $\frac{1}{4}$ |
| தேன்மெழுகு | பலம் | 1 |
| சூடம் | பலம் | 1 |
| கொளம்புசாராயம் | படி | $\frac{1}{4}$ |
| அண்டத்தைலம் | பலம் | $2\frac{1}{2}$ |

செய்பாகம்:—வெப்பெண்ணெயை ஒரு இரும்புகடாயில் விட்டு அடுப்பேற்றி எரிக்கும்போது தேன்மெழுகைப் போடவும். அது நன்றாய் உருகினவுடன் சூடப்பொடியைப் போட்டுக் கிளறி கொளம்புசாராயத்தை விடப் பற்றியெரியும். உடனே பாண்டத்தைக்கீழ் இறக்கி ஆறுமுன் அண்டத்தைலத்தைக் கூட்டி சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இந்தத் தைலத்தை தேகத்தில் தேய்க்க சூடுபிறக்கும். இன்னும் வலியுள்ள இடங்களில் தேய்க்க நோய்நீங்கும். பாரிச வாயு முதலான ரோகங்களைப் பரிகரிக்கும். இம்முறையில் $\frac{1}{4}$-படி வேப்பெண்ணெயில் $\frac{1}{4}$-தோலா வெள்ளைப் பாஷாணக்கட்டியைப் போட்டுக் கொதிக்கக் காய்ச்சி வடித்து எடுத்துக்கொள்ளின் இன்னும் தைலமானது வீரியமுடையதாக இருக்கும்.

## 88. சிலைத்தைலம்

ஒரு பழகின மட்பாண்டத்தில் 20-பலம் பன்றிநெய்யை விட்டு அதனில் அரசம்பட்டை, ஓதியம்பட்டை, வேலம்பட்டை, நெல்லிப்பட்டை, செம்புராப்பட்டை, ஆகிய இவைகளின் சாறு வகைக்குப் பலம்-2 புங்கம்பால் பலம் 2, ஒருமிக்கக் கலந்து விட்டு அதனுடன் இலிங்கம், களிப்பாக்கு, காய்ச்சுக்கட்டி வகைக்கு பலம்-1 கல்வத்தி லிட்டு அரைத்துப்போட்டுக் கலக்கி மூன்றுநாள் பரியந்தம் ஊற விட்டு நான்காவது நாள் அடுப்பிலேற்றி மிருதுவாக எரித்து வண்டல்மெழுகுபதம்வர வடித்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—அரையாப்பு, மேகக்கட்டி, புரையோடும் சகல விரணங்களுக்கும் உட்செலுத்தி ீ◌ற்றடைவர குணமாகும்.

## 89. விரணத் தைலம்

ஒரு அகன்ற பெரியகறண்டியில் 10-பலம் நல்லெண்ணெயை விட்டு அதில் பொடித்தத் தாள்கம் வராகனெடை-1, இரண்டு துண்டாகக்கத்தரித்த சேங்கொட்டை-10 சேர்த்து,மிருதுவாக எரித்து கொட்டைகள் மிதக்குஞ்சமயம் இத்தைலத்தை கழுநீரும் சுத்தசலமும் சமமாகக் கலந்து நிறைத்து வைத்திருக்கின்ற ஓர் அகன்ற பாத்திரத்தில் ஊற்றி மறுநாள் கோழியிறகால் மேலுள்ள எண்ணெயை வழித்து ஒரு கறண்டியில் விட்டு நீர்சுண்டச் சிறிது காய்ச்சிப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதனை ஆருத விரணங்களுக்குத் தடவிவர சீக்கிரத்தில் குணமாகும்.

## 90. கரப்பான் மேல்பூசு தைலம்

நான்கு பெரிய தேங்காயை உடைத்து திருகிப் பூவாக எடுத்து சலம்தெளித்துப் பிசைந்து பிசைந்து பிழிந்தெடுத்த பாலுடன் கல்லுப்பு, மஞ்சள், கஸ்தூரிமஞ்சள், கருஞ்சீரகம் வகைக்குப் பலம் காலாக அம்மியிலிட்டு சிறிது பால்விட்டு மைபோலரைத்து மிகுதியுள்ள பாலில் கலக்கி ஒரு சுத்தமான இருப்புகடாயில் விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயில் எரித்து எண்ணெய் பிரியும்போது சர்வ ஜாக்கிரதையாக வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேண்டும்போது இந்தத் தைலத்தை சொறி, சிரங்கு, கரப்பான் முதலியவற்றின்மேல் பூசித்தேய்த்து அதன்பேரில் மாம்பட்டையை சலம்விட்டரைத்துப் பூசி ஒரு சாமத்திற்குப்பின் ஸ்நானம் செய்யவும். இப்படி 3-நாள் அல்லது 5-நாள் செய்ய சொறி-சிரங்கு, கரப்பான் இவைகள் காணாதோடும்.

## 91. வேறு

புளியம் இலை, ஆவாரைவேர்பட்டை வகைக்கு ஒருபிடி அல்லது பலம்-1½, மிளகு, கருஞ்சீரகம், வசம்புசுட்டகரி, கார்போக அரிசி வகைக்கு பலம்-1½, இவையிற்றை ஆடுதின்னாப்பாளைச் சாற்றால் அரைத்து 10-பலம் எள்ளெண்ணெயில் கலக்கி மூன்றுநாள் ரவிமுகத்தில் வைத்து சொறி சிரங்கு கரப்பான் இவைகளின் மீது பூசித்தேய்த்து ஒரு சாமத்திற்குப் பின் அரைப்பிட்டு ஸ்நானம் செய்யவும்; இப்படி 3-5-நாள் செய்ய கரப்பான் சொறி சிரங்கு முதலியவைகள் தீரும்.

## 92. காதுவலித் தைலம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—சிற்றண்டமஞ்சள்கரு | தோலா | 1 |
| நண்டிறைச்சி | ,, | |
| பூண்டு | ,, | |
| வசம்பு | ,, | |
| குக்கில் | ,, | |
| பூநாகம் | ,, | |

செய்பாகம்:—இவைகளையெல்லாம் அம்மிக்கல்லிலிட்டுச் சிதைத்து ஒரு சுத்தமான இருப்பு வாணலியிலிட்டு அதனுடன் 5-பலம் வேப்பெண்ணெய் விட்டெரித்து வண்டல் சிவந்து மிதக்கும் சமயத்தில் ஆறவிட்டு வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—காதில் இரண்டொரு துளிவிட்டு பஞ்சியினால் அடைத்துவைக்க காதுவலி, காதுநோய், காதில் சீழ்வடிதல் முதலிய யாவும் நீங்கும்,

## 93. வேறு

| | | | |
|---|---|---|---|
| | சரக்கு:—மரமஞ்சள் | வராகனெடை | 1 |
| | பூண்டு | ,, | |
| (1) | சுக்கு | ,, | |
| | வலம்புரிக்காய் | ,, | |
| | கருஞ்சீரகம் | ,, | |
| | நண்டிறைச்சி | ,, | |
| | நத்தைமாமிஷம் | ,, | |
| | முசுறுமுட்டை | ,, | |
| | கருங்கோழிமுட்டைமஞ்சள்கரு | ,, | |
| (2) | இலைக்கள்ளிச்சாறு | படி | வீசம் |
| | காட்டுமுருங்கை இலைச்சாறு | ,, | வீசம் |
| | ஆவின்பால் | ,, | $\frac{1}{4}$ |
| | வேப்பெண்ணெய் | ,, | $\frac{1}{4}$ |

செய்பாகம்:—ஒருசுத்தமான இருப்புவாணலியில் இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள நான்கு திரவங்களையும் விட்டு அதனுடன் முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள 9-சரக்குகளையும் ஒருங்குப்பட அரைத்துக் கலக்கி அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதம் வரும்போது உடனே வடித்து ஆறவிட்டு குப்பியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—காதில் இரண்டொரு துளிவிட்டு பஞ்சியைக் கொண்டடைத்து வைக்க தீராத காதுவலி, சீழ்வடிதல், மண்டைக்கரப்பான் முதலிய பல கர்ணரோகங்கள் தீரும்.

### 94. புளியாரைக் கிருதம்

சரக்கு:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| புளியாரைச்சாறு | படி | 2 | தேசாவரம் | கழஞ்சு | 1 |
| ததிமஸ்து | ,, | $\frac{1}{2}$ | அதிமதுரம் | ,, | 1 |
| ஆவின்நெய் | ,, | 1 | கோஷ்டம் | ,, | 1 |
| திராட்சைபழம் | கழஞ்சு | 1 | சாதிக்காய் | ,, | 1 |
| பேரிச்சங்காய் | ,, | 1 | செவ்வியம் | ,, | 1 |
| வெப்பாலையரிசி | ,, | 1 | சீரகம் | ,, | 1 |
| அதிவிடயம் | ,, | 1 | வட்டத்திருப்பி | ,, | 1 |
| முத்தக்காசு | ,, | 1 | அசமதாகம் | ,, | 1 |
| வில்வவேர் | கழஞ்சு | 1 | | | |

செய்பாகம்.—இங்குக்கூறப்பட்ட பதினேழு சரக்குகளில்ஆவின் நெய்யுடன் ததிமஸ்தையும் புளியாரைக்கீரைச் சாற்றையும் கூட்டி ஒரு பழகின மட்பாண்டத்தில் விட்டு அடுப்பிலேற்றி காய்ச்சி ஒரு கொதி வந்தவுடன் திராக்ஷாதி வில்வவேர் ஈறாகவுள்ள சரக்குகளில் இடிக்கத்தக்கவைகளை இடித்துச் சூரணித்து மற்றவைகளுடன் கூட்டிப் பால்விட்டரைத்துப் போட்டு பதமாகக் காய்ச்சி நெய்யை வடித்து வாயகன்ற சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு உச்சிகரண்டி வீதம் தினம் இருவேளை உண்டுவர வயிற்றுக்கடுப்பு, குன்மவெரிவு, சோபை, வாய்கசப்பு, கிராணி முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

### 95. வல்லாரைக் கிருதம்

சரக்கு:—

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | வல்லாரைச்சாறு | படி | 1 | பொடுதலைச்சாறு | படி | 1 |
| (1) | பொன்னாங் காணிச்சாறு | ,, | 1 | எலுமிச்சம்பழச்சாறு | ,, | $\frac{1}{2}$ |
| | ஆவின்பால் | படி | 2 | ஆவின்நெய் | ,, | 2 |
| (2) | சாதிக்காய் | கழஞ்சு | 2 | காட்டாத்திப்பூ | கழஞ்சு | 2 |
| | சாதிபத்திரி | ,, | | வால்மிளகு | ,, | |
| | மாசிக்காய் | ,, | | ஏலம் | ,, | |
| | கற்கடகசிங்கி | ,, | | கிராம்பு | ,, | |
| | அதிமதுரம் | கழஞ்சு | 2 | | | |

செய்பாகம்:—ஒரு பழகின வாயகன்ற மட்பாண்டத்தில் முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள திரவங்களை விட்டு அடுப்பிலேற்றி மிருதுவாக எரித்து கொதிவரும்போது இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள 9 கற்கங்களை இடித்துச் சூரணித்து அம்மிக் கல்லிலிட்டு பால்விட்டரைத்து ஷை பாண்டத்தில் போட்டுக் கலக்கி வண்டல் மெழுகுபதம் திரளுஞ்சமயம் வடித்து ஒரு வாயகன்ற புட்டியில் விட்டு 2-பலம் சீனிசர்க்கரையைப் போட்டுக் கலக்கிப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ஒரு உச்சிக்கரண்டி வீதம் தினம் இருவேளைக் கலக்கி சாப்பிட சகல மேகம், கிரந்தி, பிரமிபப், மேகச்சூலை, குட்டம், சொறிசிரங்கு, யோனிபுத்து, நீர்கடுப்பு, நீரெரிச்சல், நீர்சிறுப்பு முதலியவை தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல் சாலச்சிறந்தது.

## 96. சதாவரீ கிருதம்.

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—தண்ணீர்விட்டான் கிழங்கு | பலம் 10 | சிற்றாமுட்டிவேர் | பலம் 10 |
| | | வெட்டிவேர் | ,, |
| நெருஞ்சிவேர் | ,, | செங்கழுநீர்வேர் | ,, |
| கொட்டிக்கிழங்கு | பலம் 10 | | |

செய்பாகம்:—இவற்றை இடித்து ஒருபெரிய மட்கடத்தில் போட்டு 16-படி சலம்விட்டு அடுப்பிலேற்றி மிருதுவாக எரித்து இரண்டுபடியாகச் சுண்டக்காய்ச்சிப் பிசைந்து வடிகட்டி பொருத்தமான மறுபாண்டத்தில் விட்டு அதனுடன் ஆவின்நெய் படி கூட்டி மீண்டும் அடுப்பிலேற்றி முன்மாதிரி மிருதுவாக எரித்து வண்டல் மெழுகுபதம் திரளுஞ் சமயம் வடித்து ஒரு வாயகன்ற புட்டியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு உச்சிக்கரண்டி வீதம் தினம் இருவேளை உட்கொள்ள நீர்கிரிச்சரம், நீர்கடுப்பு, நீர்குத்து, எலும்புருக்கி, மோகசுரம், கைகாலெரிவு முதலியவைகள் நீங்கி தாதுவிர்த்தி யுண்டாக்கும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## 97. தூதுளைக் கிருதம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:— | தூதுளைச்சமூலம் | பலம் 20 | மிளகு | பலம் | 4 |
| (1) | கண்டங்கத்திரி | „ 4 | திப்பிலி | „ | 4 |
| | சிறுகாய்ஞ்சொறி | „ 4 | கடுக்காய் | „ | 4 |
| | ஆடாதோடை | „ 4 | தூராலெப்பை | „ | 4 |
| (2) | சுக்கு | பலம் 1 | கோஷ்டம் | „ | 1 |
| | மிளகு | „ | அக்கரகாரம் | „ | 1 |
| | திப்பிலி | „ | வாய்விளங்கம் | பலம் | 1 |
| | கடுக்காய் | „ | சீரகம் | „ | |
| | நெல்லிக்காய் | „ | ஓமம் | „ | |
| | தான்றிக்காய் | „ | வால்மிளகு | „ | |
| | தாளிசப்பத்திரி | „ | அரத்தை | „ | |
| (3) | ஏலம் | கழஞ்சு 3 | சாதிக்காய் | கழஞ்சு | 3 |
| | கிராம்பு | „ | சாதிப்பத்திரி | „ | 3 |

செய்பாகம்:—முதலாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள சரக்குகளை ஒரு பெரிய மட்கடத்தில் போட்டு 32-படி சலம்விட்டு சிறுதீயாக எரித்து இரண்டுபடியாகச் சுண்டுஞ்சமயத்தில் வடித்து மற்றோர் சுத்தமான பாண்டத்தில் விட்டு அதனில் இரண்டுமூன்றாவது அங்கங்களில் கூறப்பட்ட கற்கங்களை உரலில் போட்டு இடித்துச் சூரணித்து அம்மிக்கல்லி லிட்டு ஆவின்பாலா லரைத்துக் கலக்கி அதனுடன் இரண்டுபடி ஆவின்பாலும் இரண்டுபடி ஆவின்நெய்யும் கூட்டி மீண்டும் அடுப்பிலேற்றி மிருதுவாக எரித்து வண்டல் மெழுகுபதம் பற்றியபோது வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு உச்சிக்கரண்டி விதம் தினம் இருவேளை சாப்பிட க்ஷயம், ஈளை, இருமல், சிலேத்துமம் 96-உஷ்ணரோகம் மேகரோகம் முதலியவைகள் தீரும்.

## 98 வேறு

தூதுளையின் பழச்சாறு படி-$\frac{1}{2}$, ஆவின்பால் படி-$\frac{1}{2}$, ஆவின்நெய் படி-$\frac{1}{2}$ இம்மூன்றையும் ஒரு பழகின மட்பாண்டத்தில்விட்டு அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து கொதிக்குந்தறுவாயில் அதனில் சுக்கு, மிளகு, திப்பலி, சீரகம் வகைக்கு பலம்-$\frac{1}{2}$ ஆக நிறுத்தெடுத்து சூரணித்து பால்விட்டரைத்துக் கலக்கி வண்டல் மெழுகுபதம் வருஞ்சமயத்தில் வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குக் கரண்டி வீதம்தினம் இருவேளை சாப்பிட்டுவர பலவிதமான இருமல் ரோகங்களும் குணமாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 99. ஆடாதோடைக் கிருதம்

ஆடாதோடைச்சமூலத்தை நிழலிலுலர்த்திச் சிறுதுண்டாக நறுக்கி இடித்து சரியாக 50-பலம் நிறுத்து ஒருபெரிய மட்கடத்தில் போட்டு 10-படி சலம்விட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து 1-படியாகச் சுண்டக்காய்ச்சி வடித்து மற்றோர் பொருத்தமான பாண்டத்தில் விட்டு அதனுடன் ஒருபடி ஆவின்நெய்யையும் பால் விட்டரைத்த 5-பலம் ஆடாதோடைப் புஷ்பத்தையும் போட்டுக் கலக்கி மீண்டும் அடுப்பிலேற்றி வண்டல் மெழுகுபதம் வர எரித்து வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குக் கரண்டிவீதம் சிறிது தேனுடன் கலந்துதினம் இருவேளை சாப்பிட்டுவர க்ஷயம், காசம், ரத்தபித்தம், இருமல் முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—இதற்கு ரோகத்தை விருத்திக்கின்ற பதார்த்தங்களை நீக்கி இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

## 100. கண்டங்கத்திரிக் கிருதம்

கண்டங்கத்திரி சமூலத்தை நிழலிலுலர்த்தி சிறுதுண்டுகளாக நறுக்கி இடித்து 50-பலம் நிறுத்து ஒருபெரிய மட்கடத்தில் போட்டு 10-படி சலம்விட்டு அடுப்பிலேற்றி ஒருபடியாக சுண்டக்காய்ச்சி வடித்து வைத்துக்கொள்க. பின்னர் சிற்றரத்தை, திரிகடுகு, சிற்றாமுட்டி, நெரிஞ்சிவேர் இவைகளை வகைக்கு பலம் ஒன்றாகக் கல்லுரலில் போட்டு இடித்துச் சூரணித்து பால்விட்டு அரைத்து முன் சித்தப்படுத்தி வைத்துள்ள கியாழத்தில் கலக்கி அதனுடன் ஒருபடி ஆவின்நெய் சேர்த்துமீண்டும் அடுப்பிலேற்றி சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதம் காணுஞ்சமயம்வடித்துப் பத்திரப்படுத்துக

பிரயோகம்:—வேளைக்கு ஒருகரண்டி வீதம் தினம் இருவேளை சிறிது கற்கண்டு சூரணம் கூட்டி சாப்பிட்டுவர காச க்ஷய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல் வேண்டும்.

---

# பற்ப இலம்பகம்

## 101. வெள்வங்க பற்பம்

இரண்டுகூடை புளியம்புறணியைக் கொண்டுவந்து அதனில் பாதி ஓரிடத்தில் பரப்பி அதன்மீது 3-பலம் சுத்திசெய்த வெள்வங் கத்தை மடித்துமடித்து தகடடித்து ஒவ்வொரு மடிப்பிழைகளும் ஈசல் இறகுபோலிருக்குஞ்சயபத்தில் புளியிலை திட்டத்திற்கு கத் ரித்து ஒன்றன்மீது ஒன்று படாமல் தூவி மிகுதியுள்ள புளியம்புற ணியைக்கொட்டிக் குவித்து இரண்டல்லது மூன்று வறட்டியை வைத்துத்தீயிடுக. தீநன்றுய்ப்பிடித்து இனிதுவெந்தபதத்தில் 4-படி பச்சரிசிஉமியைப் புடஞ்சூழ கொட்டிவிடுக. மூன்றுவதுநாள் புடம் சாங்கசீதளமானபின் அசைக்காமல் மேல்சாம்பலைக் கொஞ்சங்கொ ஞ்சமாகத் தள்ளிப் பொரிந்திருக்கும் வங்கத்தை எல்லாஞ் சேத மின்றிச்சேர்த்துக் கல்வத்திலிட்டு அரைத்து மெல்லிய துணியா லரி த்து ஏதேனும் வங்கசத்து இருப்பின் அதனை நீக்கி, பற்பத்தைக் கொள்க.

மீண்டும் இப்பற்பத்தோடு பசுவின் தயிரை முடிச்சுகட்டி தண் ணீரெல்லாம் கீழ் சொட்டி கட்டியான பக்குவத்தில் சமனெடைக் கூட்டி இரண்டு மூன்று சாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத் துச் சிலைசெய்யாமல் வைத்துக்கொள்க. மறுபடியும் முன்மாதிரி ஒரு கூடை புளியம்புறணியைக் கொட்டிப் பரப்பி அதன்மீது முன் சித்தப்படுத்தியுள்ள வில்லையை வைத்து மேலும் ஒரு கூடை புளி யம்புறணியைக் கொட்டிக்குவித்து இரண்டொரு வறட்டியை வை த்துத் தீயிடுக. தீயானது நன்றுய்ப்பிடித்துப் புடமானது செந்தண லாக இருக்கும்போது ஒரு கூடை உமியை மேல் கொட்டிவிட்டு விடுக. புடம் சாங்கசீதளமாக மூன்றுநாள்வரையிலும் விட்டுவை த்து நான்காவது நாள் வில்லையையெடுக்க வெளுத்திருக்கும். இதனை அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு $\frac{1}{2}$-முதல் 1-குன்றிஎடை தினம் இரு வேளை நெய்யிலேனும் வெண்ணெயிலேனும் உட்கொள்ள நீற்றுப் போன இந்திரியம் கட்டுபடும். தவிர வெள்ளை, வெட்டை, மூலம், மேக விரணங்கள் தீரும்.

பந்தியம்:—வாயு, சீதளமுள்ள பதார்த்தங்களை நீக்கி இச்சா பத்தியமாக இருத்தல்வேண்டும்.

### 102. வெள்வங்க பற்பம்

ஒருபலம் சுத்திசெய்த வெள்வங்கத்தை புளியம் இலை கனமாகத் தகடடித்து துவரம்பருப்பு பிரமாணம் சிறுதுண்டுகளாகக் கத்தரித்து அதனுடன் எண்மடங்கு தேரினமிளகை ஒன்றிரண்டாய் துகள்செய்து கூட்டி அரையடி அகலமும் ஒருஅடி நிகளமுமுள்ள ஒருசுத்தமான சீலையின்பேரில் ஒருநூல் கனத்திற்குப் பரப்பி மிகுதியிருப்பின் மீண்டும் அதன்பேரில் மற்றோர் சீலையைப் போட்டு பரப்பி, சுருணைபாகச் சுற்றி, கயிற்றினுல் 4-5-கட்டுகள் போட்டு ஓர் அரையின் மூலையில் வைத்து இருபுறத்திலும் தீயிட்டுக் கொளுத்திவிடவும். அந்தசமயம் காற்றானது நேராக மோதாவண்ணம் ஒரு பாகத்தில் காற்று நுழைந்து மற்றோர் பாகத்தில் போகும்படியாக ஒரு கூடையை தரையிலிருந்து சுவற்றுக்கு ஒருக்கணித்து வைத்தல் நன்று. மறுநாள்பார்க்க வெந்து நீறிருக்கும். அந்தச்சுருணைச் சாம்பலை முறத்திலிட்டு புடைத்தூதினுல் சாம்பல் எல்லாம் போய்பூத்தவங்கம் மாத்திரம் நிற்கும். இதனைக் கல்வத்திலிட்டரைத்து மெல்லிய சீலையில் அரித்து பூப்பில்லாம லிருப்பனவற்றைத் தள்ளி அடியிலுள்ள பற்பத்தைப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு 1-1½-குன்றியெடை சிலாசத்து பற்பத்துடன் கூட்டி நெய் வெண்ணெய் இவைகளில் தினம் இருவேளையாகக் கொடுத்துவர பிரமியம், நீர் எரிச்சல், நொறுக்கு, கிரந்தி முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

### 103. கருவங்க பற்பம்

ஒருபலம் சுத்திசெய்த கருவங்கத்தை ஒரு இருப்புக்கடாயிலிட்டு அடுப்பிலேற்றி கடாக்கினியாக எரித்து வங்கம் உருகின சமயத்தில் ஒருபலம் மனோசிலையைப் பொடிசெய்து கொஞ்சங்கொஞ்சமாய் போட்டு அயக்கரண்டி கொண்டுதேய்க்கவும். பின்னர் ஆறவிட்டு மருந்தை சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்திலிட்டு அதனுடன் பசுவின்பாலில் போட்டுக்கொதிக்க வைத்தெடுத்த ஒருபலம் கற்பூரசிலாசத்தைக் கூட்டிப் பழச்சாற்றால் நான்குசாமம் அரைத்து வில்லைத்தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து 15-வறட்டியில் புடம் போடவும். இப்படிப் பழச்சாற்றால் அரைத்து அரைத்து 3-புடமிட பற்பமாகும். பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு $\frac{1}{4}$-அல்லது - $\frac{1}{2}$-குன்றி பிரமாணம் தினம் இருவேளை 3-5-நாள் கொடுக்க வெள்ளை, அரையாப்பு, கிரந்தி, படை, மேகவிரணம், நீரிழிவு, மதுமேகம், குட்டம் முதலிய பல ரோகங்கள் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக வைத்தல் வேண்டும்.

## 104. வேறு

இரண்டுபலம் கருவங்கத்தைப் பிரண்டையுடன் கோநீர் சேர்த்திடித்தசாற்றிலும், எள்ளெண்ணெயிலும் எவ்வேழு முறை உருக்கிச் சாய்த்து ஒரு இருப்புக் கடாயில்போட்டு அடுப்பிலேற்றி எரித்துஉருகினவுடன் வெடியுப்பைத் தூள்செய்து கொஞ்சங்கொஞ்சமாகப்போட்டுக் கரண்டிக் கொண்டு தேய்க்கவும்; இப்படிச் சத்தில்லாமல் 3-சாமத்திற்குக் குறையாமல் தேய்த்துக் கல்வத்திலிட்டு குமரிச்சாற்றால் நான்குசாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து அகலில் அடக்கிச் சீலைசெய்து உலர்ந்தபின் 25-வறட்டியில் புடமிடவும். மறுபடியும் இம்மருந்தைக் கல்வத்திலிட்டு 4-சாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து அகலில் அடக்கிச் சீலைசெய்து உலர்த்தி 50-வறட்டியில் புடமிடவும். இத்தகையே மற்றோர் முறையும் அரைத்து அடைதட்டி அகலில் அடக்கி 75-வறட்டியில் புடமிடவும் நல்லபற்பமாகும். ஒருகால் சிறிது சாம்பல் வர்ணமாக முடிவதும் உண்டு.

பிரயோகம்:—இதனில் $\frac{1}{2}$-குன்றியெடை தினம் இருவேளை 5-நாள் கொடுக்க குட்டம், தடிப்பு, கருமேகம், வெள்ளை, வெட்டை முதலிய பல மேக ரோகங்களைப் பரிகரிக்கும்.

பத்தியம்:—ரோகத்திற் கேற்றவாறு இச்சாபத்திய மாகவாவது புளிதள்ளியாவது வைத்தல் நன்று.

## 105. இலவண பற்பம்

சோற்றுப்பு, வெடியுப்பு, படிகாரம் வகைக்குப் பலம் இரண்டாகக் கல்வத்தில் போட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு இரண்டு மணி நேரம் அரைத்து அகலில் வில்லைதட்டி கடும் வெயிலில்வைக்கவும். வில்லை காய்ந்தவுடன் காலதாமதம் செய்யாமல் உடனே மண்சீலை ஏழு செய்து 8-வறட்டியில் புடமிடவும். மறுபடியும் எலுமிச்சம்பழச் சாற்றால் இரண்டு மணிநேரம் அரைத்து உடனே வில்லை தட்டி கடும் வெயிலில் உலர்த்தி மேல் அகல் மூடிச் சீலைசெய்து

8-வறட்டியில் புடமிடவும். இப்படி எட்டுப்புடம் தினம் ஒன்றாக போட்டு எடுக்க நல்ல வீரியமுடைய பற்பமாக இருக்கும்.

பிரயோகம்:—இதனைக் குன்றியெடை பழச்சாற்றிலேனும், அன்னக்கொதி சலத்திலேனும் கொடுக்க வயிற்றுவலி, குன்மம், செரியாமை முதலியவற்றைக் குணமாக்கும்.

பத்தியம்:—எளிதில் ஜீரணிக்கக்கூடிய ஆகாரமாகக்கொடுத்தல் நன்று.

## 106. நாகபற்பம்

இலுப்பைநெய்யில் ஏழுமுறை உருக்கிச்சாய்த்து சுத்திசெய்த ஒருபலம் நாகத்தை ஒரு இருப்புக் கடாயில் போட்டு கன்னான் கொல்லுலையில் வைத்துருக்கி கடாயானது செந்நிறமாக இருக்கும் போது கொஞ்சம் சிறுபூளைச்செடி சமூலத்தைப் பச்சையாகக் கொண்டுவந்து சிறுதுண்டுகளாக நறுக்கிப்போட்டு ஷை மூலிகையின் குச்சிகளைக் கத்தையாகக் கட்டிக்கொண்டு கீழ்மேலாக நாகத்தைப் புறட்டிக்கொடுக்கவும் மீண்டும் துருத்தியை விசையாய் ஊதி கொஞ்சம் மூலிகை சமூலப்பொடியைப் போட்டு முன்போல் கிளறிக்கொடுக்க நாகம் பற்றிஎரிந்து பூக்கும். இதனை மெல்லிய சீலையில் வஸ்திரகாயம் செய்து திப்பிகளைத் தள்ளி பூத்திருப்பதைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு குன்றியெடை தினம் இருவேளை நெய்யில் கொடுக்க வெள்ளை, கிரிச்சரம், நீர் எரிச்சல், மூலம் இவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக உண்ணச்சாலச் சிறந்தது.

## 107. வேறு

முன்போல் சுத்திசெய்த நாகம் பலம் ஒன்றை இருப்புக் கடாயிலிட்டு கன்னான் கொல்லுலையில் வைத்துஉருக்கி கடாயானது செந்நிறமாக இருக்குஞ்சமயத்தில் ஒருபலம் நாயுருவிக் கொழுந்திலையையும் ஒருபலம் வெடியுப்பையும் நன்றாய் அரைத்து வைத்துக் கொண்டு கொஞ்சங்கொஞ்சமாகப் போட்டு துருத்தியை விசையாக ஊத நாகம் பூக்க ஆரம்பிக்கும். அப்போது இருப்புக் கறண்டிக்கொண்டு தேய்க்காமல் நாகத்தைக் கீழ்மேலாக புறட்டிக்கொடுக்கப் பற்றிஎரிந்து பூக்கும். இதனை ஆறவிட்டு மெல்லிய சீலையில் அரித்து திப்பிகளைத் தள்ளி பூத்திருக்கும் பற்பத்தைப் பத்திரப் படுத்துக

பிரயோகம்:—வேளைக்கு குன்றியெடைதேன் நெய் முதலியவற்றில் தினம் இருவேளையாகக் கொடுத்துவர நீர்மூலம், முளைமூலம், ரத்தமூலம், வாதபித்தமூலம், பவுத்திரம், மேகமூலம் யாவும் தீரும்

பத்தியம்:—காரசாரமற்ற ஆகாரத்தைக் கொடுத்தல்வேண்டும்.

## 108. நாகரச பற்பம்

முன்போல் இலுப்பைநெய்யில் சுத்திசெய்த ஒருபலம் நாகத்தை இருப்புக் கடாயில் போட்டு கன்னான் உலையில் வைத்துருக்கி கீழ்வாய்நெல்லி சமூலமாகக் கொண்டுவந்து சிறுதுண்டுகளாக நறுக்கிவைத்திருப்பதில் கொஞ்சம்தூவி கறண்டியால் தேய்க்காமல் நாகத்தை கிளறிக்கொடுக்கவும். மீண்டும் துருத்தியை விசையாக ஊதி ஷை சமூலப்பொடியைத் தூவி கிளறிக்கொடுக்கப் பற்றிஎரிந்து பூக்கும். இதனை மெல்லிய சீலையில் வஸ்திரகாயம் செய்து திப்பிகளைத் தள்ளி பூத்திருப்பதைக் கல்வத்திலிட்டு அந்த எடைக்கு சூதம்சேர்த்து இளசான பனமட்டைக் குருத்தை நெருப்பனலில் வாட்டி பிழிந்தெடுத்தச் சாற்றால் நான்குசாமம் அரைத்து வில்லைத் தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து காய்ந்தபின் 10-15-வறட்டியில் புடமிடப் பற்பமாகும். இதனை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு குன்றியெடை நெய் வெண்ணெய் முதலியவைகளி லொன்றில் அநுபானம் செய்து கொடுத்துக் கொண்டுவர மூலம், பவுத்திரம், வெள்ளை, மேகவிரணம் ஆகிய இவைகள் தீரும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 109. வேறு

ஒருபலம் நாகத்தை உருக்கி முறைப்படி ஒருபலம் சூதத்தை தொந்தித்து கல்வத்தில் போட்டு துகளாக அரைத்து வைத்துக்கொள்க.

கன்னான் உலையில் ஒரு இருப்புக் கடாயை வைத்து ஊதி கடாயானது சிவந்து நெருப்பனல் வீசுந்தறுவாயில் முன் சித்தப்படுத்தியுள்ள நாகரசத்துகளை கொஞ்சங்கொஞ்சமாகத் தூவிவரப் பற்றி எரிந்தெரிந்து பூத்து பற்பமாகும். இதனை மெல்லிய வஸ்திரத்தால் அரித்து கல்வத்தில்போட்டு துத்தியிலைச் சாற்றாலேனும் அல்லது கீழ்வாய்நெல்லிச் சாற்றாலேனும் இரண்டுசாமம் அரைத்து

வில்லைதட்டிக் காயவைத்து அகலில் அடக்கிச் சீலைசெய்து உலர்த்தி 15-விறட்டியில் புடமிட பற்பமாகும்.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றியெடை தினம் இருவேளை நெய்,வெண்ணெய் முதலிய வனுபானங்களில் கொடுத்துக் கொண்டு வர மூலம், பவுத்திரம், வெள்ளை முதலிய பலரோகங்கள் குண மாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 110. சிலாசத்து பற்பம்

ஒரு பலம் சிலாசத்தை அரிசிகழுவி எடுத்துப் புளிக்கவைத்த நீரில் மூன்றுநாள் ஊறப்போட்டு நான்காவது நாள் கல்வத்தில் போட்டு புளித்த கழுநீரை விட்டு நான்குசாமம் அரைத்து வில்லை தட்டிக்காயவைத்து அகலில்வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து உலர்த்தி 25-வறட்டியில் புடம்போட்டு எடுக்க பற்பமாகும். இதனை அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதனை வேளைக்கு குன்றியெடை தினம் இரு போது நெய், வெண்ணெய் முதலியவைகளில் கொடுத்துவர நீர் எரிச்சல், கிரிச்சரம் தீரும். வெள்வங்க பற்பத்துடன் கூட்டிக் கொடுக்க சொர்பனஸ்கலிதம், மேகம், பிரமேகம், கொறுக்கு,கிரந்தி முதலியவைகள் நீங்கும்.

பத்தியம்:—இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 111 சூதபற்பம்

ஒருபலம் வாலைரசத்தைக் கல்வத்தில்போட்டு பனைமரத்தின் குருத்திலையின் அடிமட்டையை நெருப்பனலில் வாட்டிப் பிழிந் தெடுத்த சாறும், வெற்றிலைப்பாக்கு இவை யிரண்டையும் சமனாக இடித்துப் பிழிந்தெடுத்த சாறும் சமனளவாகக் கலந்து கொஞ்சங் கொஞ்சமாக விட்டு இரண்டுசாமம் அரைத்து ரசத்தை திரட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்க.

அப்பால் மருள்செடியின் கிழங்கை கொண்டுவந்து மேல் தோலைச் சீவி அம்மியிலிட்டு அரைத்து மூசையும் தட்டையான மேல்மூடியும் செய்துலர்த்தி அதனில் முன் சித்தப்படுத்தியுள்ள ரசத்தைவைத்து மேல்மூடியால் மூடிச் சீலைமண் செய்து 7-8-வறட் டியில் புடமிடவும். புடம் ஆறினபின் கவசத்தை நீக்கிப்பார்க்க

வைத்தரசமானது சாம்பல் வர்ணமாகவும் இலேசாயும் இருக்கும். இதைக்கல்வத்தில் போட்டு அரைத்துச் சீசாவில்பத்திரப்படுத்துக. இது, ரசத்திற்குண்டான எடை குறைந்துவிட்டதினால் குணமும் வீரியமும் இருக்காதென்று எண்ணவேண்டாம்.

ப்ரயோகம்:—வேளைக்கு ½-1-குன்றியெடை தினம் இருவேளை நெய், தேன் முதலியவனுபானங்களில் கொடுத்துவர குன்மம், நாசி வாய் முதலியவற்றை விகாரப்படுத்துகின்ற மேகவிரணங்கள், முழங்காலுக்கு கீழேகாணும் விரணங்கள், கிரந்தி, கொறுக்கு, பிடிப்பு முதலியவைகள் குணமாகும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

### 112. வேறு

புதிதாக இடப்பட்ட கோழிமுட்டைகளில் ஆண்முட்டை என்று சொல்லப்பட்ட நீளமான முட்டை ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அதனில் சுண்டுவிரல் நுழையும்படியான துவாரம் செய்து உள்ளிருக்கும்படியான கருகலவாமல் வெளிப்படுத்தி மஞ்சள் கருவை அப்புறப்படுத்தி மீண்டும் வெண்கருவை உட்செலுத்தி அதனுள் தனிச்சூதத்தையாயினும் அல்லது வெடியுப்பு, கந்தகத் திராவகம் முதலியவற்றால் பூக்கடித்த சூதத்தையாயினும் ஒரு வராகனெடைபோட்டு ஒரு உச்சிக்கரண்டி வெள்ளைப்பூ காக்காட்டான் இலைச்சாற்றை விட்டு வாய்க்கு வட்டமான முட்டை ஓட்டை மேல்மூடி சந்துக்கு உளுந்தமாவை சிறிது சலம்விட்டுப் பிசைந்து அடைத்து அதன்பேரில் மற்றோர் முட்டையின்தோலை மேல்செருகி அதன்பேரில் ஏழுசீலைமண் செய்து சிறிதுஉலர்த்தி 7-8-வறட்டியில் புடமிடவும் புடம் சாங்கசீதளமானபின் எடுத்து வைத்து மறுநாள் மட்கவசத்தை நீக்கிப்பார்க்க முட்டையின் ஓடும் உள்ளிட்ட சூதமும் ஒருவாறு பூத்திருக்கும். இவை யிரண்டையும் ஒருங்குசேர்த்து அரைத்து வைத்துக்கொள்க. ஒரு சமயம் சிறிது கருத்திருப்பினும் குற்றமில்லை உபயோகப்படுத்துவதற்குத் தகுதியானதென்று உணர்க. இதற்கு வீரியம் உண்டாக்க வேண்டியதாயின் இம்மருந்தைக் கல்வத்திலிட்டு இதனுடன் மீண்டும் முன்மாதிரி ஒருவிராகனெடை சூதம்சேர்த்து வெள்ளைப்பூ காக்காட்டான் இலைச்சாற்றை விட்டு ஒருசாமம் அரைத்து முன்போல் முட்டையினுள் அடக்கம்செய்து மண்சீலைசெய்து புடமிடவும்.

அப்பொழுதும் மட்கவசத்தைநீக்கி முட்டை ஓட்டுடன் உள்ளிருங் கும்மருந்தோடு அரைத்துக்கொள்க. இப்படி 3-முறை மடக்கி மடக்கிபுடம்போட்டெடுக்க உயர்தரமான வீரியமுள்ள பற்பமாகும்.

பிரயோகம்:—வேளைக்கு ½-குன்றியெடை தேனில் கொடுக்க சுரம், சந்நி, கைகால்பிடிப்பு, கிரந்தி, குன்மம், மேகவிரணங்களெல்லாம் குணமாகும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 113. வீரபற்பம்

கற்பூரம், சாம்பிராணி இவையிரண்டையும் தனித்தனி அரைத்து ஒருமிக்கக் கலந்து வீரத்திற்குகீழும் மேலும் வைத்துத்தீமூட்டவும். இப்படி மூன்றுமுறை செய்ய ஒருவிதமான கட்டாகும். முன்முறையில் கூறப்பட்ட விதமாக ஒருகோழிமுட்டையைக் கொண்டுவந்து சிறுதுவாரம் செய்து கருவையெல்லாம் பரிசுத்தமாக வெளிப்படுத்தி அதனில் முன் சித்தப்படுத்தியுள்ள வீரத்தில் ஒரு விராகனெடை உட்செலுத்தி முருங்கப்பட்டைச் சாற்றைக் கொஞ்சம் விட்டு வாயிக்கு மற்றோர் முட்டையின் ஓட்டால் மூடி வாய்சந்துக்கு உளுந்தின்மாவால் அடைத்துப்பூசி அதன்மேல் மண்சீலை 4-5-செய்து சிறிது உலர்த்தி 8-9-வறட்டியில் புடமிடவும். சாங்க சீதளமானபின் அப்படியே வைத்திருந்து மறுநாள் மேல்கவசத்தை நீக்கிப்பார்க்க அண்டஓட்டுடன் மருந்தும் கலந்திருக்கும். மட்கவசத்தை சுத்தமாக நீக்கி அண்டஓடு உட்பட எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு அரைத்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு அரிசியெடை தேனில் தினம் இருவேளை கொடுக்க சுரம், சந்நி, பாரிசவாயு, கைகால் பிடிப்பு, கபசம்பந்தமான இரைப்பு, பல்கிட்டல், சர்வாங்கவலி முதலிய பலரோகங்களும் தீரும்.

பத்தியம்:—சமயோசிதமாக ரோகத்திற்கு ஏற்றவாறு கொடுத்தல் நன்று.

## 114. காரசூடசத்துபற்பம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—பொரித்தவெங்காரம் | பலம் | 1 |
| கற்பூரசிலாசத்து | ,, | 1 |

செய்பாகம்:—இவையிரண்டையும் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு இரண்டுசாமம் அரைத்து வில்லைத்தட்டிக் காய வைத்து,கற்சுண்ணாம்பினால் ஒருமூசையும் மேல்மூடியையும் செய்து அதனுள் அடக்கி மண்சீலைசெய்து 5-6-வறட்டியில் புடமிட் டெடுத்துக் கல்வத்திலிட் டரைத்து பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதனில் 1-1½-பணவெடை தேனில் கொடுக்க நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீர்கடுப்பு, கிரிச்சரம் முத லியவை நீங்கும்.

பத்தியம்:—காரசாரமற்ற இலகுபோஜனம் செய்தல் நன்று.

## 115. வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—பொரித்தவெங்காரம் | பலம் | ½ |
| கற்பூரசிலாசத்து | ,, | |
| வெடியுப்பு | ,, | |
| சிற்றண்டத்தோல் | ,, | |
| பலகரை | ,, | |
| படிகாரம் | ,, | |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட ஆறுசரக்குகளையும்கல்வத்தி லிட்டு பழச்சாற்றால் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து முன் முறையில் செய்தபிரகாரம் கற்சுண்ணாம்பினால் மூசையும் மூடியும் செய்து அதனுள் சிறுதுண்டுகளாக உடைத்துப்போட்டு மூடி மண் சீலை செய்து காயவைத்து 7-8-வறட்டியில் புடமிடப் பற்பமாகும். அரைத்து புட்டியில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு 1-1½-பணவெடை நீர்பேதி கியாழங் களிலேனும், இளநீர், வெங்காயச்சாறு, பழரசம், தேன்முதலிய அனுபானங்களிலேனும் தினம் இருவேளை கொடுக்க நீரடைப்பு,கல் லடைப்பு, சதையடைப்பு, நீர்கட்டு முதலியவைகள் நிவர்த்தி யாகும்.

பத்தியம்:—காரசாரமற்ற அன்னம் கொள்ளல்வேண்டும்.

## 116. காரலவணபற்பம்

ஒருபலம் படிகாரத்தைப் பொடிசெய்து ஒரு அகன்ற மண் ணோட்டில்பரப்பி அதன்மீது ஒருபலம்வெடியுப்பைப் பொடித்துப் போட்டு,அதன்மீது ஒருபலம் வெங்காரத்தைப்பொடித்துப்போட்டு

அடுப்பிலேற்றி சிறுதீயிலெரித்து எல்லாம் உருகி நீர்சுண்டிப்பூர்த்த வுடன் கீழிறக்கி ஆறவிட்டுக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக. வேளைக்கு ½-¾-வராகனெடை இளநீரில் கொடுக்க தேகத்திலுள்ள நீர்கோவையை சிறுநீர் மூலமாக வெளிப்படுத்தும். இப்படி 2-3-நாள்கொடுத்து தேகம் சுபாவ அளவுக்கு வந்தவுடன் இரத்தத்தை உண்டாக்கக்கூடிய அயசெந்தூரம், காந்தசெந்தூரம், மண்டூரச் செந்தூரம் முதலியவற்றைக் கொடுக்க வேண்டியது.

### 117 சீனவண்ட பற்பம்

மனிதன் மண்டை ஓட்டைக் கொண்டுவந்து சிறுதுண்டுகளாக நறுக்கி ஒருமட்பாண்டத்தில் போட்டு மூழ்க சலம்விட்டு அதனில் சிறிது அப்பளகாரம் போட்டுக் கரைத்து அடுப்பிலேற்றி எரித்து சலமெல்லாம் சுண்டினதறுவாயில் நன்றாய் சலம்விட்டு அலம்பிக் காயவைத்து நாலைந்து வறட்டியின் மத்தியில் வைத்து அறைகுறையாக வேகும்பொருட்டு புடம்போட்டு இடித்துச் சூரணம்செய்து கொள்க. இங்ஙனம் சித்தப்படுத்திய சூரணத்துடன் சமனெடை படிகாரம் சேர்த்துப்பழச்சாற்றா லரைத்து அகலமான வில்லைத்தட்டிக் காயவைத்து அகலில்வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 25-30-வறட்டியில் புடமிடவும். ஒருகால் சரிவர வெந்து நீராகாமல் நிறம் பேதப்பட்டிருப்பின்முன்போல் ஒருமுறை பழச்சாற்றா லரைத்து வில்லைதட்டிப் புடமிடவும். நன்றாய் வெளுத்திருக்கும் இதனை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ½-வராகனெடை விதம் கழுதைப் பால்இஞ்சிச்சாறு நாட்டுசர்க்கரை இம்மூன்றையும் கலந்து அதனில் தினம் இருவேளை உட்கொள்ள சித்தப்பிரமை, பைத்தியம் முதலியவைகள் குணமாகும். இம்மருந்தைக் கொள்ளும்போது இந்நூலில் கூறப்பட்டுள்ள கோமூத்திரத்தைலத்தைக் கொண்டு ஸ்நானம் செய்துவருதல் சாலச்சிறந்தது.

### 118. திரிவண்ட பற்பம்

நாய்மண்டை ஓடு, மனிதன்மண்டை ஓடு, மாட்டுமண்டை ஓடு இம்மூன்றையும் முன்முறையில் கூறியபடி சுத்தி செய்து 7-8-வறட்டியின் மத்தியில் வைத்து அறைகுறையாக வேகப் புடம் போட்டு எடுத்து இம்மூன்றையும் சமனெடையாக நிறுத்துக்

கல்லுரலிலிட்டு இடித்துச்சூரணம்செய்துகல்வத்திலிட்டு கழுதைப் பாலால் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து அகலிலிட்டுச் சீலை செய்து காய்ந்தபின் 25-30-வறட்டியில் புடம்போடவும். இப்படி நன்றாய் வெளுக்கும்வரையில் இரண்டுமூன்று புடம்போட்டெடுத்து அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு $\frac{1}{4}$-வராகனெடைவீதம் முற்கூறியபடி இஞ்சிச்சாறு, கழுதைப்பால், நாட்டுச் சர்க்கரை இம்மூன்றையும் கூட்டிய அனுபானத்திலாயினும்; சடாமாஞ்சி கியாழத்திலாயினும் தினம் இருவேளை 5-7-நாள் கொடுக்க நிவர்த்தியாகும். இம்மருந்தைக் கொள்ளும்போது சம்பீரத்தைலத்தினாலாவது கோமூத்திரத் தைலத்தினாலாவது ஸ்நானம் செய்தல்வேண்டும்.

## 119. தாளகபற்பம்

ஒரு மட்கடத்தில் கால்படி கற்சுண்ணும்பு போட்டு அதன் மீது ஒருபலம் தாளகக்கட்டியை வைத்து மேலும் கால்படி கற்சுண்ணும்பு போட்டு ஒருபடி பனங்கள்ளைவிட்டுத் தாளித்து வாய்மூடி ஒருநாள் வைத்துவிடவும். மறுநாள் தாளித்த சுண்ணும்பிலிருந்து எடுத்த தாளகத்தை மீண்டும் முன்மாதிரி இரண்டுமுறை தாளித்து எடுத்துக்கொள்க. அப்பால் அடுப்பின்மேல் ஒரு மண்ணோட்டை வைத்து அதில் முன் சுத்தப்படுத்திய தாளகக்கட்டியை வைத்து புளிவெடியுப்பு ஜெயநீரால் ஒருசாமத்திற்குக் குறையாமல் சுறுக்கு கொடுத்துக் கல்வத்தில் போட்டு ஷை ஜெயநீரால் ஒரு சாமம் அரைத்து மெழுகுபதமாக இருக்குஞ்சமயத்தில் உட்புறமாகசுண்ணும்பு பூசி சித்தப்படுத்தி வைத்துள்ள இரண்டு அகல்களிலொன்றின் உட்புறத்தில் அகலமாய் வில்லைதட்டிக் காயவைத்து மற்றோர் அகலால் மூடிச் சந்துக்குச் சீலைசெய்து 7-8-வறட்டியில் புடமிட தாளகமானது உறுகிநிற்கும். இதனைச்சேதப்படாமல் சுறண்டி எடுத்துக் கல்வத்திலிட்டு ஷை ஜெயநீரால் ஒருசாமம் அரைத்து மறுபடியும் முன்போல் அகல்களில் சுண்ணும்புப் பூசிக் காயவைத்துள்ள ஒன்றில் வில்லைதட்டிக் காயவைத்துச் சீலைசெய்து 7-8-வறட்டியில் புடமிடவும் இப்படி 3-புடமிட பற்பமாகும்.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றியெடை தினம் இருவேளை தேன் நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவர சுவாசகாசம், க்ஷயம், இருமல் முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக வைத்தல்நன்று. இம்முறையில்கூறியபுளிவெடியுப்புஜெயநீர் எச்சஇலம்பகத்தில்காண்க.

## 120. தாளகப்பதங்கம்

தங்கம் வராகனெடை-1, சுத்தமான வெள்ளி தோலா-2½ இவையிரண்டையும் உருக்கி 4-விரற்கடை அகலமும் 1-அடி நீளமும் இருக்கும்படியாக தகடு அடித்து ஒரு சுருணை தளர்ச்சியாகச் சுற்றி கம்பியால் பிரியாதபடி இரண்டு மூன்று கட்டுகள்போட்டு ஒருசட்டியின் மத்தியில் நிற்கவைத்து தகடு சுருணையிலுள்ள இடைவெளிகளில் (சந்துகளில்) சுத்திசெய்த தாளகம்பலம்-1, மிருதார்சிங்கி பலம்-1½ இவைகளை அரைத்துப் பொடிசெய்துபோட்டு மேல் சட்டிமூடிச் சீலைசெய்து 4-சாமம் தேங்காய் கொட்டாங்குச்சிகளினால் எரிக்கவும்; இதற்கு ஏறத்தாழ 800 கொட்டாங்குச்சிக் கொள்ளும். ஒருநாள் ஆறவிட்டு மறுநாள் பார்த்து மேலேறிய பதங்கத்தைப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு 2-3-அரிசி எடை ஆலம்பால், தேன், நெய் முதலிய அனுபானங்களில் கொடுக்க க்ஷயம், காசம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—பாலன்னமாவது புளிதள்ளி காரமில்லாத ஆகாரத்தையாவது கொள்ளல் சாலச்சிறந்தது.

## 121 ரஜிதபற்பம்

ஒருபலம் வெள்ளிச்சரிகையை ஒரு மண்மூசையில் போட்டு கன்னான் உலையில் வைத்து நிரம்பக் கரிபோட்டு ஊதி சரிகையானது செந்நிறமாக இருக்கும்போது எருக்கம்பாலில் தோய்க்கவும். இப்படி 10-முறை சாய்த்து கல்வத்திலிட்டு ஷை பாலால் அரைத்து வில்லைசெய்து உலர்த்தி அகலில் அடக்கிமேல் அகல்மூடிச் சீலைசெய்து 8-வறட்டியில் புடமிடவும். இப்படியே ஒவ்வொரு முறையும் ஷை பாலால் அரைத்து வில்லைசெய்து அகலிடைக்கிச் சீலைசெய்து புடத்திற்குப்புடம் ஒவ்வொருவறட்டி அதிகப்படுத்தி 3-புடம் போடவும். அப்பால் இப்பற்பத்தைக் கல்லத்தில் போட்டு ஆடுதின்னாப்பாளை, புளிப்புமாதுளம்பழச்சாறு இவைகள் ஒவ்வொன்றிலும் அரைத்து வில்லைசெய்து உலர்த்தி அகலிலடக்கி இரண்டிரண்டு புடம்போடவும். நல்ல பற்பமாகும். இதனைப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதனை வேளைக்கு ½-குன்றிப்பிரமாணம் தினம் இருவேளை தேன், நெய் முதலியவைகளில் கொடுக்க க்ஷயம், காசம் முதலிய பல கபசம்பந்தமான ரோகங்களையும் குணப்படுத்தும்.

### 122 வேறு

ஒருபலம் வெள்ளிச்சரிகையை ஒரு மண்மூசையில் போட்டு கன்னான் உலையில் வைத்து ஊதி சரிகையானது செங்கிறமாக இருக்குந் தறுவாயில் பிரமதண்டு சமூலச்சாற்றில் தோய்க்கவும். இப்படி 15-முறை தோய்த்துக் கல்வத்திலிட்டு அருதா என்று சொல்லப் பட்ட சதாப்புஇலைச் சாற்றைவிட்டு 2-சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி அகலில்வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிடவும். இப்படி 3-புடமிட பற்பமாகும். இதனைப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதனை வேளைக்கு ½-குன்றிப்பிரமாணம் தினம் இருவேளை தேனில் கொடுக்க சுவாசகாசம், கபசம்பந்தமான இருமல் ரோகங்களை குணப்படுத்தும்.

---

## செந்தூர இலம்பகம்

### 123. இலிங்கச் செந்தூரம்

சுத்திசெய்த ஒருபலம் இலிங்கத்திற்கு வேப்பங்காய்கள் பால்பிடிக்குந் தறுவாயில் கொண்டுவந்து இடித்துப் பிழிந்தெடுத்தச் சாற்றை நான்குசாமம் சுருக்குக்கொடுத்து இரண்டுநாள் பரியந்தம் அதன்மேலேறிய வண்டலை நீக்காமல் அப்படியே வைத்துவிடுக. பின்னர் ஒன்றரைப்படி காய்ந்த வேப்பங்கொட்டையை ஒன்றிரண்டாய் இடித்து ஒரு மட்கடத்தில் அரைபாகமிட்டு அதன்பேரில் முன்சுத்தப்படுத்திய இலிங்கத்தை வைத்து மேலே மிகுதியுள்ள வேப்பங்கொட்டைத் துகளைப் போட்டு அடுப்பிலேற்றி சிறுதீயாக அரைமணிநேரம் எரித்து தீயை அதிகப்படுத்த கொட்டைகளில் தீபற்றி எரியும். அத்தருணம் மட்கடத்தைக் கீழே இறக்கி ஆறவிட்டு மறுநாள் இலிங்கத்தை எடுத்து சுத்தமாகத் துடைத்து கல்வத்திலிட்டு 4-5-மணி நேரம் நன்றாய் அரைத்துச் சீசாவில் அடைத்துவைக்கவும்.

பிரயோகம்:—வேளைக்கு அரைகுன்றிப் பிரமாணம் தினம் இருவேளை 3-நாள் தேனில் கொடுக்கச் சர்வசுரமும் தீரும்.

பத்தியம்:—பார்லி கஞ்சி, கோதுமைநொய் கஞ்சி, புழுங்கலரிசி நொய் கஞ்சி முதலியவைகளே சிறந்தன. சந்நிபாத தோஷங்களாக ஏற்பட்டிருப்பின் இலங்கணமே சிறந்தது. ஒருகால் அந்த ஸ்திதியில் ரோகி சகிக்கமுடியாத பசிதாகம் முதலியவற்றால் வருந்தின் மேற்கூறப்பட்ட கஞ்சிகளினின் றெடுத்த தெளிவுசலத்தைக் கொடுத்துவருக.

## 124. வேறு

குட்டிப்பிராயன் இலையை சிறிதுசலம் தெளித்து மெழுகைப் போல் அரைத்து ஒருபலம் துருசுக்கு விளாங்காய் பிரமாணம் கவசம் செய்து, சிறிதுநேரம் உலர்த்தி அதன்மேல் மண்சீலை மூன்று செய்து வைத்துக்கொள்க. பின்னர் 7-8-வறட்டிகளைப் பிட்டுப் புடம்போல் அடுக்கி தீயிட்டு வெந்து செந்நிறமாக இருக்கும் சமயத்தில் மேற்பாகத்திலிருக்கும் வறட்டித் துண்டுகளில் அரைபாகத்தை அப்புறப்படுத்தி முன் சித்தப்படுத்திய துருசு உருண்டையை வைத்து அதன்மேலே முன்களைந்த வறட்டித்துண்டுகளை வைத்துச் சிறிதுநேரம் சென்றபின் கவசம் செய்த மூலிகை நாலாப்பக்கமும் கருகும்படி உருண்டையை புறட்டிக்கொடுக்கவும். புடம் சாங்க சீதளமான பின் கவசத்தை நீக்கிப்பார்க்க துருசு வெளுத்திருக்கும். இந்தத் துருசுபற்பத்துடன் விடதாரிஇலையைச் சேர்த்து மெழுகுபதமாக அரைத்து விளாங்காய் பிரமாணம் ஒருபலம் சுத்திசெய்த இலிங்கத்திற்கு கவசம்செய்து சிறிதுநேரம் ரவியில் உலர்த்தி மண் சீலை-3 செய்து முன்போல் 7-8-வறட்டியில் புடம் போட்டு ஆறவிட்டு இலிங்கத்தை எடுத்துக் கல்வத்திலிட்டு அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு $\frac{1}{2}$-குன்றிப்பிரமாணம் தினம் இருவேளை தேனில் 3-நாள் கொடுக்க எவ்வளவு அசாத்தியமான சுரங்களாயினும் குணமாகும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 125. இலிங்கவன்னபேதி செந்தூரம்

ஒரு பலம் இலிங்கத்திற்கு ஒரு வராகனெடை வீரம் ஒரு வராகனெடை எண்ணெய் வெங்காரம் இவை யிரண்டையும் அன்னக்கொதிநீர் விட்டரைத்து கவசம்செய்து உலர்த்தி வைத்துக் கொள்க

ஒரு மட்கடத்தில் அரைவீசை சேங்கொட்டையின் மூக்கை நறுக்கியாவது அல்லது நறுக்காமலாவது அரைபாகம் கடத்தில் போட்டு அதன்மீது முன்சுத்தப்படுத்திய இலிங்கத்தை வைத்து மிகுதியுள்ள சேங்கொட்டையைப் போட்டு அடுப்பிலேற்றி எரிக்கவும். கொட்டையில் தீப்பற்றிஎரியும்போது எரிப்பதை நிறுத்தி தீயணைந்தவுடன் இலிங்கத்தை அப்புறப்படுத்தி ஆறவிட்டு கல்வத்திலிட்டு அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

இதற்குமேல் அன்னபேதி பலம்-1, வீரம் பலம்-1 இவையிரண்டையும் கல்வத்திலிட்டு பழச்சாற்றால் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். பின்னர் சீலையை நீக்கி செந்தூரத்துள்ள அன்னபேதியை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்தவும்.

பிரயோகம்:—வேண்டும்போது வேளைக்கு இலிங்கச் செந்தூரத்தில் ½-குன்றி எடையும், அன்னபேதி செந்தூரத்தில் ½-குன்றி எடையுமாகத் தேனில் கூட்டிக்கொடுக்க, ½-மணி நேரத்திற்குள் அதிசாரம், கிராணி, விஷபேதி முதலியவற்றை நிவர்த்திசெய்யும். அப்படியும் குணம் ஏற்படவில்லையென உணரின், மீண்டும் ½-மணி நேரத்திற்குப் பின் முன்போல் ஒரு வேளை கொடுக்கவும். இங்ஙனம் இரண்டு மூன்றுமுறை கொடுப்பதற்குள்ளே எத்தகைய பேதிகளும் வசப்படும்.

கிராணியாகயிருந்து சிறுஅளவாக மலம் அடுத்து அடுத்துப் போய்க்கொண்டிருப்பின் மருந்தின் அளவைக் குறைத்து 4-மணி நேரத்திற்கு ஒருமுறை கொடுத்துவரின் எளிதில் குணமாகும்.

பத்தியம்:—எளிதில் ஜீரணிக்கக்கூடிய கஞ்சி, புனற்பாகம் கூட்டுக.

## 126 இலிங்கலவண சேந்தூரம்

ஐந்துபலம் கறியுப்பை (சோற்றுப்பை) கல்வத்திலிட்டு குப்பைமேனிச் சாற்றால் 2-சாமம் அரைத்து அரையணுஅகலமும் கனமும் உள்ள வில்லைகளாகத் தட்டி ரவிமுகத்தில் நன்றாய்க் காயவைத்து ஓட்டில் பரப்பி மேல் ஓடுமூடிச் சீலைசெய்து பத்து விறட்டியில் புடமிடவும் இப்படி 5-புடமிட செந்தூரமாகும். இந்தச் செந்தூரத்தில் ஒருபலம் இலிங்கம் கூட்டி குப்பைமேனிச் சாற்றால் அரைத்து மூன்று வில்லையாகத் தட்டிக்காயவைத்து பொருத்தமான அகலில்

பாப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து அரைபடி உமியின்மத்தியில் வைத்து இரண்டு மூன்றுவறட்டித் துண்டுகளை நெருப்பாக்கி உமி யின்மீது வைத்து தீமூட்டவும் உமிப்புடம் சாங்கசீதளமானபின் சீலையை நீக்கி உள்ளிட்ட மருந்தைக் கல்வத்திலிட்டு அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு குன்றியெடை பனவட்டு, தேன் இவைகளில் தினம் இருவேளை கொடுக்க அதிசாரம், கிராணி, மூல அதிசாரம் எல்லாம் தீரும்.

பத்தியம்:—எளிதில் ஜீரணிக்கக்கூடிய கஞ்சி புனல்பாகம் கூட்டுக.

## 127. அயவீரச்செந்தூரம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—அயம் | பலம் | 2 |
| வீரம் | ,, | |
| சாரம் | ,, | |
| சூதம் | ,, | |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட நான்கு சரக்குகளையும் கல் வத்தில் போட்டு நன்றாய் அரைத்து வெடியுப்புத்திராவகம் விட்டு இரண்டுசாமம் அரைத்து வில்லைசெய்து நிழலில் காயவைத்து ஒரு குடவான அகன்ற சட்டியின் மத்தியில்வைத்து அத்தகைய மற் றோர்சட்டியால் மேல்மூடிச்சந்துக்கு மண்பூசி ஏழுசீலைசெய்து ஒரு நாள் நிழலில் காயவைத்து அடுப்பின்மீது ஏற்றி நான்குசாமம் முத்தீயாக எரித்து ஒருஇரவு ஆறவிட்டு மறுநாள் சீலையை நீக்கிப் பார்க்க அடிசட்டியிலிட்ட வில்லை சிவந்து இருப்பதுடன் மேல்சட் டியிலும் பதங்கம் ஏறிநிற்கும். இவ்வில்லையையும் மேல் ஏறியுள்ள பதங்கத்தையும் சேதப்படாமல் சுரண்டிஎடுத்துக் கல்வத்தில் போட்டு கருப்புவெற்றிலை (கம்மாறுவெற்றிலை) பிரண்டை இவை யிரண்டையும் இடித்துப் பிழிந்தெடுத்த சாற்றால் 2-சாமம் அரை த்து வில்லைதட்டி நிழலில் காயவைத்து முன்போல் சட்டியிலிட்டு மேல்சட்டிமூடி சீலைசெய்து எரிக்கவும். இங்ஙனம் ஒவ்வொரு எரிப் பின் முடிவிலும் அடிசட்டியிலுள்ள மருந்தையும் மேல்சட்டியில் பற்றியுள்ள பதங்கத்தையும் சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்தில் போட்டு ஷை மூலிகைச் சாற்றினாலேயே அரைத்து அரைத்து 4-5- முறைக்கு குறையாமல் புடமிட்டு முடிவில் அடிசட்டியிலுள்ள செந்தூரத்தை அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

: பிரயோகம்:—வேளைக்கு ¼-அல்லது ½-குன்றியெடை தேன் பனவட்டு முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை கொடுக்க பாரிசவாதம், முகவாதம், ஜன்னி, சுரம், குடைச்சல், மேகவாயுவினல் உண்டான பிடிப்பு முதலிய பலரோகங்கள் குணமாகும்.

பத்தியம்:—பிணிக்கேற்றபடி புளியைச் சேர்த்தும் நீக்கியும் இச்சாபத்தியமாக வைத்தல் சாலச்சிறந்தது.

குறிப்பு:—வெடியுப்பு திராவகம் என்பது வெடியுப்பு பலம்-10, படிகாரம்-25, இவையிரண்டையும் இடித்து வாலையிலிட்டு வாங்கும் காரமுள்ள கடைசி நீர்.

## 128. வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—அயம் | பலம் | 1 |
| வீரம் | ,, | 1 |

செய்பாகம்:—இவையிரண்டையும் கல்வத்தில் போட்டு கம்மாறுவெற்றிலைச் சாற்றினல் தினம் ஒன்றுக்கு இரண்டுசாமம் வீதம் இரண்டு நாள் அரைத்து வில்லைதட்டி நிழலில் காயவைத்துக் கொள்க. பின்னர் அவ்வில்லையை பொடித்து பெரும் வில்வக்கனிப் பிரமாணமுள்ள வாய் சிறுத்தகுடுவை (கண்குடுவை) ஒன்றில் போட்டு பலப்பக்கல்லால் வாய்க்குமூடிச் சீலைசெய்து உலரவைத்து அதனை 1½-படி அளவு கொள்ளத்தக்க ஒரு மண்குடுவையில் ஒருவிரற்கடை மணல்போட்டு பரப்பி நடுவில்வைத்து, குடுவையின் கழுத்து வரையிலும் மணல்கொட்டிப் பரப்பி குடுவையை அடுப்பிலேற்றி முத்தீயாக நான்குசாமம் எரித்து ஒருஇரவு ஆறவிட்டு மறுநாள் குடுவையை உடைத்துப்பார்க்கசெந்தூரமாக இருக்கும். இதனை அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு 1-½ குன்றிப்பிரமாணம் ரோகத்தின் வன்மை மென்மைக்கு ஏற்றவாறு அனுபானங்களில் கொடுக்க ஜுரம், ஜன்னி, வாதரோகத்தினல் ஏற்பட்டவலி, குத்தல், குடைச்சல், பிடிப்பு முதலிய பலரோகங்கள் தீரும்.

பத்தியம்:—பிணிக்கேற்றபடி புளிசேர்த்தும் சேர்க்காமலும் இச்சாபத்தியமாக வைத்தல் நன்று. சுரரோகத்தில் கஞ்சி, புனற்பாகம் கூட்டுக.

### 129. இலிங்க சேந்தூரம்

ஐந்து கோழிமுட்டையினின் றெடுத்த வெள்ளைக்கருவை ஒரு சீசாவில்போட்டு அதனில் வீரம், பச்சைகற்பூரம், வெடியுப்புச் சுண்ணம் வகைக்கு வராகனெடை ஒன்றாகப் பொடித்துப்போட்டு வாய்க்கு அடைப்பு இட்டு குலுக்கி குலுக்கி அசையாமல் ஓரிடத்தில் ஒருவாரம் வரையில் வைத்துவிடவும். இங்ஙனம் முடிவுபெற்ற அண்ட ஜெயநீரில் ஒருபலம் லிங்கத்தைத் தோய்த்து தோய்த்து 10-12 முறை ரவியில்வைத்து உலர்த்தவும். இப்படிச் சித்தப்படுத்திய இலிங்கத்தை மறுபடியும் ஷை ஜெயநீரில் தோய்த்து இரண்டு மூன்று கருஊமத்தன் இலையைச் சுற்றி நூலால் கட்டியாயினும் அல்லது அரைத்து கவசித்தாயினும் பக்குவப்படுத்தி அதன்பேரில் இரண்டொரு மண்சீலைசெய்து தரையில் இரண்டு விரற்கடை சிறு மணல் சாண் அகலம் பரப்பி அதன்மத்தியில் வைதது மேலே 4 விரற்கடை யுயரமிருக்கமணல் குவித்து ஒருவறட்டியைப் பிட்டு மேல்அடுக்கி புடமிடவும். புடம்சாங்கசீதளமானபின் இலிங்கத்தின் பேரில் இருக்கும் கவசத்தை அப்புறப்படுத்தி மீண்டும் ஜெயநீரில் தோய்த்து முன்போல் கருஊமத்தன் இலையைச் சுற்றிச் சீலைசெய்து முன்போல் மணல் மறைவில் வைத்து $1\frac{1}{2}$-வறட்டியில் புடமிடவும். இப்படியே புடத்திற்கு $\frac{1}{2}$-வறட்டி அதிகப்படுத்திக்கொண்டே 15-20 புடம்போட்டு எடுக்கலிங்கமானது ஒருவிதமான கட்டாகும். இந்த இலிங்கத்தைக் கல்வத்திலிட்டு அரைத்து சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு 1-2 அரிசிபெடை தினம் இருவேளையாக 5-7 நாள் கொடுக்க முபற்கண்டன், குமரகண்டன், முபல்வலி குதிரைவலி, காக்கைவலி, புறவீச்சு, உள்வீச்சு, சன்னிதோஷம், நெஞ்சுகுத்து, வாயுகுத்து முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—கடூரமான ரோகங்களில் கஞ்சி புனல்பாகம் கொடுக்கவும் சாமான்னிய ரோகங்களில் இச்சாபத்தியம்.

### 130. வேறு

(பிரமியத்திற்கு)

விதைமுதிராத பக்குவத்திலுள்ள பூவரசங்காய்களைக்கொண்டு வந்து இடித்துப் பிழிந்தெடுத்தசாற்றை ஒருபலம் இலிங்கத்திற்கு முறைப்படி சுறுக்குக் கொடுத்து வைத்துக்கொள்க. மறுபடியும்

முன்போல் இடித்துப் பிழிந்தெடுத்த கால்படிச்சாற்றை ஒருகோப் பையில்விட்டு அதனில் முன்சித்தப்படுத்தியுள்ள இலிங்கத்தைப்போ ட்டுதினந்தோறும் கடும்ரவியில் வைத்துக்கொண்டுவரவும். இப்படி சாறு எல்லாம் சுண்டிமெழுகுபதமான சமயத்தில் அந்த இலிங்கத் தின்பேரிலேயே சமகனமாக அங்கிப்பூட்டிக் காயவைத்து, அதன் பேரில் மீண்டும் பூவரசங்காய்களை அரைத்து ஒரு விளாங்காய் பிர மாணம் கவசஞ்செய்து சிறிது உலர்த்தி மண்சீலை ஏழு செய்து சாம்பலில் புரட்டி சிறுவறட்டி பத்தில் புடமிட்டு எடுத்துக் கவ சத்தை நீக்கி இலிங்கத்தை கல்வத்தில்போட் டரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ¼-½-குன்றிப் பிரமாணம் தினம் இரு வேளை நெய் வெண்ணெய் முதலிய வனுபானங்களில் கொடுத்துக் கால்மணி நேரத்திற்குப் பின் இரண்டு சோற்றுக்கற்றாழை மடலை மேல்தோல் சீவி சிறுதுண்டுகளாக நறுக்கி ஏழுமுறை சலம்விட்டுக் கழுவி சர்க்கரைதொட்டு உண்ணும்படிச் செய்யின் மூன்றுநாள் ஆறுபொழுதில் நீர்எரிச்சல், வெள்ளை, நாட்பட்ட தந்திமேகம், அடுத்தடுத்துப் போகும் வெகுமூத்திரம் முதலிய ரோகங்களை நிவர்த்திசெய்வதுடன் சுகமான நித்திரையை உண்டாக்கும்.

பத்தியம்:—காரசாரமற்ற ஆகாரங்களைக் கொள்க.

### 131. பஞ்சபாஷாண செந்தூரம்

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—வெள்ளைபாஷாணம் | பலம் 1 | இலிங்கம் | பலம் 1 |
| மனோசிலை | ,, | காந்தம் | ,, |
| அரிதாரம் | ,, | கெந்தகம் | ,, |
| சூதம் | ,, | | |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட ஏழு சரக்கினையும் கல்வத்தி லிட்டு குப்பைமேனி, வெற்றிலை, பருத்தி, வெள்ளெருக்கன், துளசி, உத்தாமணி, பொடுதலை ஆகியவற்றின் ஒவ்வொரு சாற்றினாலும் நான்குசாமம் வீதம் அரைத்து ஒவ்வொருமுறையும் நன்றாய் ரவி யில் காயவைத்து முடிவில் நான்குபாகமாக பங்கிட்டு வில்லைதட்டி 20-நாள்வரையிலும் நன்றாய் உலர்த்தி வைத்துக்கொள்க ஆப்பச் சட்டியைப் போன்ற தொன்றில் முன் சித்தப்படுத்திய வில்லைகளில் ஒன்றை, எடுத்து வெற்றிலைசுற்றி கவசமிட்டு நடுவில்வைத்து அத்தகைய மற்றோர் சட்டியால் மேல்மூடி சந்துக்கு மண்பூசி ஏழு

சீலை வலுவாகச்செய்து ரவியில் உலர்த்தி அடுப்பிலேற்றி தீபாக்கினியாக நான்குசாமம் எரித்தெடுக்கவும். ஒருகால் நிறம் சரிவர செந்தூரிக்காமலிருந்தால் மீண்டும் வெற்றிலைசுற்றிக்கவசமிட்டு குறிப்பாக வில்லையின் அடி மேற்புறமாகவும் மேற்புறம் அடிப்புறமாகவும் திருப்பிவைத்து மேல்சட்டி மூடிச் சீலைசெய்து இரண்டொரு சாமம் தீபாக்கினியாக எரித்தெடுக்க செந்தூரமாகும். இப்படியே மற்ற வில்லைகளையும் செய்துகொள்க சிலசந்தர்ப்பங்களில் இம்மருந்து கருத்துப்போவதுண்டு. அங்ஙனமாயின் பிரயோசனமற்றதாகும். ஆகையால் கஷ்டத்தைப் பெரிதாகப் பாராமல் நான்கு வில்லைகளையும் சமயோசிதமாய் வெவ்வேறு காலங்களில் முன்பின் எரிப்பு திட்டத்தை பகுத்தறிந்து செய்யின் இரண்டொரு வில்லைகள் எவ்விதத்திலும் கூறியவண்ணம் சிவந்திருக்கும். இதுவே சிறந்ததென் றுணர்க.

பிரயோகம்:—வேளைக்கு அரிசிஎடை தினம் இருவேளை 5-7-நாள் தக்க அனுபானங்களில் கொடுக்க சூலை, சன்னி, மேகம், வெண்குட்டம், சுரம், வாதம் 80,கிராணி, குன்மம், பிளவை, கண்டமாலை, அண்டவாதம், பவுத்திரம், சுவாசகாசம், கிரந்தி, புத்து,குட்டம், அரிகரப்பான், சொரிகரப்பான், கஜசர்மரோகம், புழுவெட்டு முதலிய பலரோகங்களையும் குணப்படுத்தும்.

பத்தியம்:—ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு புளி தள்ளியும் தள்ளாமலும் இச்சாபத்தியமாக வைததல் சாலச்சிறந்தது.*

குறிப்பு:—இம்முறையில் சூதத்திற்கு பதிலாக பூரம்சேர்த்துச் செய்வதும் உண்டு. இதற்கு உலகோத்ம செந்தூர மென்றும் கூறுவர்.

## 132. குப்பிரச செந்தூரம்

சூதம்பலம்-1, கெந்தகம் பலம்-2, இவையிரண்டையும் ஒன்றுகத் தொந்தித்துக் கல்வத்திலிட்டுக் கருந்துளசிச்சாற்றால் நான்கு சாமம் அரைத்து உலர்த்திப்பொடிசெய்து ஏழுசீலை செய்த குப்பியிலிட்டு பலப்பக்கல்லால் வாயடைத்துச் சீலைசெய்து வாலுகாயந்திரத்ில்வைத்து 6-ஜாமம் முத்தீயாகஎரித்து ஒருநாள் ஆறவிட்டுக் குப்பியை உடைத்துப்பார்க்க சூதமும் கெந்தியும் மேலேறிப் பிடித்திருக்கும். இதனைக் கல்வத்திலிட் டரைக்க முருக்கம்பூ வர்ணமாக செந்தூரித்திருக்கும்.

பிரயோகம்:—வேளைக்கு ½-குன்றிப் பிரமாணம் தினம் இரு வேளை தேனில்கொடுக்க சர்வசுரமும் தீரும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 133. வேறு

சூதம் பலம்-1 கெந்தகம் பலம்-2, தாளகம் பலம்-¼, இம்மூன்றையும் கிரமப்படி முதலில் கெந்தகத்தை ஓட்டிலிட்டு உருக்கி சூதம்விட்டு புகையாமல் கிளறி கருத்தபதத்தில் சுறண்டிக் கல்வத்திலிட்டு அதனுடன் தாளகம்கூட்டி கண்டங்கத்தரி சமூலச் சாற்றை நன்றாய் வடிகட்டி கொஞ்சங்கொஞ்சமாக விட்டு நான்கு சாமம் அரைத்து உலர்த்தி முன்போல் ஏழுசீலைசெய்த குப்பியிலிட்டுபலப்பகல்லால் வாய்மூடிச் சீலைசெய்து வாலுகாயந்திரத்தில் வைத்து 6-சாமம் முத்தீபாக எரித்தெடுக்க முன்போல் செந்தூரமாகும். இதனை அரைத்துச் சீசாவிலிடவும்.

பிரயோகம்:—சுரத்தின் வன்மைமென்மைக்கேற்றவாறு ½-அல்லது ¼-குன்றிப் பிரமாணம் தேனில் தினம் இருவேளை மூன்று நாள் கொடுக்க சர்வசுரமும் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 134. புடரச செந்தூரம்

சூதம் பலம்-2, கெந்தகம் பலம்-2, வெங்காரம் பலம்-2, இவைகளில் சூதத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திலிட்டு சுத்த கருப்பாக மடியும் வரையில் அரைத்துப் பின்னர் வெங்காரம்கூட்டி மீண்டும் ஒருமணி நேரம் அரைத்து வைத்துக்கொள்க. பெரிய இளநீர் பிரமாணமுடைய இரண்டு கழுத்து சிறுத்த மட்கடங்களைக் கொண்டுவந்து ஒன்றில் முன்சித்தப்படுத்திய மருந்தையிட்டு அக்கடத்தின்பேரில் மற்றோர் கடத்தின்வாய் மேற்புறமாகவும், அதன் அடிபாகம் மருந்திட்டகடத்திற்கு மூடியாகவும் அமர்த்தி சந்துக்கு மண்பூசிச் சீலைசெய்து ஒன்றைவிட்டொன்று விலகாதபடி அடிகடத்தின் கழுத்திற்கும் மேற்கடத்தின் கழுத்திற்கும் கம்பிகளால் நாற்புறமும் சுற்றிக்கட்டி காயவைத்து பின்னர் இருபது அல்லது இருபத்தைந்து வறட்டிகளைப் பிட்டு அடிகடம் சூழ அரையடிப் பிரமாணம் சமகனமாக அடுக்கித்தீயிடவும். புடமானது சாங்க சீதளமாக ஆறினபின்னர் மேற்கடத்தின் அடியில் பார்க்க செந்தூரம் படையாகப் பிடித்திருக்கும் இதைப் பக்குவமாகப்

பெயர்த்தெடுத்துக் கல்வத்திலிட்டு அதனுடன் அடிக்கட்டத்தில் பொரிந்துள்ள வெங்காரத்தையும் கூட்டி அரைத்துச்சீசாவிலிடவும்

பிரயோகம்:—வேளைக்கு ¼-அல்லது ½- குன்றிப்பிரமாணம். தேனில் தினம் இருவேளை மூன்றுநாள் கொடுக்க சர்வசுரங்களும் நிவர்த்தியாகும். நல்ல இரத்தமும் உண்டாகும்.

பத்தியம்:—முற்கூறியபடியேயாம்.

குறிப்பு:—இவ்விரண்டு மட்கடங்களும் படிமானமில்லாமல் வறட்டிகளின்மீது நிற்பதால் வறட்டிகள் எரிந்து சரியும்போது கடங்களும் சாயுமாதலால் கவனித்து மூன்றுகோல்களால் மேல் கடத்திற்கு முட்டுக்கொடுத்தாயினும் அல்லது புடமிட்ட ஸ்தானத்திற்கு இருபுறமும் இருகோல்களை நட்டு தீ எட்டாதிருக்கும் உயரத்தில் குறுக்கிச்சட்டமிட்டுக் கட்டி அச்சட்டத்திற்கும் புடமிட்டிருக்கும் மேல்சட்டியின் வாய்க்கும் ஓர் மெல்லிய கம்பியால் கட்டி வைக்க இடையூறின்றி மருந்து முடியும்.

### 135. சண்டமாருதச் செந்தூரம்

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—வீரம் | வராகனெடை | | 2 |
| கெந்தகம் | ,, | | 2 |
| பூரம் | ,, | | 4 |
| இரசசெந்தூரம் | ,, | | 4 |
| இலிங்கம் | ,, | | 8 |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட ஐந்து சரக்குகளையும் கல்வத்திலிட்டு மூன்றுசாமம் மையோயாமல் அரைத்து, சீலையில் முடிச்சு கட்டி முதலில் 1½-படி எருமைக்கோமயத்திலும், இரண்டாவது 1½-படி பசுவின்பாலிலும், மூன்றாவது 1½-படி இளநீரிலும் 5-6-அங்குலத்திற்கு மேல் முடிச்சுத் தொங்கும்படியாகக் கட்டிதோலாந்தரவிதிப்படி எரித்து முடிச்சியிலுள்ள மருந்தை உலர்த்தி மீண்டும் கல்வத்திலிட் டரைத்து சீசாவிலிடவும். அல்லது, அரைவீசை எட்டிப்பட்டையைக் கொண்டுவந்து பஞ்சுபோல் இடித்து எண்மடங்கு சலம்விட்டு 8-ல் ஒன்றாய் சுண்டக்காய்ச்சி பிசைந்து வடிகட்டி அதனுடன் ½-படி சிறுதும்பையிலைச் சாற்றைக் கூட்டி ஓர் மட்கடத்திலிட்டு முற்கூறியவாறு முடிச்சுக்கட்டிய மருந்தை அரையடிக்கு மேலிருக்கும்படி கட்டி தோலாந்திர விதிப்படி எரித்து முடிச்சியிலுள்ள மருந்தை உலர்த்தி மீண்டும் கல்வத்திலிட்டு அரைத்துச்

சீசாவில்விடவும். அல்லது, முன் சித்தப்படுத்திய சண்டமாருதச் செந்தூரத்தைக் கோழிமுட்டையின் வெண்கருவால் 2-சாமம் நன்றாய் அரைத்து 4-5 வில்லைகளாகச் செய்துலர்த்தி ஒரு பீங்கானில் கொதிக்கின்ற சலம்விட்டு அதில்போட்டு வில்லைகள் விரியுஞ்சமயத்தில் சலத்தை வடித்துவிட்டு ரவியில் காயவைத்து முன்போல் மீண்டும் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவிலிடவும்.

பிரயோகம்:—வேளைக்கு ¼-அல்லது ½- குன்றிப் பிரமாணம் தேனில் தினம் இருவேளை மூன்றுநாள் கொடுக்க சர்வசுரமும் நிவர்த்தியாகும். இன்னும் இம்மருந்து சந்நி-13, தோஷம்-7, பிலிகை, மகோதரம், வாதம்-84, பாரிசவாயு, நடுக்கல்வாதம், முகவாதம், கணுக்கால்வாதம், சூலை, பவுத்திரம், கண்டமாலை, அரையாப்பு, புண்புரைகள் யாவும் தீரும்.

பத்தியம்:—ரோகத்திற்கேற்றவாறு இச்சாபத்தியமாகவும் கடும் பத்தியமாகவும் வைத்தல் நன்று.

### 136. வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—வீரம் | வராகனெடை | 2 |
| கெந்தகம் | ,, | 2 |
| பூரம் | ,, | 4 |
| இலிங்கம் | ,, | 8 |
| இரசசெந்தூரம் | ,, | 16 |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட ஐந்துசரக்கினையும் கல்வத்திலிட்டு நான்குசாமம் அரைத்து எடுக்க பவளநிறமுடையதாக இருக்கும் இதனைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ¼-அல்லது ½-குன்றிப் பிரமாணம் தேனில் தினம் இருவேளை 3-5-நாள் கொடுக்க சுரம், சந்நி முதலியவை நீங்கும். அளவைக் குறைத்து நீடித்துக் கொடுப்பின் குன்மம், பிலிகை, மகோதரம், வாதம், பாரிசவாயு, நடுக்கல்வாதம், முகவாதம், கணுக்கால்வாதம், சூலை, பவுத்திரம், கண்டமாலை, அரையாப்பு, புண்புரைகள், மேகவாயு, பிடிப்பு யாவும் தீரும்.

பத்தியம்:—ரோகத்தின் வன்மை மென்மைக்கேற்றவாறு புளி சேர்க்காமலும் சேர்த்தும் இச்சாபத்தியமாக வைத்தல் சாலச்சிறந்தது.

### 137. அன்னபேதிச் செந்தூரம்

இரண்டுதோலா அன்னபேதியைக் கல்வத்திலிட்டு நன்ருப் அரைத்து இரவிமுகத்தில் உலர்த்தி ஓர் சிறு அகலில் ஒருதோலா பொடியைப் பரப்பி அதன்மீது ¼-அல்லது½- தோலா அபினியை வில்லையாகச் செய்துவைத்து அதன்மேல் மிகுதியுள்ள மற்ருேர் தோலா அன்னபேதிப் பொடியைப் பரப்பிமேல் அகல்மூடிச் சீலை செய்து ரவியில் காயவைத்து கரிநெருப்பனலில் வைத்து அகல் சிவக்கஊதி எடுத்து ஆறவிட்டுச் சீலைபைநீக்கிப்பார்க்க அன்னபேதி செந்தூரித்திருக்கும். இதனைக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக

பிரயோகம்:—வேளைக்கு குன்றிப்பிரமாணம் தேனில் தினம் இருவேளை 3-நாள் கொடுக்க சீதபேதி, ரத்தபேதி, இன்னும் பல வாருன வயிற்றுப்போக்கு முதலியவற்றை குணமாக்கும்.

பத்தியம்:—காரசாரமில்லாத உணவுகளைக் கொடுத்தல் சாலச் சிறந்தது.

### 138. சுயமக்கினிகுமாரன்

| | | |
|---|---|---|
| சரக்கு:—சூதம் | வராகனெடை | 4 |
| மனேசிலை | ,, | 4 |
| கெந்தகம் | ,, | 8 |
| காந்தம் | ,, | 16 |
| அயப்பொடி | ,, | 32 |
| இலிங்கம் | ,, | 1 |
| கல்நார் | ,, | 1 |
| கல்மதம் | ,, | 1 |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்டஎட்டுச்சரக்குகளில் அயப்பொடியைக்கல்வத்திலிட்டு குமரிச்சாற்ருல் ஒருசாமம்அரைத்துபின்னர் மற்ற மருந்துகளையும் ஒருங்குச்சேர்த்து ஷை மூலிகைச்சாற்றினலேயே மீண்டும் ஒன்றரைசாமம் அரைத்துக்காயவைத்துச் சுரண்டி துப்புயில்லாமல் சுத்தப்படுத்திய ஒரு அயக்கிண்ணத்தி லிட்டுக் கடுமையான ரவிமுகத்தில் வைக்க புகைந்து செந்தூரமாகும். இதனைக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—இதனில் குன்றியெடை இஞ்சி சாற்றில் தினம் இருவேளை பத்துநாள் கொடுக்க வாதசுரம், அஷ்டகுன்மம், சந்நி

முதலியவைகள் தீரும். கரிசலாங்கண்ணிச் சாற்றில் கொடுக்க பாண்டு, சோபை தீரும். தேனில் கொடுக்க மகோதரம், உளமாந்தை, பிரமேகம், கோவை, கிராணி, மந்தாக்கினி, நீரிழிவு முதலிய ரோகங்கள் யாவும் குணப்படும்.

பத்தியம்:—சமயோசிதமாய் ரோகத்திற் கேற்றவாறு பத்தியம் வைத்தல் நன்று.

## 139. அக்கினிகுமாரன்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சரக்கு:—அயப்பொடி | பலம் | 1 | கெந்தகம் | பலம் | 1 |
| காந்தம் | ,, | 1 | வெங்காரம் | ,, | 1 |
| இலிங்கம் | ,, | 1 | சூதகம் | ,, | 1 |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட ஆறு சரக்குகளையும் கல்வத்தி லிட்டு குமரிச்சாற்றால் 4-சாமம் அரைத்து உலர்த்திப்பொடிசெய்து துப்பறச் சுத்தஞ்செய்த ஒரு அயகிண்ணத்தில் போட்டு கடுமை யான ரவியில் வைக்கப் புகைந்து செந்தூரமாகும். இப்படி அரை த்து அரைத்து மூன்றுமுறை ரவிமுகத்தில் வைத்துக்கொண்டு வர திவ்வியமானச் செந்தூரமாகும். இதனை சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—இதனில் குன்றியெடை திரிகடிப்பிரமாணமுள்ள திரிகடுகு சூரணத்தில் சேர்த்து தேன்விட்டு மத்தித்து தினம் இரு வேளை கொடுக்க சூலை, அஷ்ட குன்மம், சந்நி, சுரம் முதலியவைகள் நிவர்த்தியாவதுடன் சிற்றளவாக நீடித்துக் கொடுப்பின் வாதம்-84, வலிசம்பந்தமான ரோகங்கள், மூர்ச்சை, நெஞ்சடைப்பு, கிரந்தி, அரையாப்பு முதலிய பல ரோகங்களும் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—ரோகத்திற்கேற்றவாறு புளிதள்ளியும் தள்ளா மலும் இச்சாபத்தியமாக வைத்தல் வேண்டும்.

## 140. வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—அயப்பொடி | பலம் | 4 |
| காந்தம் | ,, | 8 |
| சூதம் | ,, | 16 |
| கெந்தகம் | ,, | 32 |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட நான்கு சரக்குகளில் சூதமுட ன்கெந்தகத்தைக்கல்வத்திலிட்டு சூதம்மடிய அரைத்து பின்னர் மற் றவைகளைக் கூட்டி குமரிச்சாறுவிட்டு இருசாமம் அரைத்துத் துப்

பில்லாமல் வெள்ளிபைப்போல் சுத்தப்படுத்திய இருப்புப்பாத்திரத்தில் வில்லைதட்டி கடும் ரவியில் ஒருநாள் வைக்க புகைந்து செந்தூரமாகும். ஒருகால் உஷ்ணக்குறைவால் செந்தூரமாகாவிடின் மீண்டும் கல்வத்திலிட்டு குமரிச்சாற்றால் அரைத்து முன்போல் இருப்புப்பாத்திரத்தில் வில்லைதட்டி கடும்ரவியில் வைக்க புகைந்து செந்தூரமாகும். இதனை நன்றாய் அரைத்து சீசாவில் அடைத்து ஒருமாதம் நெற்குழியில் வைத்து எடுக்கவும்.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றியெடை இஞ்சி, தேன், திரிகடுகு முதலிய அனுபானங்களில் கொடுக்க குன்மம், மகோதரம், அதிசாரம், கிரிசை, மூலைமூலம், புண்புரைகள் கிராணி, புளியேப்பம், அண்டவாதம், சந்நி, சுரம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—முற்கூறியவாறே.

## 141 மால்தேவிச் செந்தூரம்

| | | | | |
|---|---|---|---|---|
| சரக்கு:— | தாளகம் | பலம் ¼ | அயப்பொடி | பலம் ¼ |
| | இலிங்கம் | ,, | நாகம் | ,, |
| | கெந்தகம் | ,, | சூதம் | ,, |
| | மனோசிலை | ,, | | |

செய்பாகம்:—முற்கூறப்பட்ட ஏழு சரக்குகளில் நாகத்தையும் சூதத்தையும் எடைபோகாமல் தொந்தித்து மற்றச் சரக்குகளுடன் கூட்டிக் கல்வத்திலிட்டு மலைவேப்பிலைச் சாற்றால் நான்குசாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து பொருத்தமான அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து காயவைத்துக்கொள்க. வறட்டிகளைத் துண்டுதுண்டாகப்பிட்டு ஜாண் அகல உயரமுள்ளபடி புடமடுக்கி தீயிட்டு வெந்து செந்தணலாக இருக்குஞ்சமயத்தில்பாதி வறட்டித்துண்டுகளை அப்புறப்படுத்தி அதன்மீது முன் சித்தப்படுத்திய அகலை வைத்து அப்புறப்படுத்திய வறட்டித்துண்டுகளை மீண்டும் அதன்மீது அடுக்கி விட்டுவிடுக. இங்ஙனம் இட்ட புடமானது சாங்கசீதளமானபின் சீலையைநீக்கி உள்ளிட்ட மருந்தை மீண்டும் கல்வத்திலிட்டு ஷை மூலிகைச்சாற்றால் அரைத்து வில்லைதட்டி காயவைத்து அகலிலடக்கிச் சீலைசெய்து முன்போல் புடம்போடவும் இப்படி கருஞ்சிவப்பாக நிறம் காண்கிற பரியந்தம் இரண்டு மூன்றுபுடம்போட்டு அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ½-அல்லது 1-குன்றிப்பிரமாணம்நெய், தேன் முதலியவைகளில் தினம் இருவேளை கொடுக்க சூலை, சுவாச காசம், மேகம், குட்டம், வாயு, பித்தம், கிருகிருப்பு, கைகால் எரிச்சல், விக்கல், வாந்தி, சந்நி, சுரம், இழுப்பு, பக்கவாதம், மேக வெட்டை, வெள்ளை, கருப்பச்சூலை, நரம்பின் பலஹீனம் முதலியவற்றைக் குணப்படுத்தும்.

பத்தியம்:—ரோகத்திற்கேற்றவாறு கடும்பத்தியமாகவும் இச்சா பத்தியமாகவும் வைத்தல் பண்டிதருடைய பொறுப்பாகும்

குறிப்பு:—இந்த மால்தேவிச் செந்தூரத்தை ஆரம்பிப்பதற்கு முன் செய்யவேண்டிய சுத்திக் கிரமங்கள் அடியில் கூறப்பட்டுள்ளன.

தாளகம்:—ஒரு மட்கடத்தில் ¼-படி கற்சுண்ணும்பை யிட்டு அதன்பேரில் ½-பலம் தாளகத்தை யிட்டு, அதன்பேரில் முன்போல் ¼-படி கற்சுண்ணும்பை யிட்டு ஒருபடி பனங்கள்விட்டுத் தாளித்து மறுநாள் எடுத்து அலம்பி முன்போல் மற்றோர்முறை தாளிக்கவும். இப்படி 3-முறை செய்த தாளகத்தை இலைநடுவே சிவப்புக் கோடுடைத்தாயுள்ள முள்ளிக்கீரை சமூலத்தை இடித்துப்பிழிந்த சாற்றால் நாலுசாமம் சுருக்குக்கொடுத்து வைத்துக்கொள்க

இலிங்கம்:—அரைப்பலம் இலிங்கத்தை முலைப்பாலில் மூன்று நாள் ஊரப்போட்டெடுத்து வெள்ளைக் காட்டாமணக்கின் பாலிலாயினும் அத்திக்கள்ளிலாயினும் 4-சாமம் சுருக்குக்கொடுத்து வைத்துக்கொள்க.

கெந்தகம்:—ஐவண்ண இலையை அரைத்து பசுவின்பாலில் கரைத்து ஒரு வாயகன்ற குடுவையிலிட்டு வாய்க்குச் சல்லடை போன்ற சீலைபால் வாய்கட்டி அதன்மேல் ஒருபலம் கெந்தகத்தைப் போட்டு குடுவையின் வாய் தரைமட்டத்திற்கு இருக்கப் பூமியில் புதைத்து அதன்பேரில் ஒரு அகன்ற சட்டியைமூடி 7-8 விறட்டி மேல்அடுக்கி புடமிடவும். கெந்தகமானது உருகி மணிமணியாக அடிக்குடுவையிலுள்ள பாலில் விழுந்திருக்கும். இப்படி மூன்று தீட்சை செய்து வைத்துக்கொள்க.

மனோசிலை:—எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து உலர்த்தி வைத்துக்கொள்க.

அயப்பொடி:—கல்லுருவியிலைச் சாற்றாலாயினும் பழச்சாற்றாலாயினும் அரைத்துக் கழுவி உடனே சேர்த்தல்வேண்டும்.

நாகம்:—இலுப்பை நெய்யில் ஏழுமுறை உருக்கிச் சாய்த்து எடுத்துக்கொள்க.

சூதம்:—இலிங்கத்தினின்று முறைப்படி வாலைரசமாகச்செய்து வைத்துக்கொள்க.

### நாகத்தையும் சூதத்தையும் தொந்திக்கும் மார்க்கம்

நாகத்தை ஒரு அயக்கரண்டியிலிட்டு அடுப்பிலாவது கரி நெருப்பின் மேலாவது இட்டு உருக்கி நெருப்பினின்று கீழிறக்கி நாகம் ஏடுகட்டி உரையும்படியான பக்குவத்தில் அவ்வெடை சூதத்தை அந்நாகத்தின்பேரில் விட கிரகித்துக்கொள்ளும். நாகம் அதிக சூடாகஇருக்கும்போதும் கரண்டி சூடாக இருக்கும்போதும் சூதத்தை விடக்கூடாது. சிலசமயம் வெடித்து சூதம் சிதறுண்டு போகும் இப்படி தொந்தப்படுத்திய ஒருபலம் நாகசூதத்திற்கு விலாரி இலையையும் அரைபலம் துருசையும் கூட்டி அரைத்துக் கவசம்செய்து மண்சீலைசெய்து உருகாமல் அவிப்புடமாக இரண்டொரு வறட்டியில் புடம் போடவும்; இப்படி 3-புடமிட்டு எடுத்துக்கொள்க. இவ்வாறு சுத்திக் கிரமங்களுடன் செய்யப்பட்ட மால்தேவிச் செந்தூரம் தனக்குரிய குணபாகங்களில் எள்ளளவேனும் குறையாது. அவசரநிமித்தமாகச் செய்யக்கூடியவைகள் சிறிது குணம்மாறுபட்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை

### 142. அயகாந்த செந்தூரம்

காந்தம் பலம்-2, நயப்பு அயப்பொடி பலம்-2, இவையிரண்டையும் கல்வத்திலிட்டு மூலைப்பாலால் நான்குசாமம் அரைத்து அரையணு அகலமும் கனமும் உள்ளவாறு வில்லைகள் தட்டிக் காயவைத்து அகலமான அகலில் ஒன்றின்மீது ஒன்று தாக்காவண்ணம் பரப்பி பொருத்தமான மேல்அகல் மூடிச் சீலைசெய்து காயவைத்து 50-வறட்டியில் புடம்போடவும். பின்னர் உள்ளிட்ட மருந்தை எடுத்துக் கல்வத்திலிட்டு கரிசாலைசாற்றினாலும் நாறுங்கரந்தையின் சாற்றினாலும் முன்போலரைத்து ஒவ்வொரு முறையும் முற்கூறப்பட்டபடி புடமிட செந்தூரமாகும். இதனை அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு குன்றியெடை தேனில் தினம் இரு வேளை கொடுக்க காமாலை, சூலை, பித்தத்தாலுண்டாகிற கால்வெடிப்பு, பித்தவெட்டை, கைகால் குடைச்சல், பாண்டு, சோபை, அதிசாரம், இன்னும் இரத்தக்கேட்டினாலுண்டான மேகப்படைகள் எல்லாம் தீரும்.

பத்தியம்:—மருந்துண்ணும் காலம்வரையில் போகம், புகை, புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் ஆவசியகம்.

## 143. வேறு

காந்தம் பலம்-2, நயப்பு அயப்பொடி பலம்-2, இவையிரண்டையும் கல்வத்திலிட்டு சோற்று கற்றாழைப்பாலால் 3-சாமம் அரைத்து சிறுவில்லைகளாகச் செய்து உலரவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடவும். இப்படி ஏழு புடமிட குணங்கொடுக்கக்கூடிய செந்தூரமாகும்.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றியெடை தேனில் தினம் இருவேளை 5-7-நாள் கொடுக்கப் பாண்டு, சோபை முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு இச்சாபத்தியமாகவும் புளிநீக்கியும் வைத்தல்வேண்டும்.

## 144 காந்தச்செந்தூரம்

| | |
|---|---|
| சரக்கு:—காந்தம் | பலம் 1 |
| கெந்தகம் | பலம் 1 |

செய்பாகம்:—இவைதம்மைக் கல்வத்திலிட்டு முதலில் கரிசாலைச்சாற்றால் நான்குசாமம் அரைத்து 3-வில்லைகளாகத் தட்டி உலரவைத்து அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து காயவைத்து 30-வறட்டியில் புடமிடவும்.

இரண்டாவது, முடிவுபெற்றுள்ள மருந்தோடு மீண்டுஞ் சமனெடை கெந்தகம் கூட்டி முன்போல் கரிசாலைச்சாற்றால் இருசாமம் அரைத்து வில்லைகளாகத்தட்டி காயவைத்து அகலிலடக்கிச் சிலைசெய்து உலரவைத்து 30-வறட்டியில் புடமிடவும்.

மூன்றாவது, மீண்டும் அம்மருந்தோடு சமனெடை கெந்தகம் கூட்டி பழச்சாற்றால் இருசாமம் அரைத்து வில்லைதட்டி காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிடவும்.

நான்காவது, அத்தகைபெறுமுடிவுபெற்ற மருந்தினெடைக்குச் சமன்கெந்தகம் கூட்டி மொத்தஎடைக்கு சித்திரமூலம்வேர் பட்டைச்சேர்த்து முலைப்பாலால் இருசாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து காயவைத்து 30-வறட்டியில் புடமிடவும்.

ஐந்தாவது, இங்ஙனமெடுத்த மருந்தினோடு சமன்கெந்தகமும் சித்திரமூலம்வேர் பட்டையையும் கூட்டி கோழிமுட்டையின் வெண்கருவால் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து அரையணு அகலமும் கனமும் உள்ள வில்லைகளாகச் செய்து காயவைத்து மண்ணோட்டில் பரப்பி மேல் ஓடுமூடிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிடவும்.

ஆறுவது, மீண்டும் முன்மருந்தைக் கல்வத்திலிட்டு எருக்கம் பாலால் அரைத்து முன்போல் இலேசானவில்லைகளாகச் செய்து உலரவைத்து முன்போல் ஓட்டில்பரப்பி மேல் அகல்மூடிச் சீலை செய்து 30-வறட்டியில் புடமிடவும். இது கருஞ்சிவப்பாகத்தானிருக்கும்.

பிரயோகம்:—வேளைக்கு 1-1½-குன்றியெடை தேனில் கொடுக்கப்பாண்டு, கவுசை, சோபை, பித்தப்பாண்டு, அண்டவாயு முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—போகம், புகை, புளி கூடாவாம்.

145 வேறு

சரக்கு:—நாந்தம் பலம் 1
கெந்தகம் ,, 1

செய்பாகம்:—இவைதம்மைக் கல்வத்திலிட்டு எருக்கம்பாலால் இருசாமம் அரைத்து சிறுவில்லைகளாகச் செய்து ரவியில்உலர்த்தி அகலில்பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து காய்ந்தபின் 20-வறட்டியில் புடமிடவும். இவ்வாறு ஒன்பதுமுறை எருக்கம்பாலாலரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து புடமிட்டபின்னர் பத்தாவதுமுறைமருந்தின் எடைக்கு நான்கிலொருபாகம் வெடியுப்புக் கூட்டி எருக்கம்பாலால் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து 10-வறட்டியில் புடமிட்டுக் கல்வத்திலிட் டரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றியெடை தேனில் தினம் இருவேளை கொடுக்க 5 அல்லது 7 நாளில் பாண்டு, சோபை முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக வைத்தல் நன்று.

### 146. தனிக்காந்தச்செந்தூரம்

காந்தம் பலம்-4, ஆவாரம்வேர் பட்டைச் சூரணம்-4, இவையிரண்டையும் கல்வத்திலிட்டு சோற்றுக்கற்றாழை மடல் சாறுவிட்டு நான்குசாமம் நன்றாய் அரைத்து சிறுவில்லைகளாகத் தட்டிக் காயவைத்து செந்தூரச்சட்டியில் பரப்பிமேல் சட்டிமூடிச் சீலைசெய்து அடுப்பிலேற்றி நான்குசாமம் முத்தீயாக எரித்து ஒருநாள் ஆறவிட்டெடுக்க சிறிது கருஞ்சிவப்பான செந்தூரமாயிருக்கும் இதனை அரைத்துச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு 1-அல்லது 1½-குன்றியெடை நெய் தேன் இவைகளில் தினம் இருவேளை கொடுத்துவர கிராணி சம்பந்தமான பலபேதிகளையும் நிவர்த்திசெய்யும்.

பத்தியம்:—எருமைப்பால், மோர்அன்னம் பத்தியம் கொடுத்தல்வேண்டும்.

### 147. காடிக்கார இலிங்கசெந்தூரம்

ஒருவராகனெடை வெள்ளிக் காடிக்காரத்துடன் ஒருபலம் சுத்திசெய்த இலிங்கத்தைக் கூட்டிக் கல்வத்திலிட்டு சிறுசெருப்படைச் சாற்றால் ஒருமணிநேரம் நன்றாய் அரைத்து வில்லைசெய்து ரவியில் உலர்த்தி அகலிலிட்டு மேல் அகல்மூடிச் சீலைசெய்து தரையில் நான்கு விரற்கடை மணல் பரப்பி அதன்மீது மருந்திட்ட அகலை வைத்து மேலே 4-5-விரற்கடை மணலிருக்கக் குவித்து மூன்று வறட்டியைப் பிட்டுச் சூழஅடுக்கித்தீயிடவும். புடம்ஆறின பின்னர் அகலை கீழ்மேலாகத் திருப்பிவைத்து முன்போல் புடமிடவும். இப்படி 3-முறை அரைத்துவில்லைசெய்து காயவைத்து அகலிலிட்டுச் சீலைசெய்து ஒவ்வொருமுறையும் இருபுடமாக இட்டரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ½-குன்றிப் பிரமாணம் தேனில் தினம் இருவேளை 3-நாள் கொடுக்க சுரம், சந்நி தீரும். இன்னும் இம்மருந்து கபசம்பந்தமான சுரங்களையும், சீதளத்தினால் தேகம் வாழைத்தண்டைப்போல் குளிர்ச்சி யடைவதையும் நிவர்த்திக்கும்.

### 148. காடிக்கார ரசசெந்தூரம்

ஒரு வராகனெடை வெள்ளிக் காடிக்காரத்துடன் ஒருபலம் கடைரச செந்தூரத்தைக் கூட்டிக் கல்வத்தி லிட்டு இரண்டு மூன்றுமணிநேரம் நைபோயாமல் அரைத்து ரவிமுகத்தில் $\frac{1}{4}$-மணி நேரம் வைக்கவும். மீண்டும் ஒருமணி நேரம் அரைத்து ரவியில் $\frac{1}{4}$-மணிநேரம் வைக்கவும். இப்படி நான்குமுறை அரைத்து சீசாவில் அடைத்திடுக.

பிரயோகம்:—சுரத்துடன் பேதியிருந்தால் வேளைக்கு உளுந்து பிரமாண செந்தூரத்தைத் தேனில் தினம் 3-வேளை கொடுக்க நிவர்த்தியாகும். சுரத்தின் பேரிலாயினும் விஷபேதியினாலாயினும் சீதளம் அதிகரித்து கைகால் முதலியவைகள் வாழைத்தண்டுபோல் குளிர்ச்சி பெற்றிருப்பின் 1-அல்லது $1\frac{1}{2}$-குன்றிப் பிரமாணம் தேனில் 3-மணி நேரத்திற் கொருமுறையாக தேகத்தில் காங்கை பிறக்கும்வரையில் கொடுத்துவர அச்சீதளம் விரைவில் குணமாகும். சீதளத்தின்பேரில் வீக்கம் கண்டிருப்பின் வேளைக்கு குன்றியெடை தேனில் இருவேளை கொடுக்க வீக்கம் தீரும். இன்னும் இம்மருந்தின் விசேடம் என்னவென்றால் வாந்திபேதி கண்டவர்களுக்கு இரண்டு குன்றியெடை சிறிது கற்பூரத்துடன் சேர்த்து தேன்விட்டுக் குழைத்துக்கொடுக்க, அக்காலத்திலுண்டான சீதளத்தையும் மலப்போக்கையும் வாந்தியையும் நிவர்த்திசெய்யும். வாந்தியில் மருந்து வெளிப்பட்டுவிடின், மீண்டும் கொடுத்தல் வேண்டும். மருந்துகொடுத்த $\frac{3}{4}$-மணி நேரத்திற்குள் குணமேற்படவில்லையென உணரின் மீண்டும் ஒருமுறை இம்மருந்தைக் கொடுத்தல்வேண்டும்.

பத்தியம்:—சமபோசிதமாக ரோகத்திற் கேற்றவாறு செய்தல் பண்டிதரின் கடமை.

### 149. தங்க செந்தூரம்

ஒரு வராகனெடை தங்கரேக்கை சிறுதுண்டாக கத்தரித்து கல்வத்தில்போட்டு அதனுடன் 4-5 வராகனெடை சூதத்தைவிட்டு அரைக்கவும். தங்கமும் சூதமும் உறவானபின்னர் திருநீற்றுபத்திரி என்னும் சப்ஜாயிலையில் 10-12 போட்டு வெள்ளைக் காக்கரட்டான் வேர் பட்டையும் இலையையும் கூட்டி யிடித்துப்பிழிந்த சாற்றால்

இரண்டு சாமம் அரைத்து வில்லைத் தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து உலர்ந்தபின் 20-வறட்டியில் புடமிடவும். மீண்டும் அம்மருந்தைக் கல்வத்திலிட்டு வேறொன்றும் சேர்க்காமல் முற்கூறப்பட்ட மூலிகைச்சாற்றால் இரண்டு சாமம் அரைத்து வில்லைத் தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து உலர்ந்தபின் 20-வறட்டியில் புடமிடவும். இப்படி 4-5 புடம்தங்கச்சாயலறப் போட்டெடுக்க நல்ல செந்தூரமாக இருப்பதுடன் மருந்தின்எடையும் அரை அல்லது முக்கால் பாகம் அதிகரித்திருக்கும்.

பிரயோகம்:—வேளைக்கு அரிசி எடை நெய் தேன் இவைகளில் தினம் இருவேளை கொடுத்துவர மதுமேகத்தை நிவர்த்தி செய்வதுடன் நாட்சென்ற நோய்களினால் உண்டான தேக பலஹீனத்தையும் தீவரத்தில் குணமுண்டாக்கும்.

பத்தியம்:—ரோகத்தின் ஸ்திதிக்கு ஏற்றவாறு நல்ல ஆகாரத்தைக் கொடுத்து வருதல் வேண்டும்.

## 150. படிகாரச் செந்தூரம்

10-பலம் படிகாரத்தைத் தூள்செய்து ஒரு அகண்டமண்ணோட்டில் குவித்து அடுப்பிலேற்றி சிறுதீயாக எரிக்கப்படிகாரம் உருகி மேலே உறையும். அந்தப்பதத்தை கவனித்துக் கொண்டிருந்து மேல் ஏடு உறைந்திருப்பதைக் கத்தியால் வகுந்து விசாலமாக்கி அதனில் ஒருபலம் லிங்கத்தூளைப்போட்டு மேலே படிகாரத்தைதள்ளி ஒரு குடவான சட்டியைமூடி எரிக்கவும். படிகாரம் நீர் சுண்டிபொரிந்த பின்னர்ச்சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்திலிட்டுநன்றாய் அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றிஎடை நெய் தேன் இவைகளில் தினம் கொடுக்க பித்தகிறுகிறுப்பு, வாந்தி, நித்திரையின்மை,உஷ்ணபேதி சீதபேதி, இரத்தபேதி, உஷ்ணசுரம், பித்தசுரம், முதலியவைகள் குணமாகும்.

பத்தியம்:—இச்சாபத்தியம்.

## 151. அப்பிரகச்செந்தூரம்

ஆவின்நீரும் வெள்ளாட்டுநீரும் ஒன்றாகக் கலந்துவாயகண்ட பாத்திரத்தில் விட்டு அதில் கிருஷ்ண அப்பிரகத்தைக் கன்னான் கொல்லுலையில் பழுக்கக் காய்ச்சிக் காய்ச்சித்தோய்த்துபின்னர்கல்

லூரலில் போட்டு கடப்பாறையால் இடித்து நெல்லுடன் கலந்து அவித்து ஒருவலவலவென்ற மூரட்டுத்துணியில் தளர்ச்சியாக முடிச்சுகட்டிக் காடிவிட்டுப் பிசைந்து மறுநாள் தெளிவை யிருத்துப் பார்க்க, அடியில் அப்பிரகம் உறைந்திருக்கும் இதனை நவநீதமென்பர். இப்படி முடிவு பெற்றதைக்கல்வத்திலிட்டு இலைகளுடைவேசிவப்பு கோடு விழுந்திருக்கும் தாளிக் கீரையை கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு அரைக்கவும்; இப்படி 2 சாமம் அரைத்து இலேசானவில்லைகளாகத் தட்டிக்காயவைத்து ஒட்டில்பரப்பி மேல் ஓடுமூடிச் சீலை செய்து 60-70 வறட்டியில் புடமிடவும். இப்படி ஒவ்வொரு முறையும் அப்பிரகத்துடன் தாளிக் கீரையைப் போட்டு 2 சாமம் அரைத்து இலேசான வில்லைகளாகத்தட்டிக் காயவைத்து ஓட்டிலடக்கிச்சீலை செய்து முன்போல் புடமிடவும். இப்படி 10-புடம் போட்டெடுத்து மாம்பட்டை, நாவல்பட்டை, ஒதியம்பட்டை இவைகளின் சாற்றுலாயினும் கியாழத்தாலாயினும் தனித்தனி நான்கு நான்கு சாமம் நன்றுப் அரைத்து முன்போல் புடமிட்டெடுக்க உயர்தரமான செந்தூரமாகும்.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றிபெடை நெய்யில் தினம் இரு வேளை கொடுத்துவரின் மேகத்தாலுண்டான நீர்வியாதிகளைக் குணப்படுத்தும். இன்னும் மதுமேகத்தையும் அதனுல் உண்டான ராஜபிளவையையும் வெகுசீக்கிரத்தில் நீரிலுள்ள இனிப்பைமாற்றி விரணத்தை ஆற்றும்.

பத்தியம்:—தேகஸ்திதிக்கு தக்கவாறு நல்ல ஆகாரத்தைக்கொடுத்து வருதல் வேண்டும்.

குறிப்பு:—இந்தச்செந்தூரத்தைக் கொடுக்கும்போது சிறுநீரில் இனிப்பு அதிகப்பட்டிருப்பின், நாவல் கொட்டை மாத்திரையையும். சிறுநீரின் அளவு மிஞ்சி இருப்பின், ஆவாரைக் கியாழத்தையும் கொடுத்தல் நன்று.

### 152 படிகக்கற் செந்தூரம்

ஸ்ரீகள் அணிந்து கொள்ளும் நகைகளில் பதிப்பிக்கக் கூடிய நவரத்தினங்களில் ஒன்றுகிய படிகக்கல் என்பதை சாணம் பிடித்து சுத்தம் செய்யாததாக மூன்றுபலம் கொண்டுவந்து கல்லூரலிலிட்டு கடப்பாறையால் மாவுபோல் இடித்துக் கல்வத்தில்

போட்டு முதலில் எருக்கம்பால் விட்டு 4-சாமம் அரைத்து சிறு வில்லைகளாகச் செய்து உலர்த்தி அகலிலடக்கிச் சீலைசெய்து 25-வறட்டியில் புடமிடவும். இரண்டாவது அம்மருந்தை புதினு இலைச்சாற்ருல் 2-சாமம் அரைத்து சிறுவில்லைகளாகத் தட்டிக் காய வைத்து அகலிலடக்கிச் சீலைசெய்து உலர்த்திமுன்போல் புடமிட வும் மூன்றாவது முள்ளிக்கீரைச் சாற்ருல் நன்ருய் 2-சாமம் அரை த்து சிறுவில்லைகளாகத் தட்டிக்காயவைத்து அகலிலடக்கிச் சீலை செய்து உலர்த்தி முன்போல் புடமிடவும். இப்படி மூன்று புட மிட்ட மருந்தினெடைக்கு இரண்டிலொருபாகம் சுத்திசெய்த தாளகம் கூட்டி புதினுயிலைச்சாற்ருல் நான்கு சாமம் அரைத்து சிறுவில்லைகளாகத் தட்டிக்காயவைத்து அகலில் பரப்பி மேல் அகல் மூடிச் சீலைசெய்து உலர்த்தி 30-வறட்டியில்புடமிடவும். மீண்டும் அம்மருந்தை எருக்கம் பாலால் நான்கு சாமம் அரைத்து அகலில் பரப்பி மேல்அகல்மூடிச் சீலைசெய்து 30-வறட்டியில் புடமிட்டெடு க்க ரோஜாப்பூ வண்ணமாகவிருக்கும்.

பிரயோகம்:—வேளைக்கு 1-1½-அரிசியெடை நெய், தேன், திரிகடுகு சூரணம் முதலியவைகளில் கொடுக்க இருமல், ஈளை, காசம் ஆகிய கபசம்பந்தமான ரோகங்கள் தீரும்.

### 153. வீரரசசேந்தூரம்

| | | |
|---|---|---|
| சரக்கு:—கடைரசசெந்தூரம் | தோலா | 1 |
| இலிங்கம் | ” | 1 |
| வீரம் | ” | ½ |
| வெள்ளிகாடிகாரம் | ” | ¼ |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட நான்கு சரக்குகளையும் முறையே ஒன்றன்பின் ஞென்ருகக் கல்வத்திலிட்டு அரைமணி நேரம்அரைத்து கடும் ரவிமுகத்தில் ½-மணிநேரம்வைக்கவும். மீண் டும் முன்போல் ½-மணிநேரம் அரைத்து ½-மணிநேரம் ரவிமுகத் தில் வைக்கவும்; இப்படி 4-5-முறை அரைத்து அரைத்து ரவியில் வைத்து பின்பு சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ½-அரிசியெடை பன வட்டிலாயி னும், இஞ்சிசுரசத்துடன் தும்பைப்பூச் சாறு கூட்டியதிலாயினும் கொடுக்கச் சுரம், கொடிய தாகம், ஆற்றைப்போலுண்டான வியர் வைப்பெருக்கம், சந்நி முதலியனவைகள் நீங்கும். இன்னும் இச்

செந்தூரத்தைச் சுகசந்நிக்கும் விஷபேதிகளுக்கும் கொடுக்க தீவரத்தில் குணத்தையுண்டாக்கும். இம்மருந்து சீதளமிகுந்த காலத்தில் இரண்டொரு வேளைக்குமேல் கொடுக்கலாகாது.

பத்தியம்:—சமயோசிதமாய் ரோகத்திற்கேற்றவாறு பத்தியம் செய்தல்வேண்டும்.

## 154. காசகுலாந்தகன்

சரக்கு:—கெந்தகம் தோலா 1 வெள்ளிஇராவினபொடி தோலா 1
சூதம் ,, சுத்திசெய்த தாம்பிர பொடி ,,

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட நான்கு சரக்குகளில் முதலில் கெந்தகத்தையும் சூதத்தையும் கல்வத்தில்போட்டு கருப்பு நிறமாக மாறும்படி அரைத்து வைத்துக் கொள்க. அப்பால் ஒரு சிறிய கண்குடுவையில் முன்சித்தப் படுத்திய சூத கெந்திப் பொடியையும், ஒருமிக்கக்கலந்த தாம்பிர வெள்ளிப் பொடியையும், முறையே ஒன்றன்மேலொன்று கொஞ்சங்கொஞ்சமாகத்தூவி முடிந்த பின்பு வாய்க்குபலப்பக்கல்லால் அடைத்துச் சீலேசெய்து ஒரு சட்டியில் இரண்டுவிரற்கடை மணல்பரப்பி அதன் நடுவில் வைத்து சட்டி நிறைய மணல் கொட்டி அடுப்பிலேற்றி முத்தீயாக 8-சாமம் எரிக்கவும். அல்லது முன்சித்தப்படுத்திப சூதகெந்திப் பொடியைக் கொள்ளும்படியான அளவிற்கு ஏற்றபடி வெள்ளி. தாம்பிரம்இவைகளினால் தனித்தனி மூசை ஒன்றன்வாய் ஒன்றில் நூல் கனம்நுழையுமாறு தட்டானிடம் செய்வித்து அவைகளிலொன்றில் சூதகெந்திப்பொடியை போட்டு மற்றொன்றைச் செருகி செம்பு அல்லது வெள்ளிக் கம்பிகொண்டு கட்டி ஏழு மண்சீலே செய்துகாயவைத்து வாலுகாயந்திரத்தில் வைத்து 10-சாமம் எரிக்கவும். கருஞ்சிவப்பான செந்தூரமாகும். இப்பாகங்களில் சில சந்தர்ப்பம் எரிப்பு திட்டம் தவறுதலினால் பூப்பின்றி நடுசாக இருக்கும். அத்தருணம் மனஞ்சோராமல் கல்வத்தில்போட்டு அவ்வெடைக்கு எடை கெந்தி கூட்டி எருக்கம்பாலால் இரண்டு சாமம் அரைத்து வில்லேதட்டி புடமிடவும். இப்படிப் பூப்படையும் வரையில் இரண்டுமூன்று புடமிட்டு கடுகளவு வாயில் போட்டுப்பார்க்க, சிலும்பு இல்லாதிருப்பின், இதுவே சிறந்ததாகும். இத்துடன் சமனெடை புடரசசெந்தூரம் (வெங்காரம்கூட்டி அரைக்காதது) சேர்த்து அரைத்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு அரிசி எடை தேனில் தினம் இரு வேளை 3-5 நாள் கொடுக்க சுவாசகாச முதலான ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—ரோகத்திற்கு ஏற்றவாறு புளிதள்ளியும் தள்ளாமலும் இச்சாபத்தியமாக வைத்தல் நன்று.

---

## எச்ச இலம்பகம்

### 155 சிவனுரமுர்தம் என்னும் நீலகண்டரசம்

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—சூதம் | பலம் 1 | பொரித்தவெங்காரம் | பலம் 1 |
| கெந்தகம் | ,, | சுக்கு | ,, |
| மனோசிலை | ,, | மிளகு | ,, |
| நாபி | ,, | திப்பிலி | ,, |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட எட்டுச்சரக்குகளில் முதலில் சூதத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்துப் பின்னர் மற்றச்சரக்குகளை முறையே ஒன்றன்பின் னொன்றாய்க் கூட்டி எட்டுசாமம் அரைத்து எடுக்க கறுப்பாக இருக்கும். இதனைச் சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு ½- குன்றிப் பிரமாணம் தேனில் தினம் இருவேளை கொடுக்க ஜன்னிபாதசுரம் கபசுரம், தோஷசுரம் கபவாதசுரம், பித்தசீதளசுரம், மாறல்சுரம், முதலியவைகள் மூன்று நாள் 6-வேளையில் குணமாகும்; நாட்சென்ற சுரங்களாக இருப்பின் பின்னும் சிலநாள் சிறு அளவாக கொடுத்துவரின் எளிதில் குணமாகும்.

குறிப்பு:—அரைபலம் ஷை மருந்துடன் இரண்டு குன்றிஎடை சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம் சேர்த்துக் கருந்துளசி, தும்பைப் பூச்சாறு முதலியவற்றால் அரைத்து உளுந்தளவு மாத்திரைகளாகத்திரட்டி நிழலுலர்த்தி உபயோகப்படுத்துவாருமுளர். இது சுரத்தை நிவர்த்தி செய்வதில் வீரியமுடையதாக இருக்கின்றது. பாஷாண சுத்தியைப்பற்றி சிகிச்சாரத்நதீபத்தில் மரகதவடி என்னும் மாத்திரைக்கு கூறப்பட்டுள்ள முறை அதிக உத்தமமானது.

### 156. விரணக்களிம்பு

காய்ச்சுக்கட்டி, துத்தம், சூதம், வெள்ளைக் குங்கிலியம் வகைக்கு வராகனெடை 1, கற்சுண்ணாம்பு வராகனெடை 4, வெண்ணெய் வராகனெடை 8, ஆக கல்வத்தில் போட்டு அரைத்து துணியிலூட்டி விரணங்களின் மேற்போட ஆறும்.

### 157. வேறு

ஒருபலம் தேங்காய் எண்ணெயும் அரைபலம் தேன் மெழுகையும் ஒரு கறண்டியில் போட்டு நெருப்பனலின்மீது வைத்துருக்கிக் கல்வத்தில் சாய்த்து அதனுடன் வெள்ளைக் குங்கிலியம் வராகனெடை-4, மஞ்சள் பொடி வராகனெடை-1, கூட்டி மெழுகு வண்ணமரைத்துப் பத்திரப்படுத்துக.

வேண்டும்போது சுத்தமான வெள்ளைப்பருத்தி பஞ்சியின்மேற் றடவி விரணப் புண் முதலியவற்றின்மேல் போட்டுவர ஆறும்.

### 158. வேறு

இலிங்கம், மிருதார்சிங்கி, இரசகற்பூரம், வெள்ளைகுங்கிலியம் கடுக்காய், மாசிக்காய், காய்ச்சுகட்டி, தான்றிக்காய் ஆகிய இவ்வெட்டு சரக்குகளையும் சமனெடையாகக் கல்வத்தில் போட்டுப் பொடித்து வெண்ணெய் கூட்டி அரைத்து தண்ணீரில் ஒருநாள் மிதக்கப்போட்டு அலம்பி மறுநாள் பீங்கான் பாத்திரத்தில் பத்திரப் படுத்துக.

இதனை கொறுக்கு, மேகரணம், அரையாப்புரணம், புண், கிரந்தி இவைகட்குப் போட்டுவர ஆறும்.

### 159. திருநீலக் கலிக்கம்

பொட்டுநீக்கிய கிராம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, வகைக்கு வராகனெடை $\frac{1}{2}$-இவை தம்மை சுத்தமானக் கல்வத்திலிட்டு பழச்சாற்றாலும் ஊமத்தனிலைச்சாற்றாலும் நான்குசாமம் நன்றாய் அரைத்து பயறளவு மாத்திரைகளாகத் திரட்டிக் காயவைத்து சீசாவிலிடவும். இதனை ஜன்னிசம்பந்த தோஷங்களினால் சுபாவ நிலைமறந்து ஆடல்பாடல் ஓடல் முதலியவைகள் இருப்பினும் பல்கிட்டி மூர்ச்சையாயினும் ஒரு மாத்திரையை முலைப்பாலில் இழைத்து இருகண்களிலும் தீட்ட நீங்கும்.

## 160. ஜன்னிகலிக்கம்

வாளை விதை, சுக்கு, கடுகு, இந்துப்பு இவைகளைச் சமனெடையாகக் கல்வத்திலிட்டு பழச்சாற்று லரைத்து பயறளவு மாத்திரைகளாகத் திரட்டி நிழலிலுலர்த்தி சீசாவில் பத்திரப்படுத்துக. இதிலொன்றை முலைப்பாலில் இழைத்து கண்களில் தீட்ட ஜன்னி 13-ம் தீரும்.

## 161. ஆக்கிராணம்

எருமுட்டைச்சாம்பலில் எருக்கம்பாலை எழுதடவைபிசரி உலர்த்தி அதற்கு நான்கிலொரு பங்கு பொன்வறலாக வறுத்தமிளகைக் கூட்டி கல்வத்திலிட்டரைத்துப் பத்திரப்படுத்துக. வேண்டும்போது தலைவலி, தலைபாரம் சன்னி முதலியவற்றிற்கு நாசியில் ஒரு சிட்டிகைப் பிரமாணம் வைத்தூதத் தீரும். இன்னும் இத்தகைய ஆக்கிராணத்தை சிகிச்சாரத்நதீபம் என்னும் நூலின்கண் நாசிகாபரணமாத்திரை என்னும் தலைப்பின் கீழ் எழுதப்பட்டிருக்கின்றன. அவ்விரண்டு மருந்துகளும் சிறந்தபரிகார மென்றறிக.

## 162. புகை

| | |
|---|---|
| சரக்கு:—சந்தனத்தூள் | மிளகு |
| மரமஞ்சள் | வெள்ளைப்பூண்டு |
| நற்சீரகம் | மஞ்சள் |
| சுக்கு | இலுப்பைப்புண்ணாக்கு |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட எட்டுசரக்குகளையும் சமனெடையாகக் கல்வத்திலிட்டு அரைத்தேனும் அல்லது அவைதம்மை கல்லுரலிலிட்டு இடித்தேனும் வெள்ளைச் சீலையில் பரப்பி திரிப்போல் திரட்டி தீயில் கொளுத்தி நாசியில் புகைபிடிக்க வலி, இழுப்பு, பல்கிட்டல், மூர்ச்சை முதலியவைகள் நீங்கும்.

## 163 வேறு

| | |
|---|---|
| சரக்கு:—பெருங்காயம் | வெங்காரம் |
| சுக்கு | சிற்றரத்தை |
| சாம்பிராணி | கழற்சிபருப்பு |
| மிளகு | சீரகம் |
| ஓமம் | லிங்கம் |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட பத்து சரக்கினையும்சமனெடையாகக் கல்வத்திலிட்டு எருக்கம்பாலா லரைத்து வெள்ளைச்சீலையில்தடவித் திரிப்போல் திரட்டி காயவைத்து பத்திரப்படுத்துக. வேண்டும்போது அதனைக் கொளுத்தி நாசியில் புகைபிடிக்கத் தலைவலி ஜன்னிமுதல் எல்லாதோஷங்களும் தீரும்.

## 164. துவர்சீலை

ஓதியம்பட்டை, இலந்தம்பட்டை, கருவேலம்பட்டை, அத்திப்பட்டை, வகைக்கு பலம்-5, இவைகளை ஒன்றிரண்டாய் இடித்து ஒரு மட்கடத்திற்போட்டு இரண்டுபடி சலம்விட்டு 3-நாள் ஊறவைத்து $\frac{1}{2}$-படியாகச் சுண்டக்காய்ச்சி கசக்கிக்கசக்கிப் பிழிந்து சீலையில் வடிகட்டி அதில் துத்தம், துருசு, கடுக்காய், காய்ச்சுக்கட்டி, வெள்ளைக்குங்கிலியம், படிகாரம், வகைக்குப் பலம்-$\frac{1}{4}$ நன்றாய் அரைத்துப் போட்டு 5-எலுமிச்சம்பழச்சாறுவிட்டு சிறுதீயால் எரித்து ஓபாமல் கிண்டிக்கொண்டிருந்து குழம்புபதத்தில் சுத்தமான வெள்ளைச் சீலையில் நனைத்துலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

வேண்டும்போது விரணத்திற்கேற்றவாறு துண்டுகளாக நறுக்கி விரணத்திற்குமேல் போட்டுவர ஆறும்.

## 165. அயகாந்த கல்கம்

சரக்கு:—அயப்பொடி
கிட்டம்
காந்தம்
கடுக்காய்
நெல்லிவற்றல்
தான்றிக்காய்
பெருங்காயம்
சுக்கு
மிளகு
திப்பிலி
கருஞ்சீரகம்
நற்சீரகம்
இந்துப்பு

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட பதிமூன்று சரக்குகளையும் சூரணித்துச் சமனெடையாகக் கல்வத்திற்போட்டு கரிசாலை இலைச்சாற்றால் நான்குசாமம் அரைத்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்கு சிறுகொட்டைப்பாக்களவு தினம் இருவேளை 5-நாள் இஞ்சிசாற்றிலேனும் பழச்சாற்றிலேனும் கொடுத்துவர பாண்டு, சோபை, காமாலை முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—மோரும் அன்னமும் கூட்டுக.

### 166. குங்கிலிய வெண்ணெய்

வெள்ளைகுங்கிலியம் பலம்-2 நெய் பலம்-1, இவை யிரண்டையும் ஒரு சுத்தமான அகலக்கறண்டியில் போட்டு சிறுதீயில் பற்றுமல் உருக்கி குளிர்ச்சியான சுத்தசலத்தில் சாய்க்கவும். சூடாறிய பின் பிசைந்துபிசைந்து ஏழுமுறை சலத்திலலம்பி வெண்ணெயை பீங்கானில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு பாக்களவு தினம் இருவேளை சாப்பிட்டுவர நீர்கிரிச்சரம், எரிச்சல், வெள்ளை முதலியவை தீரும்.

### 167 பெரும்பாடு நிவாரணி

அத்திப் பட்டையை மோர்விட்டு இடித்துப் பிழிந்தெடுத்த சாற்றை ரோகத்தின் வன்மைமென்மைக்கேற்றவாறு கால் அல்லது, அரைக்கால் ஆழாக்குக்கொடுத்துவர நிவர்த்தியாகும்.

### 168. வேறு

இளசான தென்னம்பூவை இடித்துப் பிழிந்தசாற்றை ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு கால் அல்லது அரைக் கால் ஆழாக்கு கொடுத்துவர நிவர்த்தியாகும்.

### 169. வேறு

பன்னிரண்டு வாழைப்பழத்தை மேற்றோலுரித்து ஒருபலம் மாம்பட்டை அல்லது அத்திப்பட்டைச் சூரணத்தைப்போட்டுப் பிசைந்துபிசைந்து எடுத்த சாற்றை வடிகட்டி படிகாரபற்பம் $1\frac{1}{2}$-குன்றியெடை போட்டுக்கலந்து சாப்பிட 3-வேளையில் தவறாமல் குணமாகும்.

### 170. வேறு

மாங்கொட்டைப் பருப்பை அரைத்து வேளைக்கு அரைவராகனெடை வீதம் தினம் இருவேளை தேனிலாவது வெல்லத்திலாவது கொடுத்துவரக்குணமாகும்.

### 171. வேறு

நாவல்பட்டையை எருமைப் புளிப்புமோர் தெளித்து இடித்துப்பிழிந்த சாற்றை ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு வேளைக்கு கால் அல்லது அரைக்கால்ஆழாக்கு வீதம் தினம் இருவேளை கொடுத்துவரக் குணமாகும்.

### 172. வேறு

முருங்கைப்பூவை அரைத்து தேங்காய்ப்பாலில் கரைத்து சர்க்கரைக்கூட்டி தினம் இருவேளை கொடுக்க நிவர்த்தியாகும். அல்லது முருங்கைப்பூ, கற்றாழைச்சோறு, வெண்ணெய் ஆகிய இவற்றைசம னெடையாக அரைத்து சிறு எலுமிச்சம்பழ மளவு தினம் இருவேளை கொடுக்கநிவர்த்தியாகும்.

### 173. வேறு

ஒருபலம் சீமைக் கல்நாரைக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்துத்துகளாகியபின் சமனெடைப் படிகாரம்சேர்த்து இரண்டொரு சாமம் அரைத்துப் பத்திரப்படுத்துக. வேண்டும்போது வேளைக்கு 1-1½-பணவெடை நெய்யில் தினம் இருவேளை கொடுக்க நிவர்த்தியாகும்.

### 174. மூலமுளைக்குப் புகை

| | |
|---|---|
| சரக்கு:—சாம்பிராணி | பலம் ½ |
| வெள்ளைகுங்கிலியம் | ,, |
| தலைமயிர் | ,, |

செய்பாகம்:—தலைமயிரை சிகைக்காயுடன் சலம் சேர்த்து கொதிக்க வைத்தெடுத்த சலத்தில்போட்டுக் கசக்கி உலர்த்தி சன்னமாகக் கத்தரித்து அதனுடன் மற்றவற்றைச் சேர்த்தரைத்து வைத்துக்கொள்க.

பிரயோகம்:—ஒரு அகலமான கரண்டியில் செந்தணலான நெருப்பையிட்டு அதன்மேல் திரிகடிப்பிரமாணம் ஷை சூரணத்தைப்போட்டு அரையடி யுயரமிருக்க ஆசனமிட்டு உட்கார்ந்து மூலமுளைக்கு நேரே புகை தாக்கும்வண்ணம் இருத்தல்வேண்டும். இப்படி தினம் இருவேளை மூன்றுநாள் செய்ய ஆசனம்வெளிகாணல், ஆசனக்கடுப்பு, மூலமுளையின்பூரிப்பு, இரத்தங்கொட்டல் முதலியவைகள் நிவர்த்தியாகும் முளையும் சிறுத்துஉள்ளடங்கும்.

### 175. வேறு

பன்றிநெய்யை முன்போல் நெருப்பனலில் ஒரு துட்டெடைவிட்டு ஆசனத்திற்குப் புகைபிடிக்கவும். இப்படி தினம் இருவேளை 3-5-நாள் செய்ய முற்கூறப்பட்ட உபத்திரவங்கள் நீங்கும.

### 176. வேறு

ஆமையோட்டைப் பொடித்து முன்போல் நெருப்பனலில் ஒரு வராகனெடைத் தூவி ஆசனத்திற்குப் புகைபிடிக்கவும். இப்படி தினம் இருவேளை **3-5**-நாள் செய்ய முற்கூறப்பட்ட உபத்திரவங்கள் நீங்கும்.

### 177. மூலமுளைக்கு ஒத்தடம்

ஒருபலம் சிற்றாமணக்கின்பருப்பைப் பொடித்து அரைமுடி தேங்காய்திருகலுடன் சேர்த்து ஒரு இருப்புக் கடாயில் போட்டு அடுப்பேற்றி நன்றாய்வதக்கித் துணியில் முடிந்து தாங்கக்கூடிய சூட்டையில் ஒத்தடம்கொடுக்க ஆசனத்திலுண்டான பாதை வீக்கம் கடுப்பு இவைகள் சாந்தப்படும்.

### 178. வேறு

மாதுளை, ஆவாரை, நீர்பூலா, குழித்தாமரையிலை, வெங்காயம், இவைகளைச் சிதைத்து ஒரு இருப்புக் கடாயில் போட்டு அடுப்பிலேற்றிச்சிறிதுநெய் விட்டு வதக்கி துணியில்முடிந்து தாங்கக் கூடிய சூட்டையில் ஒத்தடம்கொடுக்க ஆசனத்திலுண்டான குத்தல், வலி, கடுப்பு, வீக்கம் முதலியவைகள் சாந்தப்படும்

### 179. சந்நிபாத பைரவரசம்

| | |
|---|---|
| சரக்கு:—சூதம் | வீரம் |
| கெந்தகம் | பூரம் |
| இலிங்கம் | தாளகம் |

செய்பாகம்:—இங்குக்கூறப்பட்ட ஆறுசரக்குகளையும் கூடிய வரையில் சுத்திசெய்து சமனெடையாகக் கல்வத்தில்போட்டு நான்குசாமம் அரைக்க சுத்தகருப்பாக இருக்கும். இதனைச் சீசாவில்போட்டு வைத்து **6-7**-மாதத்திற்குப் பின் உபயோகப் படுத்தவும். இது நாட்செல்லச்செல்ல வெளுத்துவரும். அதுவே உபயோகப்படுத்துவதற்குச் சிறந்ததென் றுணர்க.

பிரயோகம்:—அரிசியெடை பனவெல்லத்தில் கொடுக்க எவ்விதமான சந்நிகளையும் இரண்டுமணி நேரத்திற்குள் குணமாக்கும். ஒருகால் குறித்தநேரத்தில் குணமேற்பட வில்லையென உணரின் மீண்டும் நான்கு மணிநேரம் சென்றபின்னர் ஒருமுறை கொடுக்கத் தவறாமல் குணஞ்செய்யும்.

இன்னும் பிரசவித்த ஸ்திரீகளுக்கு உதிரங்கட்டுபட்டு உண்டாகின்ற சந்நிகளுக்குங்கொடுக்க சந்நியை நிவர்த்திப்பதுடன் உள்தங்கிய அழுக்கையும் வெளிப்படுத்தும்.

பத்தியம்:—கடும்பத்தியமாயினும் ரோகத்திற் கேற்றவாறு சந்தர்ப்பம் நோக்கிக் கஞ்சி, புனற்பாகம் கொடுத்தல் நன்று.

## 180. பிரண்டையுப்பு

சரக்கும், செய்பாகமும்:—முற்றின பிரண்டை கொடிகளைக் கொண்டுவந்து கணுக்களைத் தரித்தகற்றி நடுக்கண்டங்களாகியத் துண்டுகளைக் கல்லுரலிலிட்டு நன்றாய் இடித்துக் கையிற்படாமல் வலவலவென்ற கோணியில் முடிச்சுக்கட்டித்தொங்கவிட்டுக் கையிற்படாமல் இரு மரசட்டங்களால் கிட்டிக்கட்டி அழுத்திப் பிழிந்தெடுத்த அரைப்படிச்சாற்றை ஒரு மட்குடுவையிலிட்டு அதனில் கால்படி கறியுப்பைப் போட்டு அடுப்பின்மே லேற்றிச் சிறுதீயாக எரித்து சாறு சுண்டுந்தருவாயில் குடுவையைக் கீழிறக்கி வாய்க்குஓடு மூடிச் சீலைசெய்து காய்ந்த பின் 30-வறட்டியில் புடமிடவும். புடமாறியபின்னர் குடுவையிலிட்ட உப்பைக் கல்வத்திலிட் டரைக்கக் கருப்பாக இருக்கும். இதனைக் கல்கார்க்கிட்ட சீசாவில் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு 2-3 குன்றியெடை ஒருமிடறு அன்னக்கொதிசலம், புளிப்புமோர், பழச்சாறு முதலியவற்றி லொன்றில் அனுபானஞ்செய்து தினம் 2-3 வேளை கொடுக்க தீபாக்கினியை உண்டாக்கி ஜீர்ணசக்தியை விசேஷிக்கச்செய்யும். இன்னும் ஜீரணசக்தியின் குறைவால் பேதிமுதலியவைகள் தோன்றியிருப்பினும் பரிகரிக்கும். குழந்தைகட்கு உண்டாகும் மாந்தபேதிகளையும், பால் செரிக்காமல் வெண்மை நிறமாகக் காணும் பேதிகளையும் நிவர்த்திக்கும்.

## 181. சிக்கஞ்சர் சர்பத்து

| | | |
|---|---|---|
| சரக்கு:—புதினையிலைச்சாறு | படி | அரைக்கால் |
| இஞ்சிச்சாறு | ,, | |
| பழச்சாறு | ,, | |
| கடலைக்காடி | ,, | |
| கருப்புச்சர்க்கரை | வீசை | $\frac{1}{2}$ |

சேய்பாகம்:—ஒரு இருப்புக்கடாயில் சர்க்கரையைப் போட்டு முற்கூறப்பட்ட சாறுகளை ஒருமிக்கக்கலந்து வடித்துவிட்டுத் தேன் பதம் வரக்காய்ச்சி சீசாவில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேண்டும்போது ½-தோலா வீதம் உள்ளங் கையில் விட்டுச் சாப்பிடவும். இப்படி தினம் 3-வேளைச் சாப்பிட சில தினத்திற்குள் வாந்தி, குமட்டல், அஜீர்ணம், மயக்கம், மார்புஎரிச்சல் முதலியவைகள் நீங்கும்.

குறிப்பு:—கடலைக்காடியே உத்தமம். கிடைக்காத சமயங்களில் ஷாப்புகளில் கிடைக்கக்கூடிய "மேல்நாட்டு பிரஞ்சு மால்ட் வினிகர்" என்னும்படியான காடியானது இத்தகைய பிரயோகங்களுக்குச் சிறந்ததென்று அனுபவத்தில் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளது.

## 182. இரசகேந்தி மெழுகு

குமிழ்போக்கிய ஒருபலம் சேங்கொட்டையை இரண்டுபலம் சிற்றாமணக்கெண்ணெயில் போட்டு மிதக்கக்காய்ச்சி எண்ணெயை சீலையில்வடித்து பீங்கானிலிட்டு பத்திரமாக வைக்கவும்.

ஒருபலம் வாலைரசத்தையும், சுத்திசெய்த ஒருபலம் கெந்தகத்தையும் கல்வத்தில்போட்டு முன் சித்தப்படுத்திய சேங்கொட்டை தைலத்தைத் துளித்துளியாகவிட்டு 3 - மணிநேரம் மெழுகு பதத்திலேயே அரைத்துச் சுறண்டி அதனை ஒருமுற்றின சிறு தேங்காயின் கண்வழியாய் ஜலத்தைப்போக்கி உட்செலுத்தி. வேப்பங்கொம்பினால் வாயை அடைத்துச் சமனமாகச் சாணத்தை அப்பி காயவைத்து இரண்டொரு சீலைசெய்து பத்து அல்லது பதினைந்து வறட்டியிற் புடமிடுக. தேங்காயின் ஓடு வெடித்து வாசனை வருஞ்சமயம் அதனை எடுத்து ஓட்டைநீக்கி, அம்மியில் வைத்து நெகிழ அரைத்துச் சேதமின்றி யதனைக் கல்வத்திற்கு மாற்றி, மெழுகுபதத்திற்கு வருகிறபரியந்தம் நாலைந்துதினம் அரைத்து பீங்கானில் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு தேற்றாங்கொட்டைப் பிரமாணம் தினம் இருவேளை ஒருமுறை 5-10-நாள் கொடுக்கவும். இதனால் குஷ்டம், திமிர், தடிப்பு, கண்டமாலை, மேகசூலை, கிரந்தி, அரையாப்பு, புத்து, கருமேகம், மேகஊறல், படை, பவுத்திரம், குழிவிழும் ரணங்களெல்லாம் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக வைத்தல் நன்று; கடும்பத்தியமாக உட்கொள்ளின் ரோகமானது தீவிரத்தில் குணமாகும் என்பது உண்மை.

குறிப்பு:—ஒருமுறை சாப்பிட்டு 10-15-நாள்வரையிலும் மருந்தில்லாமல் விட்டுவைத்து நோயானது பூரணமாகக் குணமில்லையென வுணரின் மீண்டும் முன்போல் ஒருமுறை கொடுக்கவும். இப்படி 2-3-முறைகொள்ள எவ்விதமான கடினரோகங்களும் குணமாகும்.

### 183. ரசகேந்திமெழுகு வேறு

| | | | |
|---|---|---|---|
| சரக்கு:—சூதம் | பலம் 1 | தேசாவரம் | வராகனெடை 1 |
| கெந்தகம் | ,, | வாய்விளங்கம் | ,, |
| பறங்கிச்சக்கை | ,, | வசம்பு | ,, |
| சேங்கொட்டை | ,, | கிராம்பு | ,, |
| பூரம் | வராகனெடை 1 | கடுக்காய் | ,, |
| தாளகம் | ,, | கருஞ்சீரகம் | ,, |
| காந்தம் | ,, | காட்டுச்சீரகம் | ,, |
| துருசு | ,, | சிறுதேக்கு | ,, |
| பால்துத்தம் | ,, | தாளிசப்பத்திரி | ,, |
| மிருதார்சிங்கி | ,, | பிரப்பங்கிழங்கு | ,, |
| சுக்கு | ,, | எட்டிவித்து | ,, |
| ஓமம் | ,, | தேற்றான்வித்து | ,, |
| மஞ்சள் | ,, | நீர்முள்ளி | ,, |
| திப்பிலி | ,, | எள்ளு | ,, |
| அரத்தை | ,, | கொள்ளு | ,, |
| கோஷ்டம் | ,, | தேங்காய்கொப்பரை | ,, |
| வாலுளுவையரிசி | ,, | சின்னிவேர் | ,, |
| சோம்பு | ,, | சங்கம்வேர் | ,, |
| ஏலம் | ,, | அமுக்கராக்கிழங்கு | ,, |
| ஜாதிக்காய் | ,, | கொல்லன்கோவை | ,, |
| மிளகு | ,, | கொடிவேலி வேர் | ,, |
| சீரகம் | ,, | திராட்சை | ,, |
| கார்போகவரிசி | ,, | முட்டைகருவு | 2 |
| மாசிக்காய் | ,, | பனவெல்லம் | பலம் 9 |

செய்பாகம்:—முதலில் சூதம், கெந்தகம் இவையிரண்டையும் கல்வத்தில் போட்டு நன்றாய் அரைத்து கருப்பு நிறமாக இருக்கும் சமயத்தில் பூரம், தாளகம், காந்தம், துருசு, பால்துத்தம், மிருதார் சிங்கி இவைகளை ஒன்றன் பின்னொன்றாகக் கூட்டியரைத்து எல் லாம் உறவானபின் மற்றக் கல்கங்களை எல்லாம் இடித்து வஸ்திர காயம் செய்து கொஞ்சங் கொஞ்சமாய்ப்போட்டு அரைத்து முட் டைகருவையும் பனவெல்லத்தையும் கூட்டி இடிக்கவும். இப்படி இரண்டு மூன்று நாள் புரட்டிப் புரட்டி இடித்து எல்லாச் சரக்குக ளும் உறவாகும்படி செய்தல்வேண்டும். இதனை ஒரு ஜாடியில் போட்டு 60-நாள்பரியந்தம் உபயோகிக்காமல் வாய்மூடிச் சீலை செய்து பூமியில் புதைத்து வைத்து எடுக்கவும்.

பிரயோகம்:—வேளைக்குத் தேற்றாங் கொட்டைப் பிரமாணம் தினம் இருவேளை சாப்பிட்டுக்கொண்டுவர இருபதுநாளில் குஷ் டம், திமிர், கண்டமாலை, மேகசூலை, கிரந்தி அரையாப்பு, புத்து, கரும்புள்ளி, மேகஊறல், படர்தாமரை, பவுத்திரம் குழிவிரணம், தொடைவாழை முதலியபிணிகள் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியம் அல்லது மோரன்னம்.

குறிப்பு:—ஒரே முறையாக இருபது நாள் உட்கொள்வது கஷ்டசாத்தியமானதால் 7 அல்லது 10 நாள் ஒருமுறையாகப் பாவி த்து உண்டு பின்னர்ச் சிலநாள் விட்டு மீண்டும் ஆரம்பித்து முன் போல் சாப்பிடவும்; இப்படி 2-3 முறைசாப்பிட கஷ்டமானரோகங் களும் குணமாகும்.

## 184 வேறு

| | | |
|---|---|---|
| சரக்கு:—கெந்தகம் | வராகனெடை | 20 |
| சூதம் | ,, | 12 |
| பூரம் | ,, | 12 |
| வீரம் | ,, | 12 |
| பூநீர் | ,, | 12 |
| கொம்புத்தேன் | ,, | 20 |

செய்பாகம்:—கெந்தகத்தை உருக்கி இரண்டொரு முறை பாலில் சாய்த்துச்சுத்திசெய்து பின்னர் ஒரு இரும்பு கடாயிலிட்டு கரிநெருப்பின் மேல்வைத்து ஒரு இரும்பு குறட்டால் கிளறி தயி லம்போல் உருகிவருகிற சமயத்தில் தேனைச்சிறுகச் சிறுகவிட்டுக்

கிளறி பின்பு அதில் சூதம்முதலாய் பூநீர் ஈறாகவுள்ள நான்கு சரக்குகளையும் கல்வத்திலிட்டு அரைத்துப் பொடிசெய்ததை கொஞ்சங்கொஞ்சமாய் தூவி ஓயாமற் கிளறிக் கொடுத்து பொங்கினால் ஆறவைத்து மறுபடியும் எரித்துக் கிளறிக்கொடுத்து மெழுகானபதத்தில் ஆற்றி வாயகண்ட பீங்கான்பாத்திரத்தில் போட்டு வாய்மூடி 3-மாதம் வரையில் கையாடாமல் வைத்துவிடுக.

பிரயோகம்:—தினம் 2-வேளை குன்றிப்பிரமாணம் பனவெல்லத்தில் பொதிந்து புழுங்கலரிசி தவிட்டில் புரட்டி 3-நாள் கொடுக்கவும். இதனால் பட்சவாதம், இளம்பிள்ளைவாதம், கிரந்தி, சூலை, புத்து, குட்டம், மேகவிரணம், சொறி, அண்டவாதம், அண்டசூலை, குன்மம் முதலிய வியாதிகள் தீரும்.

பத்தியம்:—புளி உப்புதள்ளி ஆவின்பால் நெய்சேர்த்து இச்சாபத்தியமாக இருப்பதுடன் பச்சைப்பயறு, முளைக்கீரை, கத்திரிபிஞ்சு, துவரை கூட்டிக்கொள்ளவும். நெல்லாவி, முத்தாவி, நல்லெண்ணெய்வாடை, தாளிதவாடை, ஸ்ரீபோகம், கரப்பான் பதார்த்தம் ஒரு மாதம் வரையில் கூடாவாம்.

ஏழாவது நாள் தலைக்குத்தண்ணீர்வார்த்து ஒன்பதாவது நாள் பாலோடு மிளகு சேர்த்தரைத்துக் கொதிக்கவைத்து தலைக்குத்தேய்த்து ஸ்நானம் செய்விக்கவும். பதினொராவது நாள் வாத தேகமானால் விளக்கெண்ணெய் வேப்பெண்ணெய் ஆவின் நெய் கூட்டி சிரசுக்கு தேய்த்து ஸ்நானம் செய்விக்கவும். மற்றவர்களுக்கு விளக்கெண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்விக்கவும்.

### 185. வாலைரசமெழுகு

| | | |
|---|---|---|
| சரக்கு:—பறங்கிச்சக்கை | பலம் | 1 |
| வாலைரசம் | ,, | 1 |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | 1 |
| பூவரசம்பட்டை | ,, | 1 |
| வெண்சங்கம்வேர் | ,, | 1 |

செய்பாகம்:—வாலைரசம் நீங்கலாக மற்றவைகளை இடித்துச் சூரணம்செய்து கல்வத்தில்போட்டு வாலைரசத்தைவிட்டு ஒருமிக்கக்கலந்து தேன்விட்டு 11-நாள் அரைத்து பச்சைமூங்கில் குழையில்போட்டு வாய்க்கு ஆப்பிட்டு பூமியில் 3-மாதம் புதைத்துவைத்து எடுத்துக்கொள்க.

பிரயோகம்:—வேளைக்குக் குன்றியளவு பனவெல்லத்தில் வைத்து தினம் 2-போது கொடுக்கவும் இப்படி ஒருமுறை 7-நாள் கொடுத்து சிலநாள்மருந்தில்லாமல் விட்டு வைக்கவும்; தேவையாயின் 10-நாள் பொறுத்துமறுபடியும் ஒருமுறை கொடுக்கவும். இதனால் மேகம்,பிடிப்பு, தடிப்பு,குடைச்சல், குத்தல்,குட்டம்,தந்திவெள்ளை, ஆருதாணம், படை, சொறி, சிரங்கு, புத்து, பிளவை, புழுவெட்டு, கருமேகம், வெண்குட்டம், கிரந்தி, புரைகுழல், தேகமெல்லாம் உண்டான மறுக்கள் எல்லாம் தீரும்.

பத்தியம்:—மருந்துண்ணும் காலம்வரையில் புளிதள்ளி இச்சா பத்தியமாக இருத்தல் வேண்டும்

குறிப்பு:—இம்முறையில் பறங்கிச்சக்கை எவ்வளவுக் கெவ்வளவு உளுத்துப்பழமை பெற்றிருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு விசேஷ குணத்தைக்கொடுக்கும்.

## 186 நாயுருவிஉப்பு

நாயுருவி சமூலச்சாம்பல் படி $\frac{1}{2}$ ஆணங்காய் மேலிலைச் சாம்பல் படி $\frac{1}{2}$-இவையிரண்டையும் ஒரு பழகின மட்பாண்டத்தில் போட்டு ஒருபடி சலம்விட்டுக் கரைத்து 3-நாள் வரையிலும் அசையாமல் வைத்து 4-வதுநாள் வெகுஜாக்கிரதையாகத் தெளிந்துள்ளசலத்தை இறுத்து ஒரு மட்பாண்டத்தில் விட்டுச் சுண்டக் காய்ச்சி அதில் பூக்கும் உப்பைச் சுரண்டிக் கல்வத்திலிட்டு அரைத்துப் பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு $\frac{1}{2}$-குன்றி எடையாகத் தினம் இரு போது அன்னகொதி சலத்திலாவது - அரிசிகழுவின நீரிலாவது கொடுத்துவரக் குன்மரோகங்கள் நிவர்த்தியாகும்.

## 187. வேடியுப்புபுளிஜெயநீர்

10-பலம் வெடியுப்பையும் 10-பலம் பழைய புளியையும் ஒரு மிக்க இடித்துவில்லைசெய்து ஒரு அகண்ட மண்ஓட்டில்வைத்து அடுப்பிலேற்றி சர்வஜாக்கிரதையாகத் தூரத்தில் நின்று எரிக்கவும். அப்போது பற்றி எரிந்து சாம்பலாகும். இதனை ஒரு அகண்ட கோப்பையில் போட்டுப் பனியில் வைக்க ஜெயநீராகும். பனிக்காலமாக இல்லாதசமயத்தில் இரண்டுபடி கற்சுண்ணும்பை சலம் விட்டு குழம்புபதமாகக் கரைத்து ஒருஅகண்ட மட்சட்டியில் விட்டு அத

னிடையில் கீழே மூன்று கற்களை அடுப்புப் போலமைத்து அதன் பேரில் ஒரு கோப்பையைவைத்து அதனில் முன் சித்தப்படுத்திய வெடியுப்பு புளிச்சாம்பலைப்போட்டு, இப்பாண்டங்களில் காற்று நுழையாமலிருக்கத்தகுதியான ஒருமட்சாலுகொண்டு மூடிவைத்து விடச்சுண்ணும்பின் குளிர்ச்சிமேலேறி இடையில்வைத்துள்ள வெடியுப்பு புளிச்சாம்பலை நீராக்கும்; இதற்கே வெடியுப்பு புளிஜெயநீரென்பர்.

## 188. தாம்பிரமெழுகு

சன்னமாக அராவப்பட்ட 4-தோலாவெடை தாம்பிரப்பொடியையும் 4-தோலா எடைகெந்தகத் தூளையும் ஒருகோப்பையில் போட்டுச் சரக்குமூழ்க எலுமிச்சம்பழச்சாறு விட்டு இரவியில் உலர்த்தவும். பின்னர் கிருஷ்ணதுளசியிலைச்சாற்றை விட்டு உலர்த்தவும். இப்படி இவ்விரண்டு சாறுகளிலும் ஊறப்போட்டுள்ள சரக்குகள் உறவாகும் பொருட்டு நன்றாய்கிண்டிமுன்போல் குப்பைமேனிச் சாற்றைவிட்டு ரவியில் வைக்கவும். இங்ஙனம் ஊறப்பட்டுள்ள யாவற்றையும் சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்திலிட்டு அதனுடன் ¼-தோலாவெடை பச்சைகற்பூரம் சேர்த்து தேன்விட்டு நான்கு சாமம் அரைத்து மெழுகுபதத்தில் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—வேளைக்குத் துவரைபிரமாணம் தினம் இருவேளை 5-7-நாள் கொடுக்க சுரம், சூலை, பாண்டு, கீல்வாயு, குட்டம், பக்கவாதம், ஆனைக்கால், மேகப்பட்டை, திமிர்படை முதலிய ரோகங்கள் தீரும்.

**பத்தியம்:**—புளிதள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று.

## 189. தும்மட்டிக்காய்மெழுகு

மூன்றுபடி ஆவின்நீரை ஒருபழகின மட்கடத்தில் விட்டு அதனில் பஞ்சலவணம் வகைக்கு 1-பலம் வீதம் பொடித்துப் போட்டு அடுப்பிலேற்றிச் சுண்டக்காய்ச்சிச் சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்திலிட்டு 50-வரித்தும்மட்டிக்காயின் மேல்தோல் சீவியும் வித்தைநீக்கியும் பிழிந்தெடுத்த சாற்றைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு மெழுகுபதத்திலேயே அரைத்துப் பத்திரப்படுத்துக.

**பிரயோகம்:**—வேளைக்கு ½-சுண்டக்காய் பிரமாணம் தினம் ஒருபோது கொடுத்துவர மகோதரம், குன்மம் முதலிய ரோகங்கள் தீரும்.

### 190. தலைவலிக்கு மேல்பூசும்பத்து

சுக்கு, அபினி, பெருங்காயம் இவைகளை முலைப்பாலால் அரைத்து தலைவலிக்கு நெற்றியைச்சுற்றியும், காதுவலிக்குக் கன்னத்திலும், சயித்தியத்திற்கு இருகன்னம் தாள்முழுமையும் பூசி நெருப்பனலில் காட்டி உலர்த்த உடனே குணமாகும்.

### 191 வேறு

அபினி, கஸ்தூரிமஞ்சள், உளுந்து, சாம்பிராணி, கற்பூரம் இவைகளை முலைப்பாலால் அரைத்துத் தலைவலிக்கு நெற்றியைச் சுற்றியும், காதுவலிக்கு அப்பாரிசத்துக் கன்னத்திலும், சயித்தியத்திற்கு இருகன்னம் தாள்முழுமையும் பூசிச் சிறிது நெருப்பனல் காட்டி உலர்த்த உடனே குணமாகும்.

### 192. வேறு

மிளகு 1-தோலா, சாம்பிராணி ½-தோலா கடுகு ¼தோலா, புழுங்கையரிசி ¼-தோ, இவைகளை முலைப்பாலால் அரைத்து முன்போல் தலைவலி, தலைபாரம், சிரசிலுண்டான நீரேற்றம், காதுவலி, சயித்தியம் முதலியவற்றிற்குப்பூசி உலர்த்த குணமாகும்.

### 193. ஒத்தடம்

கருஞ்செம்பை இலையை ஆய்ந்து ஒரு சீலையில் பரப்பி அதன் பேரில் ஒரு செங்கல்துண்டை எரிகிற அடுப்பில் போட்டுச் சூடாக எடுத்து ஷை செம்மையிலையின் மத்தியில் வைத்து முடிச்சுக்கட்டி தாளக்கூடிய சூட்டில் ஒத்தடம் கொடுக்கத் தலைவலி, தலைபாரம் கன்னவீக்கம் முதலியவைகள் நிவர்த்தியாகும்.

### 194. இலவண அண்டம்

புதிதாக இடப்பட்ட 40-கோழிமுட்டைகளை அவித்து ஓட்டையும் சவ்வையும் நீக்கி ஒருவாயகண்ட மட்பாண்டத்தில் நான்கு படி உப்புத்தூளைப் போட்டு அதனிடையில் புதைத்து வைத்துமறு தினம் முதல் வேளைக்கு ஒரு முட்டைவீதம் தினம் இருவேளை உப்பை உதிர்த்துச் சாப்பிட்டு ஒருசாமம்கழிந்தபின் தண்ணீர்குடிக்கவும். இப்படி 20-நாள்சாப்பிட்டுவர பித்தவெறி பயித்தியமெல்லாந் தீரும்.

195. வாதரோகத்தினல் உண்டான வீக்கத்திற்குப் பத்து :

மைவாலக்கடி, ஆளிவிரை, சுக்கு இவைகளைச் சமனெடையாக வேண்டியான அளவு எடுத்து ஊரவைத்து அம்மியிலிட்டுப் பழச் சாற்ருல் அரைத்துக் குழம்புபதத்தில் ஒரு பழகினசட்டியில் வழித்துவிட்டு அடுப்பின்மீது வைத்துக் கொதிக்கவைத்து வீக்கத்தின் பேரில் பூசிவர மூன்றுநாளில் வீக்கம் வாங்கும்.

196. வேறு

பளிங்கு சாம்பிராணி, கற்பூரம், பெருங்காயம், மூசாம்பரம்கறுப்பு வளையல், புளியங்கொட்டைத் தோல் இவைகளைச் சமனெடையாக எடுத்துக்கொண்டு வீக்கத்தின்பேரில் நோய் அதிகரித்திருப்பின் எருக்கம்பாலினலும் நோய் இல்லாமல் வீக்கம்மாத்திரம்இருப்பின் முட்டைவெண்கருவினலும் அரைத்து வீக்கமுள்ள இடத்தில் பூசி 3-நாள்வரையினும் சுத்தப்படுத்தாமல் விட்டுவிடுக. மறுபடியும் வீக்கம் இருந்தால் மூன்போல் ஒருபத்து போடவும் இப்படி மூன்று பத்துப் போட எவ்வித வீக்கமாயினும் குணமாகும்.

197. தலைவலிக்கு மேல்பூசும்பத்து

உளுந்து, கொள்ளு, சிவனர்வேம்பு, கற்பூரம், அதிமதுரம், நெற்பொரி, சந்தனம், வசம்பு, கோஷ்டம், முத்தக்காசு, இலவங்கப்பட்டை ஆகிய இவைகளை யோர் நிறையாய்ப் பச்சரிசிக்கழுநீரில் அரைத்து ஒரு பழகின மட்கலசத்தில் வழித்து விட்டுக் கொதிக்க வைத்துத் தலைவலிக்கு நெற்றியைச்சுற்றியும், காதுவலிக்கு அப்பாரிசத்துக் கன்னத்திலும், சயித்தியத்திற்கு இருகன்னம் தாள் முழுமையும் பூசிச் சிறிது நெருப்பனல் காட்டி உலர்த்த உடனே குணமாகும்.

198. தலைவலிக்குப் புகை

கவிழ்தும்பை வேரை பஞ்சுபோல் நறுக்கி அவ்வெடைக்குக் கறிமஞ்சள் பொடியைக் கூட்டித் துணியில் பரப்பிச் சுருட்டி தீயிற் கொளுத்தி நாசியிற் புகைபிடிக்கத் தலைவலி, தலைபாரம், சிரசில் நீரேற்றம் முதலியவைகள்தீரும்.

199. வேறு

கருஞ்சீரகம், முட்டைத்தோல், கழற்சிப்பருப்பு, இவைகளைச் சமனெடையாகக் கல்வத்தில் போட்டு கொச்சிச்சாற்ரு லரைத்துத்

துணியிற் றடவித் திரியுருட்டிக் காயவைத்து தீயிற்கொளுத்தி நாசியிற் புகைபிடிக்க தலைவலி தலைபாரம், சிரசில் நீரேற்றம் முதலியவைகள் தீரும்.

### 200. வேறு

சுக்கு, திப்பிலி, மஞ்சள், மரமஞ்சள், சதகுப்பை, மிளகு, கற்பூரம் இவைகளை சமனெடையாகக் கல்வத்தில்போட்டுக் குன்றிமணிச் சாற்றால் நன்றாய் அரைத்துத் துணியிற் றடவி திரியுருட்டி தீயிற் கொளுத்தி நாசியிற்புகை பிடிக்க தலைபாரம், தலைவலி, சிரசிலுண்டான நீரேற்றம் முதலிய வைகள் தீரும்.

### 201. தும்மட்டிக்காய்மெழுகு

### வேறு

சரக்கு:—தும்மட்டிக்காய்ச்சாறு படி 1

(1) எலுமிச்சம்பழச்சாறு ,,
இஞ்சிச்சாறு ,,
நொச்சிச்சாறு ,,
வெள்ளுள்ளிச்சாறு ,,

| | |
|---|---|
| (2) கெந்தகம் | நவாச்சாரம் |
| சூதம் | மஞ்சள் |
| மனோசிலை | மரமஞ்சள் |
| காந்தம் | கோரைக்கிழங்கு |
| இலிங்கம் | நன்னாரி |
| பெரியலவங்கப்பட்டை | கடுக்காய் |
| சுக்கு | நெல்லிவத்தல் |
| திப்பிலி | தான்றிக்காய் |
| திப்பிலிமூலம் | நேர்வாளம் |
| செவ்வியம் | ஓமம் |
| சித்திரமூலம்வேர் | சீரகம் |
| ஏலம் | காட்டுசீரகம் |
| சன்னலவங்கப்பட்டை | கருஞ்சீரகம் |
| கிராம்பு | தைவேளைவேர் |
| சணம்புவிதை | அதிமதூரம் |
| வெங்காரம் | அமுக்கராக்கிழங்கு |
| | பிரப்பங்கிழங்கு |

செய்பாகம்:—இங்கு முதல் அங்கத்தில் கூறப்பட்ட 5-திரவங்களையும் ஒருபழகின மட்பாண்டத்தில் விட்டு அடுப்பிமேலேற்றிச் சிறுதீயாக எரித்து இரண்டாவது அங்கத்தில் கூறப்பட்டுள்ள முப்பத்து மூன்று சரக்களும் வகைக்கு வராகனெடை $1\frac{1}{2}$-ஆக எடுத்து கெந்தகம் முதலாக இலிங்கம் ஈறாக உள்ளச் சரக்குகளைக் கல்வத்தி விட்டு 2-சாமம் நன்றாய் உறவாகும்படி அரைத்தும் மற்றவைகளை நன்றாய் இடித்துச் சூரணித்தும் ஒருமிக்கக்கலந்து கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு மெழுகுபதம் கிளறி ஆறினபின் கல்வத்தில் மாற்றி மெழுகுபதம்வர அரைத்து பத்திரப் படுத்துக.

பிரயோகம்:—வேளைக்குச் சுண்டக்காய் பிரமாணம் சாப்பிட்டு வர மகோதரம், வாயுதிரட்சி, குன்மம் முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—பாலும் அன்னமும் தவிர வேறொன்று மாகாவாம்.

## 202. சித்திரமூலம் நெய்

காலைந்து வெள்ளெலியைக் கொண்டுவந்து வயிற்றை கத்திக் கொண்டுகீறி உள்ளுறுப்புகளை நீக்கிவைத்துக் கொள்க.

அப்பால் பச்சை சித்திரமூலம் வேர்பட்டையையும் அதற்குச் சமன்வெள்ளை வெங்காயத்தையும் நெகிழ அரைத்து முன்சித்தப் படுத்தியுள்ள எலிகளின் வயிற்றுக்குள் கொள்ளும்படியான அளவு செலுத்திப் பட்டுக்கயிற்றால்தைத்து அவைகளை ஒரு இரும்புவாணலில்போட்டு அடுப்பிமேலேற்றி 10-பலம் ஆவின்நெய், 10-பலம் எள்ளெண்ணெய், இவைகளை கலந்து விட்டுச் சிறுதீயாக எரித்துச் சிவந்து மிதக்கும் சமயத்தில் நெய்யை வடித்துப்பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு உச்சிக்கரண்டி வீதம் தினம் இருவேளை கொடுத்துவர ஆசனபவுத்திரம் லிங்கப்பவுத்திரம் முதலியவைகள் நிவர்த்தியாகும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக வைத்தல் சாலச் சிறந்தது.

குறிப்பு:—வெள்ளெலி என்பது பூமியின் கீழ் துவாரங்களைச் செய்துகொண்டு வசிப்பதென் றுணர்க.

: 203. வேறு

பச்சைசித்திரமூலம்வேர்பட்டை பலம்-2½ வெள்ளைவெங் காயம் பலம்-2½ இவையிரண்டையும் அம்மிக்கல்லிலிட்டு மெழுகு பதமாக அரைத்து வைத்துக்கொள்க.

ஒரு இரும்புவாணலியில் 5-பலம் ஆவின்நெய்யையும் 5-பலம் எள்ளெண்ணெயையும் விட்டு அதனில் முன் சித்தப்படுத்திய கல் கத்தைப் போட்டுக்கரைத்து அடுப்பிலேற்றிச் சிறுதீயாக எரித்து வண்டல் மெழுகுபதம் வரும் சமயம் வடித்துப் பத்திரப்படுத்துக.

பிரயோகம்:—வேளைக்கு உச்சிக் கறண்டிவீதம் தினம் இரு வேளை கொடுத்துவர வெள்ளை வெட்டை முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—புளிதள்ளி இச்சாபத்தியமாக வைத்தல் வேண்டும்.

வைத்திய சிந்தாமணி

முற்றுப்பெற்றது.

---

